ஸ்ரீ வேதாந்த தேசிகனின் தமிழ்ப் பிரபந்தங்களில்

# காணும் சமயமும் தத்துவமும்









Dr. E.S.V. நரஸிம்ஹாசார்யர், M.A., Ph.D.

First Edition : July 2004

Copies : 1000

Price : Rs.100

Copies Can be had from the Publisher :

**Dr. E.S.V. Narasimhacharyar,**
Asthana Vidhwan,
No1, Desikar Street,
Dasavathara Nagar, Srirangam
Trichy - 620 006
Ph : 2430166



This book is published with the financial assistance of Tirumala Tirupati Devasthanams under their Scheme "AID TO PUBLISH RELIGIOUS BOOKS"

Printed At :
**SRINIVAS COMPTRINTS**
25, Malligaipoo Agraharam
Srirangam, TIRUCHI - 620 006

ஸ்ரீ:

# ஸ்ரீ வேதாந்த தேசிகனின் தமிழ்ப் பிரபந்தங்களில் காணும் சமயமும் தத்துவமும்

இந்நூலாசிரியரின் முனைவர் பட்டத்திற்கான ஆராய்ச்சி கட்டுரையின் நூல் வடிவம்



ஸஹதர்மிணீ ஸௌ. கமலினீயுடன்


ஸ்ரீ உபய வே. **Dr. E.S.V. நரஸிம்ஹாசார்யர்**, M.A.,Ph.D.

பஞ்சாசார்ய பதாச்ரிதர். சொக்கனூர்(தஞ்சை)


இவர் பெற்ற பிருதங்கள் வ்யாகரண சிரோமணி, தமிழ் வித்வான், M.A., டாக்டர் பட்டங்களுடன், சதுர்பாஷாவிசாரத, சாஸ்த்ரபூஷண, வ்யாகரண வேதாந்த ரத்ன, வேதாந்த பாரங்கத, ஸ்ரீவைஷ்ணவ வித்யா நிதி, அபிநவ பாணிநி முதலியவை பல.
இவர் இயற்றியும், வெளியிட்டுமுள்ள க்ரந்தங்கள் பல பல.
இவர் அஹோபிலமடம் ஆஸ்தான வித்வான்.


2003



ஸ்ரீமதழகியசிங்கர் - 41ம் பட்டம்
அடியேனுக்கும், பிதாவிற்கும்
ஸமாச்ரயணம் செய்தருளிய ஆசார்யர்



ஸ்ரீமதழகியசிங்கர் - 42ம் பட்டம்
க்ரந்த சதுஷ்டய காலக்ஷேபம்
அருளி முதல் கோஷ்டியில்
கடாக்ஷித்தருளியவர்



ஸ்ரீமதழகியசிங்கர் - 43ம் பட்டம்
அடியேன் தகப்பனுருடன் காலக்ஷேபம்
செய்தும் அவரை அந்தரங்கராக
ஸ்ரீமுக கைங்கர்யத்தில் நியமித்து
அடியேனுக்கு ஆத்ம பர
பலஸமர்ப்பணம் செய்தருளியவர்.



ஸ்ரீமதழகியசிங்கர் - 44ம் பட்டம்
அடியேனை ஆஸ்தான வித்வானுய்
நியமித்தும் - பல க்ரந்தங்களை
இயற்றவும் வெளியிடவும் பல
விதத்திலும் உபகரித்த மஹான்.



ஸ்ரீவண்சடகோப ஸ்ரீ லக்ஷ்மீந்ருஸிம்ஹ திவ்யபாதுகா ஸேவக
ஸ்ரீ நாராயண யதீந்த்ர மஹாதேசிகன் நிக்ரஹானுக்ரஹ -
அஸாத்ய ஸாதனங்களில் விச்வாமித்ர முனிவரை யொத்தவர்.
இவரது த்ரிதண்ட மஹிமையை "தாடீ பஞ்சகம்" ஓரிரு
ச்லோகங்களில் விளக்குகிறது அவற்றில் ஒன்று

"பாஷண்ட ஷண்டகிரி கண்டன வஜ்ர தண்டா:
ப்ரச்சன்ன பௌத்த மகராலய மந்த தண்டா: ।
வேதாந்த ஸார ஸுக தர்சன தீபதண்டா:
ராமானுஜஸ்ய விலஸந்தி முனே: த்ரிதண்டா: ॥"

இவ்வாறு நிறைய தண்ட (சப்த) ப்ரயோகத்தால் கவிர் தண்டீ - 3 என்று தண்டி கவியின் பெருமை பேசப்பட்டது. இந்த த்ரிதண்டத்தின் மஹிமை அபாரம். என் பல க்ரந்தந்தங்களுக்கும் இந்த ஸ்வாமீ ஸ்ரீமுகம் அருளியவர்.



ஜ்ஞான அனுஷ்டான சம தமாதி ஆத்ம
குணங்கள் நிரம்பப் பெற்றவருமான

**பௌண்டரீகபுர ஆச்ரமம் ஆண்டவன்**
**ஸ்ரீ கோபால தேசிக மஹாதேசிகன்**



பலவிதங்களில் உபகரித்தருளிய

**ஸ்ரீமுஷ்ணம் ஸ்ரீமதாண்டவன்**

**ஸ்ரீரங்கராமாநுஜ யதீந்த்ர மஹாதேசிகன்**

ஸ்ரீரங்கம் ஸ்ரீமதாண்டவன் ஆச்ரமம்

**டாக்டர் கோ.விசயவேணுகோபால்**
இணைப் பேராசிரியர்
தமிழியல் துறை
மதுரை காமராசர் பல்கலைக் கழகம்

மதுரை-21
31.08.84

## மேற்பார்வையாளர் சான்றிதழ்

**ஸ்ரீவேதாந்த தேசிகரின் தமிழ்ப் பிரபந்தங்களில் காணும் சமயமும்-தத்துவமும்** என்னும் தலைப்பில் **திரு.எஸ்.வி.நரசிம்மாச்சாரியார்** அவர்கள் செய்த இவ்வாய்வு மதுரை காமராசர் பல்கலைக் கழக பி.எச்டி. பட்டத்திற்காக ஆய்வாளரால் தன்னியலாகச் செய்யப்பட்டது என்றும், இவ்வாய்விற்காக ஆய்வாளருக்கு வேறு எந்தப்பட்டமும் இதுவரை அளிக்கப்படவில்லை என்றும் சான்று அளிக்கிறேன்.

**(கோ.விசயவேணுகோபால்)**

---

## ஸ்ரீவேதாந்த தேசிகனுரின் தமிழ்ப் பிரபந்தங்களின் சாரம்

### நன்றியுரை

இவ்வாய்வேட்டினைத் தக்கவாறு குறுகிய காலத்தில் பல்கலைக் கழகத்தில் சமர்ப்பிக்கத் தேவையான அறிவுரைகளையும் உதவிகளையும் நல்கியருளிய பேராசிரியர் டாக்டர் உயர்திரு. கோ.விஜயவேணுகோபால், எம்.ஏ., பி.எச்டி., அவர்களுக்கு என்றென்றும் கடப்பாடுடையேன்.

தக்க நேரத்தில், தக்கவாறு பல பல திருத்தங்களையும் அறிவுரைகளையும் நல்கிய பேராசிரியர் டாக்டர் திரு. சு,வேங்கடராமன், எம்.ஏ., பி.எச்டி., அவர்கட்கு ஆசிகளுடன் நன்றியினைத் தெரிவித்துக் கொள்கின்றேன்.

**ஈ.எஸ்.வி.நரசிம்மாச்சார்யர்**
**(எஸ்.வி.நரசிம்மன்)**

# பூமிகை

ஸ்ரீவைஷ்ணவ சமுதாயத்தினர் யாரும் ஸ்ரீதேசிகனின் அருமை பெருமைகளையும், புலமை, ஆத்மகுணம் இவற்றையும் அறியாமல் இருத்தலாகாது. இதற்கு எத்தனை நூல்கள் வெளிவந்தாலும் போதா. ஒவ்வொருவர் ஒவ்வோர் கோணத்தில் ஆய்ந்து ஸ்ரீதேசிகனின் அனுபவங்களை உலகத்தார் சுவைக்க விருந்தாக அளிக்கலாம். ஸர்வ தந்த்ரங்களில் ஸ்வதந்த்ரராய் கவியாயும் கவிதார்க்கிகராயும் எதிரிகளான கவி தார்க்கிகர்கள் என்ற யானைகளின் மதத்தை ஒடுக்கும் கேஸரியாக (சிங்கமாக) எழுந்தருளியிருந்த மஹாசார்யன். உலகெலாம் உய்ய தஞ்சமே (சரணாகதியே) பரகதிக்கான உபாயம் என்பதை நிலை நாட்டிய உத்தம அவதார புருஷர்.

இந்த தேசிகனின் நூல்களில் ஒரொன்றை அறிவதாலேயே வானேறப் போமளவும் நல்வாழ்வினைப் பெறலாம். என்று "சீரொன்று தூப்புல்" எனத் தொடங்கும் காப்புப் பாடல் விளக்கிறது. ஆதலின், ஸ்வாமி தேசிகன் மணிப்ரவாள நடையிலும், தனித் தமிழிலும் அருளியுள்ள ஸ்ரீமத் ரஹஸ்ய த்ரய ஸாரம், தேசிகப் ப்ரபந்தம், சில்லரை ரஹஸ்யங்கள் முதலியவற்றின் ஸாரமான பொருளைச் சுருக்கி இந்நூலில் தந்துள்ளேன். கவிதைநயம், உவமைநயம் முதலியவற்றையும் காட்டி பற்பல செய்திகளையும் ஒருங்கே சேர்த்து இந்நூலில் தந்திருப்பதால் பல நூல்களையும் இதிலேயே வாசகர்கள் அறிந்து இன்புறலாம்.

எல்லாவற்றிற்கும் முதலில் பால்யாத் ப்ரப்ருதி ஸுஸ்னிக்தரான ஸுஹ்ருத்தாய், பணத்தை மட்டும் குறியாகக் கொள்ளாமல், சிஷ்யவர்க்கங்களை 'ஸ்காலித்யே சாஸிதாரம்' என்றபடி திருத்திப் பணி கொள்பவருமாய் ஜ்ஞான அனுஷ்டான சம தமாதி ஆத்ம குணங்கள் நிரம்பப் பெற்றவருமான பௌண்டரீகபுர ஆச்ரமம் ஆண்டவன் ஸ்ரீ கோபால தேசிக மஹாதேசிகன் தன் அசக்தியையும் பொருட்படுத்தாமல் ஸ்ரீமுகம் அழகாய்ப் பிரஸாதித்-

தருளியிருக்கிறுர். அந்த யதிவரரான ஸ்ரீமதாண்டவனுக்கு ப்ரணமங்களைத் தவிர அடியேன் என்ன கைம்மாறு செய்ய வல்லேன்?

இந்நூலை வெளியிடப் பொருளுதவி செய்தவர்களின் பெயர்களை க்ருதஜ்ஞதையுடன் குறிப்பிடுகிறேன்.

ரூபாய்கள்

1. ஸ்ரீரங்கம் (ஸ்ரீமுஷ்ணம்) ஸ்ரீமதாண்டவன் 3000/=
2. ஸ்ரீ உ.வே. G.ரங்கராஜன் - லண்டன் 5000/=
3. ஸ்ரீ உ.வே. S.V.S.ராகவன், சென்னை 5000/=
4. ஸ்ரீ உ.வே. K.P.சாரதி, Unbarn-TAComa, U.S.A.. 1800/=
5. வடுவூர் ஆராதகர் V.R.லஷ்மீநரஸிம்ஹாசார்யர் 1000/=
6. ஸ்ரீமதி கமலா ஸ்ரீநிவாஸன் & ஸ்ரீசுந்தர்ராஜன், திருச்சி. 1000/=
7. ஸ்ரீ உ.வே. K.பராசரன், M.A., B.L., (முன்னுல் அட்டர்னி ஜெனரல், புது டில்லி) 1000/=
8. ஸ்ரீ உ.வே. P.C.ராமச்சந்திரன், செம்பூர், மும்பை 500/=
9. ஸ்ரீ உ.வே. V.N.கோபால தேசிகன், லஸ் சர்ச் ரோடு, சென்னை - 4. 500/=
10. ஸ்ரீ உ.வே. நரஸிம்ஹாசாரியார், ஆராதகர்-தேசிகர் ஸந்நிதி, மதுரை. 200/=
11. பேராசிரியை ஹேமாம்புஜம், ஸ்ரீரங்கம் 2000/=
12. ஸ்ரீ R.வராஹ ஸ்வாமி, R.A. புரம், சென்னை 500/=
13. ஸ்ரீ வேணுகோபால சாஸ்திரி, எர்ணுகுளம் 500/=

ஆக வரவு ரூ. 22,000/=

மற்றும் பலர் பின்னுல் நன்கொடை கொடுக்கக்கூடும்.

சிறப்பாக இந்த நூலை வெளியிட பரம ஸுஹ்ருத்தான வடுவூர் ஸ்வாமி மடத்தின் ஆராதகர் ஸ்ரீ உ.வே. லக்ஷ்மீ நரஸிம்ஹாசார்யர் உபகாரத்தையும்,

தேவையான வெள்ளைத்தாளை சமயத்தில் கொடுத்து உதவிய சென்னை சாயி பேப்பர் கம்பெனியின் உரிமையாளரான ஸ்ரீ ஸம்பத்தையும் மறக்க என்றும் இயலாது. அவர்களுக்கு உள்ளம் மகிழ்ந்து க்ருதஜ்ஞதையைத் தெரிவித்துக் கொள்கிறேன். இத்துடன் இதனைப் பல வேலைகளுக்கு இடையேயும் குறித்த காலத்திற்குள் அச்சிட்டுத் தந்து உதவிய ஸ்ரீநிவாஸ் காம்ப்ரிண்ட்ஸ் சிர. ஸ்ரீகாந்திற்கும், அவரது தந்தை ஸ்ரீகண்ணனுக்கும் பாராட்டுக்களைத் தெரிவிப்பதுடன் எம்பெருமான் ஸகல ஸௌபாக்யங்களையும் அருள வேண்டுமென்று ஆசி கூறுகிறேன்.

இந்த நூலில் ஒரே கருத்து பல முறை திரும்பத் திரும்ப வரும். அவை மயக்கம் தரும். ஆனால் தேசிகனின் பல பிரபந்தங்களின் ஸாரம் என்பதால் தவிர்க்க முடியாமல் சேர்ந்துள்ளன. பிழைகள் அடியேனுக்கே உரியவை. சில நல்ல விஷயங்கள் காணப்பட்டால் அவை ஆசார்யர்களின் அருளாகும். இந்நூலின் முக்கியக் குறிக்கோள் ஒன்றேயொன்று தான். "தஞ்சப்பெருங்கதியைத் தந்தருள்வோன் வாழியே" என்றும் "கலியனுரை குடி கொண்ட கருத்துடையோன் வாழியே" என்றும் வாழித்திருநாமத்தின் கருத்தையடியொற்றி ஸ்வாமி தேசிகன் தம் எந்தப்பிரபந்தத்திலும் தஞ்சப்பரகதியை-சரணாகதி சாஸ்திரத்தையே விளக்கியருளியுள்ளார் என்பதை விளக்குவதேயாகும். மற்றவை பின்னால் கடாக்ஷித்தருளவேண்டியவை.

அடியார்க்கடியவன்,

ஸ்வபானு ஹூ
ஐப்பசி திருவோணம்.

சொக்கனூர் **நரசிம்மாசார்யன்**
ஆஸ்தான வித்வான்

# உள்ளடக்கம்

# முகவுரை

## 1.1 ஆய்வின் நோக்கம்

உலகின் முழுமுதற் காரணமாயப் போற்றப்படும் திரு நாராயணனையேயிறைவனுயேற்று வழிபடும் சமயமே வைணவம் எனப்படுகிறது. இச்சமயத்தைப் பரப்பிய ஆசார்யர்களில் வரிசையை திருநாரணன் திருமகள், சேனைமுதலியார் (விஷ்வக்சேனர்), நம்மாழ்வார் தொடங்கி யின்றளவும் விளங்கும் ஆசார்யர்களீருக வைணவர்கள் தினமும் போற்றி வழிபடுகின்றனர். இதனுல் இச்சமயத்தின் தொன்மை புலப்படுகிறது.

ஒவ்வோர் சமயத்திற்கும் ஓர் ஆதி கால வரலாற்றைக் சுட்டிக்காட்ட நம்மால் இயலும். ஆனுல், திருநாரணனே பரமகுருவாகத் தோன்றியருளிய நூல்களும் அவரைப் பின்பற்றி ஓராண் ஓர் வழியாக அவ்வரிசையில் தோன்றிய ஆசார்யச் செம்மல்கள் பரம கருணையுடன் அவ்வப்போது அருளிய ஏராளமான நூல்களும் இச்சமயத்தைத் தாங்கி நிற்கின்றன. மாமுனிவர்களான, வேதவ்யாஸர், பராசரர், சுகர், வால்மீகி போன்றவர்களின் புராணங்களும், இதிகாச நூல்களும் இச்சமயத்தை வளம் பெறச் செய்துள்ளன.

இவ்விதம் ஒருபுறம் வைணவ சமயம் தன்னிகரற்று விளங்கிய போதும் இதற்கு ஆதாரச்சான்ருய் அமைந்த வேதங்களிலும், புராண இதிகாசாதி நூல்களிலும் சிறந்து மிளிரும் கருத்துக்களை உள்ளவாறு உணரகில்லாத பலரும், அவ்வப்போது தம் மயக்கத்திஞல் அந்நூற்பொருட்களைத் திரித்துக் கூறியும், சில பகுதிகளை

விட்டும், கசடான பொருட்களையே நலன் தருவனவாக ஏற்றும் பல நூல்கள் வாயிலாகப் பல சமயங்களை நிறுவினர். அவர்களில் சிலர் இறைவனேயில்லை யென்பர். சிலர், உலகெல்லாம் கணம் தோறும் தோன்றியழிவனவென்பர். உலகெல்லாம் மாயை, இறைவன் ஒருவனே உண்மைப்பொருள் என்பார் சிலர். இவ்வாறு நமது பாரத நாட்டின் உயிரான வேத நூல் முதலியவற்றைப் புறக்கணித்தும், ஏற்றும், ஏற்ற நூலிலே தத்தம் விருப்பத்திற்கேற்ப, தவருன கருத்துக்களைத் திணித்தும் பல சமயங்களையும் பலரும் தத்தம் சமயங்களுக்குச் சான்ருகக் காட்டிப் பரப்பலாயினர்.

இவ்வாறு சமணம், புத்த மதம் போன்றவையும், பின் வேதநூல்களைப் பின்பற்றிய அத்வைதம், விசிஷ்டாத்வைதம், த்வைதம் என்ற தத்துவ வழிகளும் தோன்றிப் பெருகின. இந்த வைதிக தத்துவ வழி நூல்களிலும் கருத்து வேறுபாடுகள் இறை நம்பிக்கை கொண்ட ஆத்திகப் பெருமக்களை மூன்று பெரும்பிரிவுகளாக ஆக்கி விட்டன. இவற்றுள் ஆதிசங்கரர் அமைத்துத் தந்த அத்வைத வழியொன்று, இராமானுசர் காட்டிய விசிஷ்டாத்வைத வழியொன்று. மத்வாசாரியர் காட்டிய த்வைதம் ஒன்று.

இம்மூன்றினிடையே குறைந்த கருத்தொற்றுமையுடன், விரிவான வேறுபாடுகள் வெளிப்படையானவை. ஆனல் பின்னவையிரண்டும் மிகுந்த வேறுபாடுகளைக் கொண்டிராமல் அதிக நெருக்கம் கொண்டும்

மிளிர்கின்றன. அத்வைதமோ, பிற இரண்டினையும் விட மிக்க வேறுபாடு கொண்ட வழியாகும்.

இராமானுசர் இற்றைக்குச் சுமார் 962 ஆண்டுகட்கு முன்பு ஸ்ரீபெரும்பூதூரிலே தோன்றி நூற்றுக்கும் மேலான ஆண்டுகள் முனிவராய் முக்கோற்பகவராய் விளங்கி இந்த விசிஷ்டாத்வைதம் எனும் கோட்பாட்டைத் தம் ஒன்பது இரத்தினம் போன்ற நூல்கள் வாயிலாக நிறுவினர். பிற சமயங்களெனும் வாதக் கதலிகளை (வாழை மரங்களை) மாய்த்த யானையாக அவர் போற்றிப்பாடப்படுகிறார். நாத முனிகள், ஆளவந்தார் போன்றோர் காட்டிய வழியிலே தம் புதிய நூல்களையமைத்து விசிஷ்டாத்வைத தத்துவங்களை நிலைநாட்டினர். ஒவ்வோர் மதத்தினரும் உயர்நிலை பெறுவதற்காகக் காட்டிய வழிவகை, உண்மை நிலைகளைத் தத்வம் என்போம். அந்தந்த தத்துவத்திற்கேற்ப, தம்மினத்தவர் அன்றாடம் பின்பற்ற வேண்டிய ஒழுக்க நெறி போன்றவற்றை விளக்குவது சமயம் என்பது பொருந்தும். 'விசிஷ்டாத்வைதம்' என்பது தத்வங்களை விளக்கும் ஓர் கோட்பாடு. அதனைப் பின்பற்றுவோரின் சமயம் வைணவம் எனப்படும். சில நேரங்களில் தத்துவத்தையும், சமயத்தையும் பிரித்துப் பார்க்க முடியாத அளவிற்கு ஒன்றோடொன்று அவையிணங்கி நிற்கக் காணலாம். இவற்றின் வேறுபாட்டை நுணுகியே யறியலாம். தம் தத்துவத்தையும், சமயத்தையும் ஒன்றாகவே யெண்ணுமளவிற்கு இரண்டும் நெருங்கிய தொடர்புடையவை. இந்த தத்துவத்தையும், வைணவ சமயத்தையும், இராமானுசருக்குப் பின்னால், உலகிற்கு விளக்குவதற்கே தோன்றிய ஸ்ரீவேதாந்த

தேசிகனுர் இயற்றிய நூல்களோ நூற்றுக்கும் மேலானவை. அவற்றுள் வடமொழியிலும் செந்தமிழிலும்,பிராக்ருத மொழியிலும், இருமொழிக்கலவையான மணிபவள நடையிலும் மிகுந்த புலமையுடன் தேசிகனுர் அருளியுள்ள கருத்துக்களோ இறைவனின் திருக்குணங்களைப் போல் எண்ணிறந்தவை. கடல் போன்ற அந்நூல்களில் கருத்துக்களைத் தொகுத்துத் திரட்டித் தருவதே இந்த ஆய்வின் முதல் நோக்கம். அக்கருத்துக்களில் ஓரொன்றில் ஈடுபட்டே வியந்து போற்றி மெய்ம்மறந்திடுவார் ஆன்றோர்கள். அதுபற்றியே தேசிகனுர் பற்றிய தனியனுக,

*"சீரொன்று தூப்புல் திருவேங்கட முடையான்*
*பாரொன்றச் சொன்ன பழமொழியுள்-ஓரொன்று*
*தானேயமையாதோ தாரணியில் வாழ்வார்க்கு*
*வானேறப் போமளவும் வாழ்வு"*

என்று பிள்ளை லோகாசார்யர் போற்றிப்பாடினர் எனப்ர்.

முந்தைய ஆசார்யர்கள் பெரிதும் விளக்கிய பெரும் தத்துவங்களையும், சமயங்களையும் தமக்கேயுரிய முறையில், பிறர் மதங்களைக் கண்டித்து நிலைநாட்டி 'தேசிக தர்சனம்' என்ற பெயரிலே புது மெருகூட்டி வழிவகுத்த பாங்கை இவ்வாய்வில் காட்டலே புதிய தொண்டு. வடமொழி நூல்களில் வழிவகைகளைக் கண்டும் காட்டியவரும் பலருண்டு. அவற்றிற்கியையத் தமிழ்ப்பிரபந்தங்களிலே ஆய்ந்து முடிவு கண்டவர் இவரென்பதால் அக்குறையை யகற்றி யீண்டு புதிய கோட்பாடுகளைக் காட்ட முயற்சி மேற்கொள்ளப்படுகிறது.

## 1.2 ஆய்வின் பரப்பு

பொய்கைமுனி பூதத்தார் பேயாழ்வார் முதலிய ஆழ்வார் பதின்மரும் மகிழ்ந்து பாடும்.

'செய்யதமிழ் மாலைகள் நாம் தெளியவோதித்
தெளியாத மறை நிலங்கள் தெளிகின்றோமே'

என்று தம் கருத்தை வெளிப்படுத்தித் தேசிகனார் தம் 'அதிகாரசங்கிரகம்' எனும் நூலைத் தொடங்கினார். யாரும் எளிதில் புரிந்து கொள்ளவியலாத மறை பொருட்களைக் கொண்டவை வட மறைகள். அவற்றின் ஆழ் பொருட்களை எளிதில் நாம் அறிய வழிகாட்டும் கலங்கரை விளக்கமானவை ஆழ்வார் பதின்மரின் செய்ய தமிழ் மாலைகள். மறைவழி கரடு முரடானது. பாமரர்களால் எளிதில் கடக்கவியலாதது. ஆழ்வார்களின் ஈரச் செந்தமிழ் வழியே ஐயமும் திரிபுமற நேர்மையாய் அடியார்கட்குப் பயன்படுவது. அவற்றை நன்கு ஓதியதால் தெளியாத மறை நிலங்கள் ஞானக் கண்ணிற்குத் தெளிவாகப் புலப்படுகின்றன. அவற்றால் நாம் உய்ய வழி பெறுகின்றோம் எனத் தொடங்குகின்றார்.

இவ்வாறு செய்யதமிழ் மாலைகளாம் திவ்வியப் பிரபந்தங்களில் இழிந்து தாமும் செந்தமிழ் மாலைகளாக தேசிகப் பிரபந்தங்கள் எனும் கோவையை யமைத்து சமயத்தையும், தத்துவங்களையும் கவினுறக் காட்டியருளியுள்ளார். இத்தகைய தமிழ்ப் பிரபந்தங்களையே இவ்வாய்வின் முழுப்பரப்பிலே மூலச்சான்றாகக் காணலாம். மற்றைய மொழிகளில் தேசிகனார் அருளிய கருத்துக்களும் இயைபு கருதிக் காட்டப்படலாம். ஆக

இனிவருமியல்கள் அன்னாரின் நூல்களையே சார்ந்த ஆய்வாய் அமையும்.

### 1.3 எல்லையின் வரையறை:-

நாட்டிற்கு எல்லையுண்டு. ஏட்டிற்கும் எல்லையுண்டு. இந்த சமயத்திலே சிறப்பாகப் போற்றப்படும் 'சரணாகதி'யெனும் உபாயத்திற்கு சாதி, சமயம், ஆசிரமங்கள் போன்ற ஓர் கட்டுப்பாடாம் எல்லைக் கோடுமில்லையாம். அதனையே தேசிகனார்,

"*அந்தணர் அந்தியரெல்லையில் நின்ற*
*அனைத்துலகம் நொந்தவரே முதலாக*
. . . . . . . . . . . . . . . . . . . .
*வந்தடையும் வகை வண்தகவு*"

என்று எல்லா மக்களும் இறைவனைச் சரணடையலாம் என்று ஏற்கும் அவனது அரிய கருணை பற்றிக் குறிப்பிடுகிறார். இத்தகைய பெருங் கருணையைப் பெறும் உபாயங்களை எளிதில் காட்டும் தேசிகனாரில் தமிழ்ப்பிரபந்தங்களையே பிரதான எல்லையாகக் கொள்ளும் இவ்வாய்வு. அவற்றுடன் இயைபுள்ள பிற நூல்களை மேற்கோளுக்காக மட்டும் கையாளும் எல்லைக்கட்டுப்பாட்டுள் அடங்கும்.

### ஆ.சிரியர் கையாண்டுள்ள யாப்புகளும், அணிகளும்

தேசிகப் பிரபந்தம் ஒன்றை ஆராயின் ஆசிரியர் கருத்துக்களுக்கேற்பப் பல்வேறு பாக்களையும் விருத்தங்களையும் கையாண்டுள்ள புலமைத் திறனைச் சுவைத்திடலாம். கருத்துக்களின் மிகுதியையும்

தொடர்புவிடாமல் விளக்க வேண்டுமாயின் அதற்குக் கை கொடுப்பது கலிப்பாவாகும். அது கருதியே சான்றோரும், கற்றவர்களேற்றும் கலி எனப்பாடினர். இவ்வகையில் இப்பிரபந்தத்திலே கொச்சகக்கலிப்பாவாக 23 பாடல்களும் கட்டளைக் கலித்துறையாக 185 பாடல்களும், கலிவிருத்தமாக 11 பாடல்களுமாக 219 பாடல்கள் உள்ளன. நூல் முழுவதுமுள்ள 405 பாடல்களும் இவ்வகைப்பாடல்களே முதன்மை பெற்றமை தெளிவு.

அடுத்தாற்போல கற்றோரும், மற்றோரும் எளிதில் கருத்துக்களை யுணரத்தக்கவாறு கோவைப்படுத்தப்படும் பாடல் ஆசிரியப்பா வகையினதாகும். இவ்வகையிலமைந்த பாடல்கள் 168 ஆகும். அவற்றுள் மிகுதியாக எண்சீரா சிரிய விருத்தமே 133 பாடல்களாயமைந்துள்ளன. இதனைத்தவிர, நிலைமண்டிலம், நேரிசை, அறுசீராசிரிய விருத்தம், அறுசீராசிரியச்சந்தவிருத்தம், எழுசீர், எண்சீர், பன்னிரண்டு சீர் பதின்மூன்று சீர், பதினான்கு சீர், பதினாறு சீர் ஆசிரிய விருத்தங்களுடன் இருபத்தெண்சீர் ஆசிரியவிருத்தம் இரண்டு ஆக 168 பாடல்கள் மிளிர்கின்றன.

வெண்பா மிகக்குறைவாகவே இவ்வாசிரியரால் கையாளப்படுகின்றது. காரணம் பாடலின் அளவு மிகுந்த கருத்துக்களை விளக்கப் போதியதாகாமையே. அதனாற்றான், குறள் வெண்பாவில் இரண்டும், செந்துறை (வெண்டுறை) ஒன்றும், நேரிசை வெண்பா பதினைந்துமாக 18 பாடல்களே வெண்பாவாக இடம் பெற்றுள்ளன.

அணிகலன்களாக பிரபந்தத்தில் ஆங்காங்கு உவமையணி, உருவகம், தற்குறிப்பேற்றம் முதலியன இடம் பெற்று மிளிர்கின்றன. தத்துவங்களையும், சமய சம்பிரதாயங்களையும் துதிகளையும், தலவரலாறுகளையும் விளக்குவன பல. அவற்றுடன் ரஹஸ்ய நூல்கள் என்னும் மறைப்பொருட்களஞ்சியங்கள் பலவுமுள்ளன. இவை சமயத்தின் அச்சாணி போன்றவை. ஒழுக்கம் பற்றிப் போதிக்கவல்ல நூல்களும் சமயத்திற்கு உறுதுணையாயமைகின்றன. நல்லொழுக்கமெனப்படும் சதாசாரமே ஒவ்வோர் சமயத்திற்கும் ஆணிவேராகும். இவ்வகையில் தனித்தமிழிலே அமைந்தனவும், மணிபவள நடையில் மிளிர்பவையுமான பிரபந்தங்களும், ரஹஸ்யங்களும் தத்துவம், ஹிதம், புருஷார்த்தம் (வே) என்பவற்றை விளக்கக் காண்கிறோம்.ஆங்காங்கு வேதம், உபநிடதக் கருத்துக்களைச் சார்ந்தவற்றினை (வே) என்ற அடைப்புக் கோட்டிற்குள் குறிப்பதால் பிற செய்திகள் புராணம், இதிஹாஸங்கள் மிருதிகள் ஆழ்வார்களின் அருளிச் செயல்களைச் சார்ந்தவையென்று பிரித்தறிய வசதியாகும். தத்துவம் சார்ந்த கருத்துக்களைத் தலைப்பில் தத்துவம் என்று குறிப்பிடுவதால் மற்றவற்றைச்சமயமும், பிறவும் எனக் கொள்ளலாம்.

## 1.4 ஆய்வு நூலின் உள்ளே

இந்த ஆய்வேடு 6 இயல்களாகப் பகுக்கப்படுகிறது. முதலில் முகவுரையாக ஆய்வின் நோக்கம், பரப்பு, வரையரை நூலின் உள்ளேயுள்ள கருத்துக்கள் என்பன காட்டப்படுகின்றன.

இரண்டாவது இயலில் தேசிகரின் வாழ்க்கைக் குறிப்பும்,
மூன்றாவதில் அவர் அருளிய பிரபந்தங்கள் பற்றியும்,
நான்காவதில் வீடுபேற்றிற்கான வழிகளில் ப்ரபத்தியின் மேன்மைபற்றியும்,
ஐந்தாவதில் விசிஷ்டாத்வைத தத்துவங்கள், பஞ்சபூத உற்பத்தி, முக்திபெறும் முறை பற்றியும்,
ஆறாவதில் நாயக நாயகி பாவம், சமயச் சிறப்புக் கோட்பாடு, இரு நியாயங்கள் தேசிகனின் உவமை நயம் என்பனவும் விளக்கப்படுகின்றன.
பின் அனுபந்தத்திலே,
தேசிகனின் ஜாதகம் பற்றிய ஓர் ஆராய்ச்சி உள்ளது.



# இயல் 2
# தேசிகரின் வாழ்க்கைக் குறிப்பு
## காப்பு

*"சீரொன்று தூப்புல் திருவேங்கடமுடையான்*
*பாரொன்றச் சொன்ன பழமொழியுள்--ஓரொன்று*
*தானேயமையாதோ தாரணியில் வாழ்வார்க்கு*
*வானேறப் போமளவும் வாழ்வு. (ஓர் சிறந்த*
*வைணவ ஆசார்யர்)" பிள்ளை லோகாசார்யர்*
*என்று கூறுவர்.*

**நூலாசிரியரின் வரலாற்றினது இன்றியமையாமை:**

ஒவ்வோர் நூலைப் பற்றியும் ஆய்வதற்குப் புகும் முன்னர், அந்நூலாசிரியர் வாழ்க்கை வரலாற்றையறிதல் சாலவும் பயன் தருவதாகும். ஆசிரியரின் காலம், கொள்கை, இயற்றிய நூல்கள், வாழ்க்கையில் மேற்கொண்ட பழக்க வழக்கங்கள், இந்நூலையியற்றிய நோக்கம் இவைபற்றிச் செவ்விதேயுணர்ந்தாலே, அந்நூல்கற்போர்க்கு மிகுந்த சுவையைப்பயக்கும். இதுபற்றியே ஒவ்வோர் நூலின் தொடக்கத்திலும், ஆசிரியரின் வரலாறு விளக்கப்படுவது வேண்டற்பாலது.

ஆராய்ச்சித் துறையில் இழிவோர்க்கு இச்செய்திகள் மிகவும் தேவையானவை. இதுபற்றியே வேதாந்த தேசிகனாரின் வாழ்க்கை வரலாற்றினை முதலில் காட்ட வேண்டியுள்ளது. இவரது வாழ்க்கை, பல் அரிய சாதனைகளையும் கொண்டதாதலின், இவர் ஓர் அவதார புருடர் என்று போற்றப்படுகின்றமையால், வைணவ

சமயத்தினருள் தலைசிறந்த சமயாசார்யரான இவர் இயற்றிய பிரபந்தங்கள். காட்டும் ஆழ்ந்த கருத்துக்களைக் காணும் முன்னர், அக்காலத்திய நாட்டின் சூழ்நிலைகளையும் உணர வேண்டியுள்ளது. அதனைக் கருதியே, வைணவ குரு பரம்பரைமுதலிய நூல்களினடிப்படையில் வரலாற்றுச் சுருக்கம் ஈண்டு தரப்படுகிறது. அவர் அரும்பெருஞ் செயல்கள் பலவற்றையும் ஆற்றியவரெனப் பல வழிவழியான நூல்கள் இயம்புகின்றன. அவற்றிற்கு அகப்புறச் சான்றுகளும் பல உள்ளமை பற்றிச் சிறிது ஈண்டு சுட்டிக்காட்டபட நேரிடுகிறது.

நகரங்களில் சிறந்தது 'காஞ்சி' என்பர் முதறிஞர். இறையருளும் பொருள் மிகுதியும், இயற்கை வனப்பும், வளமும் வாய்ந்த காஞ்சியம்பதியிலே 'திருத்தண்கா" என்ற விளக்கொளியெம்பெருமானின் கோயிலருகில் 'தூப்புல்' என்று ஓர் சிறந்த பகுதியுள்ளது. ஆங்கு விச்வாமித்திர வம்சத்தவரான "புண்டரீகாக்ஷ ஸோமயாஜி" என்ற பெரியார் வைதிக வைணவ நெறி தவறுது, பல வேள்விகள் செய்து புகழுடன் விளங்கினார்.

அவருடைய புதல்வர் 'அனந்த சூரி' என்பார் தம் மனைவியான தோதாத்ரியம்மையாருடன், புதல்வர்ப்பேறு வேண்டி, திருமலையில் திருவேங்கடவனை வழிபட்டு நின்றார். ஓரிரவில் அவர்கள் உறங்குகையில் அந்தப் பெருமாள், அம்மையாரின் கனவில் தோன்றி, தன் கோயில் திருமணியைக் கையில் அருளவே, அதனை அவர் விழுங்குவதாகக் கண்டனள். அது முதல் அவ்வம்மையார் (தோதாத்ரியம்மையார்) கருவிலே திருவுடையாரான தேசிகனையேற்று பின் பிறப்பித்தார் என்பர்.

## இவர் காலம்

கி.பி.1268ஆம் ஆண்டு - தமிழ் விபவ ஆண்டிலே புரட்டாசி மாதம் திருப்பதியுறையும் திருவேங்கடவனின் பிரம்மோத்சவம் முடிவுறும் திருவோண நன்னாளில் 'வேங்கடநாதன்' என்ற திருநாமத்துடன் இக்குழந்தை தோன்றியது. நாளொருமேனியும், பொழுதொரு வண்ணமுமாக வைணவ மணம் கமழத்திருத்துழாய் போலே சிறுவன் வளரலானான். பிற்காலத்தவர் பலரும் இவரைத் திருவேங்கடவனின் அவதாரமேயென்று இவர்தம் நற்குணங்களாலும், வைபவங்களாலும் போற்றினார்கள்.

ஸ்ரீராமானுசரின் முக்கிய சீடருள் ஒருவர் கிடாம்பியாச்சான் என்பவர். அவர் வம்சத்திலே தோன்றியவர் தோதாத்ரியம்மையார். இவருடன் பிறந்தவர் 'அப்புள்ளார்' எனப்படும் ஆத்ரேய ராமானுஜாசார்யர். தாய் மாமனாகிய இவரே ஸ்ரீவேங்கடநாதனுக்குச் சகல சாஸ்திரங்களையும் திறம்படக் கற்பித்த ஆசார்யராவார். இவரை வாதி ஹம்ஸாம்புதாசார்யர் என்றும் கூறுவர்.

பகவத் கீதையில் கண்ணன் அர்ச்சுனனுக்கு உபதேசிக்கையில், '***எவ்வெப்பொழுது தர்மத்திற்கு வாட்டமும், அதர்மத்திற்கு வளர்ச்சியும் தோன்று-கின்றனவோ, அவ்வப்பொழுது நான் உலகிலே தோன்றுகிறேன்***' என்றருளினான். இவ்வுலகினரை வாழ்விக்கக் கருதி, மீனாய், ஆமையாய், இவை போன்ற பத்து அவதாரங்களையெடுத்தவன். இந்த அவதாரங்களால் சில செயல்களையே நிறைவேற்ற முடிந்தது. இவற்றால் நிறைவேற்ற முடியாத பணியாக மக்களின் அறியாமையை இந்த இருள்தரு மாஞாலத்திலிருந்து விரட்டி தத்துவ

ஞானத்தைப் புகட்ட நினைத்து, பொய்கையாழ்வார், பூதத்தாழ்வார், பேயாழ்வார் போன்ற புதிய தசாவதாரங்களையும் மேற்கொண்டான்.

தான் நேராக அவதாரம் செய்வதுடன், மஹான்களான முனிவர்கள், ஆழ்வார்கள் போன்றோரின் உட்புகுந்து, அனுப்ரவேசாவதாரம் என்ற பெயரிலே பற்பல அரிய புராணங்களையும், இதிகாசங்களையும், தமிழ்மறையாம் செய்ய தமிழ்மாலைகளையும் அருளிச் செய்வித்தான். இத்துறையிலே பகவான் ஸ்ரீ மந்நாராயணன், தன்னைச் சேர்ந்த நித்திய ஸூரிகளான,அநந்தன் கருடன், விஷ்வக்ஸேனர் போன்றோரையும் நிலவுலகிலே யவதரிக்கச் செய்து, பற்பல சமய நூல்களையும் ஆக்குவித்துப் பேருதவி புரிந்துள்ளான். அவர்களினிடையே, ஆதிசேஷனின் அவதாரமாக 'இராமானுசர்' என்னும் உடையவர் தோன்றி, ஸ்ரீ வைணவ சமயத்தைத் தழுவிய 'விசிஷ்டாத்வைதம்' என்ற தத்துவத்தை நிலைநாட்டினார். சிறந்த தத்துவம், ஹிதம், புருஷார்த்தம் என்பவற்றை ஐயம்திரிபறத்தம் நவரத்தினங்களையொத்த ஒன்பான் நூல்களால் உலகிற்கு விளக்கிப் போந்தார். வடமொழியிலமைந்த இந்த நூல்களால் பிறரின் வேத விரோதக் கொள்கைகளைப் பலவாறு கண்டித்தொழித்திட்டார். ஆயினும், பெருவாரியான மக்கள் இவற்றால் பயன்பெற முடியவில்லை.ஏனெனில், உடையவரின் சீடருள் சிலரே அந்நூல்களை மதியாமல், "ஸ்ரீபாஷ்யம்" பிறரை கண்டிக்கவே தோன்றியது" என்றும், ''கத்யத்ரயம்'' என்ற நூல்கள் பக்தர்களின் உள்ளவுவகைக்கானதே'' யென்றும் தோன்றியபடி கூறுவாராயினர். ஆழ்வார்களின் அருளமுதான நாலாயிர

திவ்யப்பிரபந்தங்களையடியொற்றியே இராமானுசர் தம் நூல்களையருளிச் செய்தாரென்பது ஒன்றே அவற்றின் பெருமைக்கு முதற் காரணமெனலாம்.

இராமானுசரின் நூல்கள் ஒன்பதும் வடமொழியில் அமைந்ததனால், சில வைணவர்கள் உபநிடதம் போன்றவற்றையே சான்றுகளாகப் போற்றலாயினர். சிலர் ஆழ்வார்களின் தமிழ் அருளிச் செயல்களிலேயே ஆர்வம் மிக்கவராயினர். இவ்விரண்டுவகை நூல்களின் ஒருமைப்பாட்டைப் பலரும் அறிந்திலர். வைணவ சமயத்திலே பரம்பொருளாகத் திருமாலும், திருமகளும் சமநிலையில் போற்றப்படுவது மரபு. சிலரோ், திருமகளின் பெருமைதனைக் குறைத்தும் பேசி வந்தனர். இப்பெருமையை உலகினர்க்குக் காட்ட வேண்டிய நிலை ஏற்பட்டது. இதெல்லாம் ஒரே சமயத்தினுள் சிற்சில கருத்துப் பூசல்கள். இவை தவிர, வேதத்தினை ஏற்காத சமணர், பௌத்தர் போன்றோர் தம் பிரசாரங்கள் எங்கும் பரவின. சைவ மதமும் வேத நூலின் கருத்துக்களைத் தமக்கேற்றாற்போல் நிறுவலாயின. இந்த அவலச் சூழ்நிலை வேத நூல்களுக்கு மிக்க தொல்லையாய் அமைந்தது. தவிர, புராணங்கள், இதிகாசங்கள் போன்ற மாமுனிவர்களின் நூல்கள் பலவும்,பல சமயத்தவராலும் அவமதிப்புப் பெற்று அல்லலுற்றன. வர்ணாச்ரமங்கள், பிறசமயத்தவர் படையெடுப்பால் கலக்கமுற்றன. மாயாவாதம், சூன்யவாதம் போன்றவை எங்கும் கிளர்ந்தெழுந்தன. கலியின் கோலாஹலம் எங்கும் நிறைந்தது.

இத்தகைய நிலையில், திருவேங்கடமுடையானின் திருமணி-வேதாந்த தேசிகனாராக அவதரிக்க வேண்டிய நிலை ஏற்பட்டது என்பது, அன்னாரின் சீடரான

பிரதிவாதிபயங்கரம் அண்ணன் என்பாரால் அக்காலத்தின் சூழ்நிலையைக் காட்டும்நிலையில் பாடப்பட்டது.

## நடாதூர் அம்மாள் வரதாசார்யரின் அருள்

காஞ்சி வரதராசப் பெருமாளின் ஸந்நிதியிலே தினமும், பேரறிஞரான நடாதூர் அம்மாள் வரததேசிகாசார்யர் என்பவர், தம் சீடர்களுக்கு வேதாந்த பாடங்களைக் கற்பித்து வருவது வழக்கம். ஒரு நாள் ஐந்து பிராயத்துவரான வேங்கடநாதனை அம்மானும், ஆசிரியருமான அப்புள்ளார், அவர் பாடங்களைப் போதிக்கும் நேரத்தில் அழைத்துச் சென்று அவருக்கு அறிமுகம் செய்வித்து வணங்கச்செய்தார். சிறுவனின் பேரொளியையும், அறிவாற்றலையும் கண்டு வியந்த அப்பெரியார் அவனுக்குச் சிறந்ததோர் ஆசியை வழங்கினார்.

(1). *"ப்ரதிஷ்டாபிதவேதாந்த: பரிக்ஷிப்த பஹிர்மத:*

*பூயா: த்ரைவித்யமான்யஸ்த்வம் பூரி கல்யாணபாஜனம்"*

"குழந்தாய் ! நீ வேதாந்த நெறியை நிலை நாட்டி, பிற மதத்தினரைப் புறமுதுகிடச் செய்தும் பேரறிஞர்களால் புகழப்பெற்றும் மிக்க மங்களங்களுக்கு உறைவிடமாவாய்" என்றருளினார். முதுமையாலியலாமை கருதி, இச்சிறுவனுக்கு, அப்புள்ளாரையே அனைத்துக் கல்விகளையும் கற்பிக்குமாறும் உத்தரவிட்டார். இவ்வரலாறு தேசிகனாரின் நூல்களில் பல இடங்களில் உளது.

அந்த ஆசார்யனிடம் ஸ்ரீ பாஷ்ய நூலைப் பாடங் கேட்ட மாணாக்கர் "சுதர்சனபட்டர்' என்பவர் பலமுறை கேட்ட கருத்துக்களைத் தொகுத்து 'ச்ருதப்ரகாசிகை'

என்றதோர் அரிய விரிவுரையை எழுதியருளினார். அந்த நூலை, நன்றிக்கடன்பட்ட தேசிகனார், பிற்காலத்தில் ஆபத்திலிருந்து காப்பாற்றினார். இந்நூலைப் பல முறையும் இவர் தம் சீடர்கட்குப் பாடங்கற்பித்தனர் என்பர். அம்மான் அப்புள்ளாரிடம் இளமையில், இவர் கல்விகளைக் கற்றவகை மிகவும் வியப்பிற்குரியதாம். ஒரு நாள் கேட்ட பாடத்தை மறுமுறை கேட்க வேண்டாத நினைவாற்றல் இயற்கையில் இவரிடம் இருந்தது.

(2). "விம்சத்யப்தே விச்ருதநானாவிதவித்ய:" எனத்தொடங்கும் ச்லோகத்தின்படி

இருபதாம்பிராயத்திற்குள் ஏராளமான கலைஞானங்களைக் கைவரப்பெற்றார். இவருக்கு இராமானுசரின் ஸ்ரீபாஷ்யத்திலே அளவற்ற விருப்பம். அதனைச் சுவைப்பதிலேயே தன்யௌவனப் பருவம் கழிந்தது என்றும், ஸ்ரீமந்நாராயணனைத் தவிர பிற தெய்வங்களுக்கு அடிமையிலாத ஒருமித்த கருத்தால் வாழ்நாள் இன்பமாகக் கழிக்கப்பெற்றது என்றும், பின் வயதிலும் ஸ்ரீமந்நாராயணனின் அருளையே பார்த்துப் போது போக்குவேன் என்றும் தம் நூலிலே விளக்குகிறார்.

## வழிபாடும், இறையருளும்

அனைத்துக் கலைகளிலும் வல்லமை பெற்ற வேங்கடநாதன், திருவயிந்திரபுரம் சென்று வேதமே வடிவமான கருடனின் மந்திரத்தை உருவேற்றி அவரருளைப் பெற்றார். அப்போது தான் 'கருட பஞ்சாசத்' கருடதண்டகம் முதலிய தோத்திரங்கள் வடமொழியில்

அருமையாய் இவரால் இயற்றப்பட்டன. அவ்வருள் காரணமாக,அங்கு 'ஔஷதாத்ரி' எனப்படும் குன்றின் மீதமர்ந்து, ஹயக்ரீவப் பெருமானின் (குதிரை முகம் கொண்ட பெருமாள்) மந்திரத்தை உருவேற்றிப் பல நாட்கள் தவமியற்றினார். அந்தப் பெருமாள் இவரெதிரே தோன்றினார். அவரருளையும் பெற்று'ஹயக்ரீவஸ்தோத்ரம்' என்ற அரிய தோத்திர நூலைப் பாடினார். கல்வியில் தேர்ச்சி வேண்டுவோர் இத்துதியை இன்றும் ஓதி வருகின்றனர். அப்பதியில் கோயில் கொண்டுள்ள தேவநாதனைப் பற்றி வடமொழியில் '*தேவநாயக பஞ்சாசத்*' என்றதோத்திர நூலாலும், அச்யுத சதகம் என்னும் பிராக்ருத மொழியாலான தோத்திரநூலாலும் பாடிப் போற்றி வழிபட்டார். இவ்வாறு 15 ஆண்டுகள் இவர் திருவயிந்தையில் தங்கி பல அற்புதங்களையும் செய்திட்டாரென்று, குருபரம்பரையும், வேதாந்ததேசிக வைபவப்ரகாசிகை என்ற நூலும் விளக்குகின்றன.

**இல்லறமே நல்லறம்:**

தக்க வயதினில் 'திருமங்கை' என்ற உத்தமியுடன் இவர் திருமணம் செய்விக்கப் பெற்றார்.

*"அறத்தாற்றில் இல்வாழ்க்கை யாற்றில் புறத்தாற்றில்*

*போஒய்ப் பெறுவ தெவன்"*

என்ற வள்ளுவர் வாக்கிற்கிணங்க கலியுகத்தில் துறவறம் அரியதென்றும், பொருந்தாததென்றும் காட்டுவார் போல இல்லறத்தையே யினிது நடாத்தினார். அதன்பயனாக தோன்றிய குமாரரே நயினாராசாரியர் எனப்புகழ்பெற்றவித்தகர்.

## தோத்திர நூல் பலவும் இயற்றல்:

இவருக்கு இராமானுசர் போன்றோரால் போற்றப்பட்ட அத்திகிரியருளாளராம் - வரதராசப் பெருமானிடம் அளவற்ற பக்தியிருந்தமையால் பல தோத்திர நூல்கள் தோன்றின. 'வரதராஜ பஞ்சாசத்' 'அத்திகிரிமான்மியம்', 'திருச்சின்னமாலை' முதலியவை அவற்றுள் சிலவாம். மற்றும் அந்நகரிலே கோயில் கொண்டெழுந்தருளியுள்ள பல பெருமாள் விஷயமாகவும் 'தீபப்ரகாசஸ்தோத்ரம்', 'வேகாஸேது ஸ்தோத்ரம்' முதலியன எழுந்தன. பல திருப்பதிகளையும் பற்றி 'தயாசதகம்', 'பகவத் த்யானஸோபானம்', 'அபீதிஸ்தவம்', 'தசாவதார ஸ்தோத்ரம்', காமாஸிகாஷ்டகம்', 'கோபாலவிம்சதி' முதலிய நூல்களும் அருளப்பட்டன. பற்பல சீடர்கட்கும் ஸ்ரீபாஷ்யம், கீதாபாஷ்யம், ரஹஸ்ய நூல்கள் முதலியவற்றை நிரந்தரமாகக் கற்பித்து வந்தார். இவரிடம் பொறாமை கொண்டோர் தோல்வியுற்ற வரலாறுகளும், இவரின் அரும்பெரும் செயல்களும் பற்றி, குரும்பரம்பராப்ரபாவம்', 'ஸ்ரீவேதாந்த தேசிக வைபவப்ரகாசிகை' முதலிய வைணவமரபு நூல்கள் வாயிலாக நமக்குப்புலப்படுகின்றன. அவற்றின் துணைகொண்டு சில நிகழ்ச்சிகளே யீண்டு காட்டப்படுகின்றன.

## வட தேச யாத்திரை

தேசிகனார் தம் முப்பத்தைந்தாம் பிராயத்திலே வடதேச யாத்திரை மேற்கொண்டார். சோளசிம்மபுரம், திருப்பதி, பதரிகாச்ரமம், வடமதுரை, பிருந்தாவனம், அயோத்தி, காசி முதலிய புண்ணியத்தலங்கட்கு எழுந்தருளினார். அதுகாலை, துங்கபத்திரையாற்றின் கரையிலே,

இளமையில், தம்முடன் பயின்ற 'வித்யாரண்யர்' எனும் அத்வைதமத வித்தகரை சந்தித்தார். ஓர் சிற்றரசனின் அவைப்புலவரான அவரை வாதில் வென்று காஞ்சிக்குத் திரும்பினார்.

## அற்புதச் செயல்கள்:

சீரிய ஞானமும், நல்லொழுக்கமும், பற்றின்மையும் சிறந்திலங்கிய இவரது பெருமை நாடெங்கும் பரவியது. இதனால் இவரிடம் சிலர் பொறாமை கொண்டனர். அவர்கள் இவரை அவமதிக்கப் பல சூழ்ச்சிகளையும் செய்தனர். அவையனைத்தும் எம்பெருமானின் அருளால் பயனற்றொழிந்தன.

## வைணவ சமயத்துவர் கூறும் சில நிகழ்ச்சிகள்

1. ஒரு நாள் பொறாமையாளரால் ஏவப் பெற்ற ஓர் மந்திரவாதி இவரிடம் வந்து பேசி, இவரை வாதிற்கு அழைத்தனன். தகுதியற்ற அவனுடன் வாதம் செய்ய தேசிகனார் மறுக்கவே, சினங்கொண்ட அவன் அவரைச் சூழ்ச்சியால் கொல்ல நினைத்தான். ஓர் குளத்திற்குச் சென்று மந்திரத்தையோதி நீரைப் பருகிக் கொண்டேயிருந்தான். அதனால், இவர் வயிறு மிகுந்த நீரைப்பெருக்கி, இவர் இதனுல் மாய்ந்து விடுவாரென்றெண்ணினான். இந்த மர்மத்தை-ஜ்ஞான த்ருஷ்டியாலுணர்ந்த தேசிகனார், தமக்கருகிலிருந்த ஓர் தூணை நகத்தால் கீறிவிட்டு, அப்பிளவின் வழியே மந்திரவாதி குடித்துக் கொண்டிருக்கும் குளத்து நீரையெல்லாம் பெருகி வெளியேயோடச் செய்து விட்டார். களைத்துப்போன மந்திரவாதி இவரிடம் வந்து நடந்ததைக் கண்டு

வெள்கி திருவடிகளில் விழுந்து வணங்கி மன்னிப்பு வேண்டிச்சென்றனன் என்பர்.

2 மற்றுமொரு நாள் ஒரு கொத்தன் இவருடன் போட்டியிடவே இவரும் போட்டியை யேற்று அவனைவிடச் சிறப்பாக ஓர் கிணற்றினைத் தான் கட்டி அவன் செருக்கினை யடக்கினார் என்பர். அவர் கட்டிய கிணறு இன்றும் திருவயிந்திரபுரத்திலே காணப்படுகிறது.

3. ஓர் பிரம்மசாரி, திருமணம் செய்து கொள்ளச் செல்வம் நாடி, இவரிடம்வேண்டி நிற்க, இவர் அவனுக்கு 'ச்ரீஸ்துதி' என்ற தோத்திரத்தால் திருமகளை வேண்டுமாறு கூற, அவளருளால் மிக்க செல்வத்தையவன் பெற்றனனாம். இதே போன்று ஆதி சங்கரரும், திருமகளைப் பற்றி 'கனக தாராஸ்தோத்ரம்' என்னும் துதி நூலைப் பாடி ஓர் ஏழைக்குதவிய வரலாறு உள்ளது. இத்தேசிகனார் தமது வாழ்க்கையில் செல்வத்தை வெறுத்துப் பாடிய 'வைராக்ய பஞ்சகம்' என்ற நூல்5 ச்லோகங்களைக் கொண்டது யாவராலும் போற்றப்படுவதாகும். தாம் அன்றாடம், எம்பெருமானின் தோத்திரங்களைப் பாடியவாறே வீதியில் சென்று அன்பர்கள் அர்ப்பணிக்கும் தான்யத்தைக் கொண்டு இறைவனுக்கு அமுது செய்வித்து வாழ்க்கையைக்கழித்து வந்தார். இம் முறையை 'உஞ்ச விருத்தி' அல்லது 'தேசிகவிருத்தி' என்பர் பெரியோர். அரச சபையில் உயர்ந்த புலவராக வீற்றிருக்கு மாறு'வித்யாரண்யர்' போன்றோர் விடுத்த

வேண்டுகோளையும் புறக்கணித்து, வைராக்யத்தின் (பற்றின்மையின்) உறைவிடமாக இவர் திகழ்ந்தார்.

4. பாம்பாட்டியைத் தன் கருட மந்திரத்தின் பெருமையால் வென்றதும், செருப்புத் தைக்கும் தொழிலாளியை வென்றதும் போன்ற எண்ணற்ற அற்புதச் செயல்களை 'குருபரம்பரை', 'வேதாந்த தேசிக வைபவ ப்ரகாசிகை' போன்ற பல நூல்களிலும் காணலாம்.

**பிரதிவாதிகளை வெல்லல்:**

இவருக்கு வயது 42 இருக்கும். திருவரங்க மாநகரில் பெரிய குழப்பம். ஓர் அத்வைத மத பண்டிதர் ஆங்கு வந்து விசிஷ்டாத்துவைதத்தை எதிர்த்துப் பெரும்வாதத்திற்கு அனைத்துப் பண்டிதர்களையும் அழைக்கின்றார். அவரைச் சேர்ந்த பலரும் கூட்டமாக வந்திருந்தனர். இவர்களை-யெல்லாம் வாதத்தில் தக்கபடி வெல்ல வேதாந்த தேசிகனாரே திறம் படைத்தவர் என்றுணர்ந்த திருவரங்கப் பெருமக்கள், உடனே காஞ்சியை விட்டு திருவரங்கத்திற்-கெழுந்தருளுமாறு இவருக்கு அழைப்பு விடுத்தனர். நாடு புகழும் பெரும் புலவரான தேசிகனாரும், அவ்வழைப்பைத் தலையால் தாங்கித் திருவரங்கத்திற்கு எழுந்தருளினார். அங்கிருந்த புலவர்களில் பலரும், வேத வேதாந்தங்களிலே புலமை பெற்றவர். மற்றுஞ் சிலர், ஆழ்வார்களின் அருளிச் செயல்களான தமிழ்ப் பிரபந்தங்களிலே புலமை பெற்றவர். எல்லாத் துறைகளிலும் வல்லவராக, தேசிகனாரே-யிருந்தமையால், இவர் ஆங்கு அழைக்கப்பட்டார். அனைத்து உபசாரங்களுடன் வித்தகர்கள் இவரை வரவேற்றனர். எட்டு நாட்கள் கடும் வாதப்போர் புரிந்து அத்வைதப் புலவர்களை

இவர் வென்று வாகை சூடினார். இவர் அப்போது கூறிய கண்டனங்களே 'சததூஷணீ' என்ற நூலாக உருவெடுத்தன. இவ்வாறு ச்ரீவைணவ சமயமே உண்மையான வேதநெறியாகும். விசிஷ்டாத்வைத தத்துவமே வேதத்திற்கு ஏற்புடையது என நிலைநாட்டிய பெருமையால் திருவுள்ளம் உவந்த ச்ரீரங்கநாதனும், ச்ரீரங்கநாயகியும் தத்தம் அர்ச்சகர்கள் வாயிலாக இவருக்கு முறையே 'ஸர்வதந்த்ர ஸ்வதந்த்ரர்', என்றும், 'வேதாந்தாசார்யர்' என்றும் விருதுகளை வழங்கியருளினர்.

**பற்பல நூல்களையும் இயற்றல்:**

ச்ரீரங்கநாதனும், தாயாரும் அருளிய விருதினை நிலைநாட்டக் கருதிய வேதாந்ததேசிகனார், 'அதிகரண சாராவளீ', 'தத்வமுக்தாகலாபம்' போன்ற பல அரிய நூல்களையும் அருளிச் செய்திட்டார். ச்ரீவைணவர்களின் அன்றாட அலுவல்களைச் செவ்வனே யொழுங்குடன் செய்ய, ஸச்சரித்ர ரக்ஷை முதலிய பல நூல்களையும் இயற்றினார். வைணவ ரஹஸ்யப் பொருட்களை விளக்க வல்ல 32 ரஹஸ்ய நூல்களை அருளினார். ச்ரீபாஷ்யத்தின் விரிவுரையான 'ச்ருதப்ரகாசிகை'க்கு தத்வரட்சை யென்றதோர் அரிய உரை நூலைப் படைத்திட்டார். புற மதத்தவரைக் கண்டிக்க 'சததூஷணீ' போன்ற நூல்களை யருளினார். ச்ரீபாஷ்யத்தைப் பலகாலும் ஆராய்ந்தும், பன்முறை சீடர்கட்குக் கற்பித்தும் பெருமைபெற்றமையை யதிராஜசப்ததியில், ஆங்காங்கு இவரே சுட்டிக் காட்டுகிறார். இவ்வாறாகத் திருவரங்கத்திலே பல்லாண்டுகள் தங்கிப் பலநூல்களியற்றியும், கற்பித்தும் வருகையில் 48ஆம் பிராயத்திலே வைணவருலகம் போற்றும் 'குமார வரதாசார்யர் என்னும் தவப்புதல்வர் தோன்றினார்.

## அரியதோர் தீர்ப்பு:

இக்காலத்தில் விசய நகர மன்னரின் அவைக்களத்திலே ஓர் கடும் வாதப் போர் நிகழ்ந்தது. அதில் போரிட்ட அக்ஷோப்ய முனிவர், வித்யாரண்யர் என்ற இரு மஹாவித்வான்களின் வாதங்களையும் எழுதி தக்க தீர்ப்பு வழங்குமாறுதேசிகனாரிடம் அவற்றை மன்னர் அனுப்பி வேண்டினார். வாதங்களை அலசியாராய்ந்ததேசிகனார், ஓர் ச்லோகத்தைத் தீர்ப்பாக எழுதியனுப்பினார்.

(1) "அஸிநா தத்வமஸிநா பரஜீவ ப்ரபேதினா
வித்யாரண்ய மஹாரண்யம் அக்ஷோப்ய முனிரச்சினத்"

பொருளாவது : 'தத்-த்வமஸி', என்னும் வாக்கியமாகிய அஸி(கத்தி)யினால் ஜீவ-பரமாத்ம பேதத்தை நிறுவி, வித்யாரண்யர் என்னும் அரணியத்தை(காட்டை) அக்ஷோப்ய முனிவர் சிதைத்து விட்டார்" என்பதாம். இவ்வாறு அழகிய பல வரலாறுகள் இவர் பற்றிய நூல்களில் காணக் கிடக்கின்றன.

நூற்றுக்கும் மேற்பட இவர் அருளிய நூல்களை வடமொழி, செந்தமிழ், பிராக்ருத மொழி, மணிபவள நடைகளில், ஸ்தோத்திரங்கள், காப்பியங்கள், நாடகம், வேதாந்த நூல்கள், உரை நூல்கள், நல்லொழுக்க நூல்கள், ரஹஸ்ய நூல்கள்,தமிழ்ப்பிரபந்தங்கள் என்றிவ்வாறு பகுத்தறியலாம். இவற்றுள் தமிழ்ப்பிரபந்தங்களும், ரஹசிய நூல்களுமே இவ்வாராய்ச்சிக்குப் பெரிதும் எடுத்துக் கொள்ளக் கூடியன. இவற்றுள் இரண்டு ரஹஸ்ய நூல்களும், ஐந்து பிரபந்தங்களும் ஏனோமறைந்து விட்டன வென்று ஆன்றோர் கூறுவர்.

எம்பெருமானை வழிபடவும், வேண்டும் பயன்களைப் பெறவும் பயன்படும் தோத்திர நூல்கள் 28. நாடகம்-ஸங்கற்ப சூர்யோதயம் என்பது ஒன்றே. காப்பியங்கள்4.வேதாந்த நூல்கள் 14. உரை நூல்கள் 8. அனுட்டான நூல்கள் 2. ரஹஸ்ய நூல்கள் 32. தமிழ்ப்பிரபந்தங்களில் மறைந்தவை 5 போக எஞ்சியுள்ளவை 19, ஆக 112 நூல்கள்.

**அரசனுக்காக நூலருளல்**

வட நாட்டில் ஆட்சி புரிந்த 'சர்வஜ்ஞ சிங்கப்பன்' என்ற சிற்றரசன் இவரடி பணிந்து, தானுய்யக் கருதித் தன் நாட்டிற்கு இவரையழைத்தான். வேங்கடகிரியைச் சேர்ந்த அம்மன்னன், கல்வி கேள்விகளுடன், திருமால் பக்தியும் கொண்டவன். அவனிடம் தேசிகனார் மிக்க கருணையுடன் 'ஸுபாஷித நீவீ' என்ற காப்பியத்தையும் தத்வசந்தேசம், ரஹஸ்ய சந்தேசம், ரஹஸ்ய சந்தேச விவரணம் என்ற மூன்று ரஹஸ்ய நூல்களையும் அருளிச் செய்து, அவற்றைச் சீடர்கள் வாயிலாக அவனுக்குச் சேர்ப்பித்தமை கண்டு, அவ்வரசனும் அவற்றைப் போற்றி மிக்கநலம் பெற்றானென்பர்.

**பொறாமையாளரால் தொல்லை:**

இவ்வாறு வைணவ சமுதாயத்தில் எவ்வகையிலும் தலைசிறந்து விளங்கிய இவரிடம், பல மக்கள் பொறாமையும் கொண்டனர். அவர்களும் அறிவிற் குறைபாடுடைய ச்ரீவைஷ்ணவர்களே. சில ஆசார்யர்களும், அன்னவர் சீடர்களும் நாளும் பொறாமையால் பற்பல இன்னல்களையும் இவருக்கு ஏற்படுத்தி வந்தனர். அவற்றையிவர் பொருட்படுத்தினாரல்லர். இயற்கையான

ஸாத்விகத் தன்மைக் கேற்ப அரங்கநாயகன் இவரை அவ்வப்போது பாதுகாத்து வந்தான். இதனால் இவரது பெருமை நாடோறும் வளர்ந்தே வந்தது. அத்வைதத்தைக் கண்டிக்கும் உத்தியாக 'யாதவாப்யுதயம்', 'சங்கற்ப சூர்யோதயம்' என்ற நூல்கள் அருளப் பெற்றன. கவிதைத் திறனில் இவருடன் போட்டியிட்ட 'அழகிய மணவாளப் பெருமாள் நாயனார்' என்பாரை வெல்ல, ஓரிரவில், இரண்டொரு யாமங்களுக்குள்ளேயே, ஆயிரம் அரிய ச்லோகங்களைக் கொண்ட 'பாதுகா ஸஹஸ்ரம்' என்ற நூலையியற்றி வாகை சூடினார். இதனால்,'கவிதார்க்கிக சிம்மம்', என்ற விருதினைப் பெற்றுத் திகழ்ந்தார். எவரும் இவரை எதிர்க்க அஞ்சுவாராயினர்

**சத்யாகாலம் எழுந்தருளல்:**

இவ்வாறு திருவரங்க நகரில் நல்வாழ்வு பெற்றுத் திகழுங்கால், பலரது பொறாமை நிலை இவரை வருத்தியது. '"ஒருவர்க்கொருவர்" பகையைத் தோற்றுவிக்கும் பொறாமை வைணவர்களை விட்டு நீங்க வேண்டும்" என்று திருவரங்கநாதனிடம் இறைஞ்சி, சுமார் கி . பி. 1320ஆம் ஆண்டு, மைசூரைச் சேர்ந்த திருநாராயணபுரத்திற்கு யாத்திரையாய் எழுந்தருளினார். சிறிது காலங் கடந்து, சத்தியமங்கல மெனப்படும் சத்யாகாலத்திற்கு எழுந்தருளி நீண்டகாலம் அங்கு வாசம் செய்தார். அப்போழ்து இவரிடம், குமார நயினாராசார்யர் (வரதாசார்யர்), ப்ரஹ்மதந்த்ர ஸ்வதந்த்ர ஸ்வாமி இருவரும் வேதாந்த நூல்களைப் பயின்று மிக்க தேர்ச்சி பெற்றனர். அங்கிருந்த பெரியோர்களின் தவப்பயனாய் ஏறக்குறைய 35 ஆண்டுகள்அவ்விடம் தங்கி உபதேசங்கள் செய்தருள

வாய்ப்புண்டாயிற்று. இடையிடையே திருவரங்கம் வந்து அரங்கனை வழிபட்டு வந்ததாகக் கூறவும் இடமுள்ளது.

## முகமதியர் படையெடுப்பு :

அக்காலத்திய சரித்திர நிகழ்ச்சிகளை ஆராய்கையில், முகமதியரின் படையெடுப்பாலும், வெற்றிகளாலும், இந்துக்களின் சமூக வாழ்க்கையிலும், சமயத் துறையிலும் பெரும் அதிர்ச்சிகளும், சரிவுகளும் ஏற்பட்டனவென்று ணரலாம். தம் மதத்தில்மிக்க பற்றுடைய முகமதியர் இந்தியாவில் படையெடுக்கும் வழியில், கண்ட கோயில்களையெல்லாம் ஆத்திரத்துடன் இடித்துத் தரைமட்டமாக்கினர். இதனால், இந்துக்களும், அவர்கள் பால் மிக்க வெறுப்பும், சீற்றமும் கொண்டதில் வியப்பொன்றுமில்லை. குதிரைப் படையுடன் வந்த அவ்வீரர்கள், வழியில் கண்ட பொருட்களையெல்லாம் கொள்ளையடித்தனர். உணவுப் பொருட்களைப் பறித்தனர். படையெழுத்து வந்த துருக்கியர் உணவுக்காகக் கால்நடைகளைக் கொன்று தின்றனர். இதனால் இந்துக்களின் வெறுப்பு மேலிட்டது.

தென்னிந்திய மன்னர்களிடமும், கோவில்களிலும் மிகுந்த செல்வம் இருப்பதாகக் கேள்வியுற்ற அலாவுதீன், மாலிக் காபூருடன் ஒரு படையை மூன்றாம் முறையாக இங்கு அனுப்பினான். 1310ல் இப்படை தேவகிரியிலிருந்து ஹோய்ஸலர்களின் தலைநகரான துவார சமுத்ரத்தை கொள்ளையடித்துப் பின் மதுரையை அடைந்தது. அங்கு பெரும் பொருளைச் சூறையாடியது. கோயில்களின், கருவூலங்களிலும் சேமிக்கப்பட்டிருந்த தங்கமும், அணிகலன்களும் களவாடப்பட்டன. பொது மக்களின்

செல்வம் இழக்கப்படாவிடினும், கோவில் சிப்பந்திகள் பெரிதும் இழப்படைந்தனர்.

இந்த வேளையில்தான் கி.பி. 1327இல் அரங்கநாதனிடம் பரிவுகொண்ட ச்ரீவைணவர்கள் மூலத்தானத்தை (கருவறையை) கல்திரையிட்டு மூடிவிட்டு, உற்சவமூர்த்திகளை பெரும்பாடுபட்டு வெளியூர்கட்குக் கொண்டு சேர்த்தனர். இந்நிலையில், தேசிகனாரின் கையில், சுதர்சனபட்டர் தன் இரு புதல்வர்களையும், தானியற்றிய அரிய உரைநூலான 'ச்ருத ப்ரகாசிகை'யையும் ஒப்படைத்து, எவ்விதமாயினும் காக்குமாறு வேண்டினார். அந்த அமர்க்களத்தில் பெரிய பெருமாள் சேமமாய் வெளியேறிவிட்டதையுணர்ந்த தேசிகனார், அவ்விரு புதல்வர்களையும், அந்நூலையும்சத்யாகாலத்திற்கே கொண்டு சேர்த்தார். அவ்விருவரின் பெயர்கள், வேதவ்யாஸ பட்டர், பராசர பட்டர் என்பனவாம். திருவரங்கத்தில் நிகழ்ந்த அன்னியரின் கொடுமையில் சுதர்சன பட்டர், உலகாசார்யர், முதலிய ஆசார்யர்கள் கொல்லப்பட்டனர். திருவாராதனமின்றியே கோயில் பல்லாண்டுகள் வரை பாழடைந்தது. ஏறக்குறைய 30 ஆண்டுகட்குப்பின் 'புக்கராயன்' என்ற ஓர் சிற்றரசனின் படைத்தலைவன், 'கொப்பணார்யர்' என்பவர் மீண்டும் திருவரங்கநாதன் முதலிய மூர்த்திகளை இவ்விடம் சேர்ப்பித்துப் பழையபடியே திருவாராதனம் குறைவற நடக்க வகை செய்திட்டான். நிகழ்ச்சிகளின் காலம் பற்றிச் சரித்திர ஆசிரியர்களிடையே வேறுபாடுகளிருப்பினும், சரித்திரப் பேராசிரியரான ரங்காச்சாரியாரின் கூற்றுப்படி கி. பி 1327 முதல் 1365 வரை பெருமாள் திருவரங்கத்தை விட்டு வெளியேறியிருந்தாரென்பதைத் தீர்மானிப்பது எளிது.

இத்தகைய அபாயமெல்லாம் நீங்க வேண்டுமென்றே தேசிகனார், 'அபீதிஸ்தவம்' என்ற தோத்திர நூலையியற்றினார் என்பது தெளிவான செய்தி. அந்நூலாலேயே யிதனையறிய முடிகிறது.

இவ்வரலாறுகளைக் கோயிலில் காணும் கல்வெட்டுக்களாலும், சரித்திர நூல்களாலும் தெளிவாகவுணர்கிறோம். இந்தப் படையெடுப்புக்கள் வெளியேயிருந்து சமூகத்திற்கும், சமயத்திற்கும், தத்துவத்திற்கும் ஏற்பட்ட தொல்லைகளாகும். இவ்வாறே தேசிகனாரின் காலம், சமண, பௌத்த சமயப் பிரசாரங்கள் ஒரு அளவிற்குக் கட்டுப்பட்டிருந்தாலும், சைவ சமய்த்தின் புது மலர்ச்சி கண்டு வளர்ச்சிதொடங்கிய காலம். அதனால் வைணவமும், விசிஷ்டாத்வைத தத்துவமும் பாதிக்கப்படும் நிலையேற்பட்டது. இத்தொல்லைகளை வென்று நாராயணனையே பரதத்துவமாகக் காட்டி அவனைச் சரணடையும் நெறி வகைகளை நிறுவி சமயத்தையும் தத்துவத்தையும் நிலைநாட்டப் பெரும் முயற்சி மேற்கொண்டவர் தேசிகனார் என்பது அவர் வாழ்க்கை வரலாற்றில் அறியக் கிடக்கும் உண்மையாகும்.



# இயல் 3
# தேசிகர் அருளிய பிரபந்தங்கள்

## 3.1 ஸ்ரீமத் ரஹஸ்ய த்ரய ஸாரம் (தத்துவங்கள்)

முன் இயலில் குறிப்பிட்டவாறு 112 நூல்களை தேசிகர் இயற்றியிருப்பினும், அவற்றுள் தமிழும், வடமொழியும் விரவிய மணிபவள நடையில் அருளிய ஸ்ரீமத் ரஹஸ்ய யத்ரயசாரமே வைணவ தத்துவங்கட்கெல்லாம் மூலமாய் சிறப்புடன் மிளிர்வதாலும் இதன் கருத்தினை விளக்கவே பிற ரஹஸ்ய நூல்கள் பின் தோன்றியவையாதலாலும் முந்துறமுன்னம் ஸ்ரீமத்ரஹஸ்யத்ரய சாரத்தை விளக்க வேண்டியுள்ளது.

இதில், 'அதிகாரஸங்கிரஹம்' என்ற தமிழ்ப் பாசுரங்களாலும், வடமொழிச்லோகங்களாலும் மிளிரும் உயர்ந்த நூலான 'ரஹஸ்ய த்ரயஸாரம்' என்ற பெரு நூலில் உள்ள 32 அதிகாரங்களின் கருத்து சுருக்கி வரையப்படுகிறது. இதனை மனதில் கொள்வதால், மேற்கண்ட நூலின் கருத்தனைத்தையும் எளிதில் மனத்தில் நிலை நிறுத்திடலாம். ஆதலின், ஸ்ரீவேதாந்த தேசிகனாரின் தத்துவக் கருத்துக்களை எளிதில் புரிந்து கொள்ளத் தகுந்த சாதனமானவையென்ற காரணம் பற்றி, ஈண்டு அப்பாடல்கள், ச்லோகங்களின் கருத்தையடைவே தருகின்றனன். முதலில், குரு பரம்பரையின் சாரத்தை ஆறு பாட்டுக்களால் விளக்குகின்றார். (கீழேயுள்ள எண்கள் அதிகாரசங்கிரகப் பாடல்களின் எண்களைக் குறிப்பன)

## குருபரம்பரா சாரம்

1. பொய்கையாழ்வார், பூதத்தாழ்வார், பேயாழ்வார், தாமிரபரணிக்கரையில் அவதரித்த நம்மாழ்வார், பெரியாழ்வார், பாகவதர் பால் தூய்மையுள்ளங் கொண்ட குலசேகராழ்வார், நன் மதிப்புக்குரிய திருப்பாணாழ்வார், தொண்டரடிப் பொடியாழ்வார், திருமழிசையாழ்வார், வையமெங்கும் திருமந்திரத்தின் பொருளைப் பொலியச் செய்த திருமங்கையாழ்வார், இவர்கள் மகிழ்ந்து பாடும் திவ்யப்பிரபந்தங்களை நாம் தெளிவாய் ஓதி, விளங்காத வேதப் பகுதிகளையெல்லாம் நன்கு தெளியப்பெறுவோமாக, (ஆழ்வார்களின் பாசுரங்களால் மறை பொருட்கள் யாவும் உள்ளங்கை நெல்லிக் கனியாகும்).

2. எம்பெருமானுக்கும் ஜீவாத்மாக்களுக்கும் பத்து விதமான ஸம்பந்தங்களுண்டு என்பது நம் கொள்கை. அத்தனை சம்பந்தங்களையும் நமக்கும் நம்மாழ்வாருக்கும் உளவாக்கி 'கண்ணி நுண் சிறுத்தாம்பு' என்ற சிறு பிரபந்தத்தை மதுரகவியாழ்வார் பாடியருளினார். அந்தப் பத்து சம்பந்தங்களையும் காட்டி ஸ்ரீ தேசிகனார்பாடுகிறார். ஸ்ரீமதுரகவிகள் நம்மாழ்வாரின் திருவடிகளைச் சாரும்போது பூமியில்கண்ணன் அவதரித்திருந்தார். இதனையறிந்தும் மதுர கவிகள் கண்ணனை விட்டுநம்மாழ்வாரே நாம் தொழும் தெய்வம் என்று வழிபட்டார். அந்தச் சிறப்பு இப்பாசுரத்தில் காட்டப்படுகிறது. பாகவதர்களுக்கு அருள்புரியவே இந்த பூமியில் அவதரித்துக் கண்ணபிரான் எதிரில் நிற்கையிலும், இன்பத்தையனுபவிப்பதிலும்,

சரணடையும் விஷயத்திலும், நாம் ஏற்கும் (முக்தி) புருஷார்த்தமாயிருக்கும் நிலையிலும் விலக்காத பலவகைச், சம்பந்தங்களிலும், தகாத விஷயங்களில் பற்றை ஒழிப்பதிலும், தன் விஷயமாகப் பற்றையேற்படுத்துவதிலும், பாவங்களை யொழிப்பதிலும், கருணை வளர்ச்சியிலும், தத்துவ அறிவை உண்டு பண்ணுவதிலும் தன் தன்மையை அருளுவதிலும், அருமறைகளைத் தமிழில் அருளிச் செய்த நம்மாழ்வாரின்திருவடிகளையே ஆதாரமாகப் பற்றி வருத்தம் தீர்ந்த மதுரகவிகள் உலகில் யாவரும் அறியும்படி வெளியிட்ட ஆசார்யனையேயடைவதென்ற அனாதியான வழியே, பற்று அற்று விஷயங்களை வெறுக்கக் கூடிய உறுதியான ஞானமுள்ளவர்கட்குச் சிறந்த வழியாகும். ஆசார்யனைச் சார்ந்து நிற்பதே சிறந்த வழியாகுமென்பதாம்.

அடுத்து எம்பெருமானார் வரையுள்ள ஆசார்யர்களின் வரிசையை வழிபடுகிறார். என் ஆத்மாவை எம்பெருமானுக்கு சேஷமானது அடிமையானது என்ற ஞானத்தைக் கொடுத்து உயிர்ப்பித்த ஆசார்யரைச் சரணடைந்து பின் அவர் ஆசார்யர்களின் வரிசையையும் முறையே வணங்கி பிறகு அருளால் பெரும்பூதூரில் தோன்றியவரும் உலகத்தோருக்கு எம்பெருமானைக் காட்டிக் கொடுத்தவருமான எம்பெருமானாரும் பெரிய நம்பிகளும் ஆளவந்தாரும், மணக்கால் நம்பியும் அவர்க்கு நல்ல சரணாகதி வழியை உபதேசித்த உய்யக் கொண்டாரும் நாதமுனிகளும்,

நம்மாழ்வாரும், சேனை முதலியாரும், இனிய அமுதம் போன்ற பிராட்டியும் என்று இந்த ஆசார்யர்களை முற்பட வணங்கி எம்பெருமானின் திருவடிகளைப்பற்றுகின்றேன் என்கிறார்.

## எம்பெருமானார்-உடையவர்

4. வேதாந்த சாஸ்திர வழியின் நேர்மையைக் கெடுப்பவர்களாய்- எதற்கும் காரணம் வினவும் குதர்க்கவாதிகளுக்கு நிகரற்ற யானையாய்த் தோன்றி அவர்களின் வாதங்களென்னும் வாழைகளையழித்த உபகார சீலர், சிறந்த புகழையணியாகக் கொண்டவர் இராமானுச முனிவர். இவரது இன்னுரைகளில் ஆழ்ந்த மனம் கொண்ட நாம், இனி கொடிய வினைகளை மனத்தாலும் நினையோம்.

## ஆளவந்தார்

5. வெகு காலமாக இந்த சம்ஸாரத்தில் வந்து பிறந்து இப்பிறவியில் நல்வினையால் - நல்ல நினைவைப் பெற்றுள்ள நாம் மறுபடியும் பிறந்து வினையுடலில் கிடந்து உழலாமல் 'நம்மைக் காக்க வந்தார்' என்று சொல்லுமாறு எதிரிகளைவென்று, கருணையுடன் பிரகாசிக்கும் நற்குணத்தவரான ஆளவந்தாருக்கு நாம் அடிமையானோம். இனி தகாத ஒழுக்கங்களைக் கூறும் தீய நூல் வழி ஈடுபடமாட்டோம்.

## நாத முனிகள்

தாளம் (காஹளம்) என்னும் வாத்தியத்தையும் வலம்புரிச் சங்கத்தையும், போன்ற குரு பக்தர்களான கீழையகத்தான், மேலையகத்தான் என்ற இரண்டு

சீடர்களுக்கும் 'தாள வித்யை' யென்னும் இசைக் கலையைக் கற்பித்து தமிழ்ப் பிரபந்தத்தின் இன்னிசையையும் உபதேசித்த வள்ளலும், முக்தி பெற விரும்புவோரால் தீவிரமாய்க் கைக்கொள்ளப்படும் யோக மார்க்கத்தைப் பரப்பியவருமான நாதமுனிகளின் திருவடிகளையே தினமும் வணங்கியெழும் எங்களுக்கு நானிலத்தில் வேறு யார் நிகராவர்?

இவ்வதிகாரத்தில் உள்ள ச்லோகங்கள் மூன்றின் கருத்து வருமாறு:

1) சரணாகதி மார்க்கத்திலே நிலைபெற்றுள்ள ஞானமும், தயையும் கொண்ட நம்மாழ்வார், சுகர், வ்யாஸர் முதலியவர்களின் சிறந்த நூல்களை நன்கு பயின்று சிறந்த ஊக்கத்தையுள்ளத்திலே பெற்றுள்ள என் ஆசார்யர்கள் ஒவ்வோர் காலத்திலும் சிறந்த அறிவினை யெனக்கு அருளுவார்களாக.

2) எங்கள் ஆசார்ய பரம்பரையில் புகழ் பெற்றவர்களான நாதமுனி போன்றவர்கள், வேதாந்தங்களில் துதிக்கப்படும் ஸ்வரூபம், உபாயம், புருஷார்த்த முதலிய பல்வேறு உபதேச வாக்கியங்களைப் போதித்து, நாம் நன்கு நம்பிச் சரணடையத் தக்க திவ்ய தம்பதிகளின் தயை யென்னும் கங்கைக்குப் புத்திரராய்-போட்டியாலேற்படும் தொல்லைகள், தீயோரின் பதவி முதலியவற்றிற்கு அப்பாற்பட்டவராய், ஞான, பக்தி வைராக்யங்களைக் கொண்டு தோன்றி காமக்ரோதாதிகளற்றஎமக்கு நல்லருள் புரியட்டும்.

தன் இதய பீடத்திலே ஹயக்ரீவப் பெருமாளை (குதிரை முகத்தோனான திருமாலை) அமர்த்தி அவரது

கனைப்புக் குரலால் எதிரிகளையெல்லாம் விரட்டி-வெற்றிக் கொடியை நாற்றிசைகளிலும் பறக்க விடும் நம் ஆசார்ய பரம்பரை சிறந்து விளங்குகிறது.

என்றிவ்வாறு, தம் சமய குரவரின் பரம்பரையைப் போற்றுகின்றது முன்னுரை.

## 1. உபோத்காதாதிகாரம்-முகவுரை

46. சிறந்த பேறு பெற்றோர்க்கே ரஹஸ்யம் மூன்றின் பொருளையறிந்து மகிழும் வாய்ப்புக் கிட்டும். 'எம்மைக் காக்க வேண்டிய பொருளாகக் கொண்டு காப்பான்' என்று துணிந்து திருமகள் கேள்வனின் இரு திருவடிகளையும் உபாயமாகப் பற்றியதோடு எமக்கு அவற்றையே உபாயமாகக் காட்டிய கருணை வள்ளல்களான ஆசார்யர்கள், வளரும் அறியாமையிருள் நீங்க உபதேசித்த மூன்று ரஹஸ்யங்களின் கருத்தை இவ்வுலகில் என்றும் தியானித்து மகிழும்படி நமக்கு ஒரு பாக்யம் வாய்த்துள்ளது.

47. ஆசார்ய கடாக்ஷம் பெற்றவருக்குக் கருவினில் வாஸமில்லை. கடலில் பிராட்டியுடன் (இலக்குமி தேவியுடன்) அவதரித்த கௌஸ்துபம் என்ற ரத்னம் போல எம்பெருமானின் திருமார்பு நாம் வசிக்கும் சிறந்த இடம் என்று நினைப்பவராய் தாமரை மலர் போன்ற அவன் திருவடிகளைத் தலைமீது தரிக்கும் உரிமை பெற்ற நாம் நம் கருவுடன் வந்த கொடிய வினையாகிய வெள்ளத்திலே கலந்து விடாமல் - சூட்சுமமான ஐந்து பொருட்களையும் அறிந்தவர்களான நம் ஆசார்யர்கள் நமக்கு உபதேசித்து அருள் புரியப் பொருந்தியுள்ளனர்.

48. ரஹஸ்யம் மூன்றையும் அறிந்தவர் ஸாரமான பொருளையே கைக் கொள்வர். நாம் கற்றவை போதா:

இன்னும் கற்க வேண்டும் என்ற ஆசையினால்,வீண் சுமையான பதினெட்டு வகைக் கல்விகளையும் கற்று முடிந்தாலும் இவைவெறும் எண்ணிக்கையே என்று தீர்மானித்து, நித்ய சூரிகளாலும் போற்றப்படும் எட்டெழுத்துடைய மந்திரமும், த்வயமும், சரமச்லோகமும் என்றுள்ள மூன்று ரஹஸ்யங்களையும் அநுஸந்தானம் (தியானம்) செய்த நம் சமய ஆசார்யர்கள், ஸாரத்தையே மிகக் கொள்ளும் ஒப்பற்றதோர் நிலையை நமக்கும் நல்கினார்.

இந்த அதிகாரத்திலே மூன்று ச்லோகங்களின் கருத்து- ஜனனம் (பிறவி)என்னும் ஸம்ஸார மார்க்கத்தில் போக்குவரத்திலே விரைவைத் தவிர்க்க எண்ணுபவர்கள் இந்த அதிகார ஸங்கிரஹமென்னும் நூலைப் படிப்பீர்களாக; எம்பெருமானின் இதயத்திலே 'கௌஸ்துபம்' போல் பிரகாசிக்கும் ஜீவாத்மாவானவன், மாசுள்ள மதியினனாய், கைங்கர்யமென்னும் ஸாம்ராஜ்யத்தை யடையாதவனாய் உள்ள நிலையில், நல்வினை பயன் தரும் காலத்தில் எம்பெருமானின் கருணை நோக்கினைப் பெற்று, நம் ஆசார்ய பரம்பரையினால் கண்டுபிடிக்கப்பெற்றதும், நம்மால் அறியப்பட்டதுமான 'திருமந்திரம்' என்ற பொருளைப் பெற்று அதனைப் பாதுகாக்கின்றான்.

இவ்வுலகில் ஒவ்வோர் ஜீவனும் கர்மம், அவித்யை, ஸம்ஸாரம் என்ற அநாதியாய் விசித்ரமாய்ச் சுழலும் வெள்ளத்தில் சிக்கிக் கொண்ட காலத்தில் (அவனவன்) அனுபவிக்க வேண்டிய வினைவிளை காலம் - (பரிபக்குவ தசை) ஒவ்வோர்சமயத்திலும் ஏற்கப்பட்டுள்ளது. அது வினைக்குத் தக்கவாறு வெவ்வேறானது. அத்தகைய நல்வினை விளையும் பக்குவ காலத்தில் பகவானின்

கருணையால் ஏற்கப்படும் அறிஞன், முக்தர்கள் அடையும் பகவத் குணானுபவம், கைங்கர்யம் எனப்படும் நிலைக்கு வைப்பிடமாகவும் ஆவான். முதலில் நல்வினையின் பக்குவதசை - பின்பு சரணாகதியில் தொடர்பு - பிறகு பகவானின் குணங்களையனுபவித்தல், அதன்பின் முக்தர்கள் பெறும் பகவத் கைங்கர்யம் என்னும் ஐச்வர்யம் என்ற முறை அறியத் தக்கது.

## ஸார நிஷ்கர்ஷாதிகாரம்

மேன்மேலும் பலவற்றைக் கற்கும் ஆசையினால்- வீண் சுமையான 18 கல்விகளையும் வீண்தொகையேயென்று கருதி - நித்ய ஸூரிகளாலும் கொண்டாடப்பெறும் எட்டெழுத்து மந்திரம், த்வயம், சரமச்லோகம் என்ற மூன்று ரஹஸ்யங்களையும் தியானித்த நம் ஆசார்யர்கள் சிறந்த சாரத்தையே கைக்கொண்டு மகிழும் நிலையை நமக்கருளினர். இம்மூன்று ரஹஸ்யங்களையறிந்தவர் ஸாரமான பொருளையே கைக்கொள்வர் என்பதாம்.

## ப்ரதானப்ரதிதந்த்ராதிகாரம்

எம்பெருமான் எல்லாப் பொருட்களுக்கும் ஸ்வரூபத்தையும் வாழ்வையும் கொடுத்துத் தாங்குபவன். இந்நிலை 'தாரகத்வம்' எனப்படும். தன் ஸங்கல்பத்தால்அனைவரையும் செயல்களில் ஈடுபடுத்துகிறான். இதற்கு 'நியந்த்ருத்வம்' எனப் பெயர். அவன் தன் பயனையே சேதனர், அசேதனர் யாவரும் தம் பயனாகக் கொண்டு நிற்குமாறு செய்து பெருமை பெறுவதனை 'சேஷித்வம்' என்போம். இம் மூன்று தன்மைகளையும் கொண்டவனே மற்றொன்றைத் தனது

உடலாகக் கொள்ள முடியும். இவ்வாற்றலால் எம்பெருமான் உலகனைத்தையும் தன் சரீரமாகக்கொள்கின்றனன். சேதனர்களான நாமும் அசேதனங்களும் அவ்வெம்பெருமானின் சரீரமாக நிற்கின்றோம். இவ்வாறு கூறப்படும் 'சரீராத்ம பாவம்' என்ற சம்பந்தமே நமக்கும் எம்பெருமானுக்குமிடையேயுள்ளது என்ற செய்தியை 'ப்ரதானப்ரதிதந்த்ர' மென்பர். அந்தந்தச் சமயவாதிகட்கே ஏற்புடைத்தாய், பிற சமயத்தார் ஏற்காத கொள்கைகளை அந்தச் சமயத்தின் ப்ரதானப்ரதிதந்த்ர-மென்பது வழக்கம்.சேதனாசேதனங்கள் எம்பெருமானுக்கு சரீரம் என்னும் கொள்கை இந்த விசிஷ்டாத்வைதிகளின் ப்ரதானப்ரதி தந்த்ரம்.

## அர்த்த பஞ்சகாதிகாரம்

ஐந்து அர்த்தங்களையறிந்தவரே மயக்கமின்றிப் பிறர்க்கு எதனையும் உரைக்க வல்லவர். 1. புருஷோத்தமன் எனப்படும் எம்பெருமான், பிராட்டியின் நாதனாய் விளங்குபவன்- நமக்கு அடைக்கலமானவன். 2. அவனடிகளையடைந்து அருளிலேயொன்றி நிற்கும் அன்பனானசேதனன்.3. சேதனன் எம்பெருமானையடைய கைக்கொள்ளும் பக்தி, 'சரணாகதி' போன்ற உபாயம். 4. இவனுக்குக் கிட்டும் மோக்ஷமென்னும் பயன் 5. அஞ்ஞானத்தால் ஏற்படும் கர்மங்களென்னும் வலிமையான விலங்கு போன்ற தடைகள் இவையைந்துமே அர்த்த பஞ்சகமெனப்படுபவை.

## தத்வத்ரய சிந்தனாதிகாரம்

கர்ம சம்பந்தத்தால் ஏற்பட்ட இவ்வுடலிலே வளரும் மயக்கங்கள் சில. அவை உடலை ஆன்மாவாக எண்ணி மயங்குதல்; சேதனன் எப்போதும் ஸ்வதந்த்ரனானவன் என்று மயங்குதல்; இவற்றையொழித்துவிடத்-திருவுள்ளங்கொண்டு சேதனன் அசேதனன், எம்பெருமான் என்ற வெவ்வேறான வியக்கத் தக்க மூன்று தத்வங்களையும் நமக்கு மறை நூல் தந்த முந்தைய ஆசிரியர்கள் அருள்உள்ளத்துடன் தெளிவாக உபதேசித்தனர்.

## பரதேவதா பாரமார்த்யம்

பற்பல சமய வாதிகளும், வேத நூல் நடுங்குமாறும் சாதுக்கள் நடுங்கும்படியும், தத்தமக்குத் தோன்றியவாறு கண்ட கண்ட தேவர்களையெல்லாம் "உலகின் காரணமானவர்" என்று தர்க்கம் செய்யாதவாறு நம் வேதாந்த வாசிரியர்கள்-அலர்மேல்மங்கையுறை மார்பனான திருமாலையே - உலகின் ஆதி காரணமானவர் என்று நிலை நாட்டினர். ஆதலின், அந்த ஸ்ரீமந் நாராயணனே பரதேவதையும், பரமார்த்தமுமாவன்.

## முமுக்ஷுத்வாதிகாரம்

சேதனன், ஆசார்யனிடம் பெறும் நல்லுபதேசத்தால் அவன் திருவடிகளையடைதல் எனும் மோட்சத்தைப் பெறுகிறான். பிராட்டியாருடன் நிலைபெற்றுநிற்கும்அந்தப் பரம புருஷனின் இரு திருவடிகளையும் ஏந்திப் பணி செய்தலாகிய பெரிய மோக்ஷமாம் புருஷார்த்தத்தையும், அழியும் நிலையைக் கொண்ட ஸம்ஸாரமென்னும்

பொங்குமா கடலையும் பற்றி, இது நல்லது இது தீயது என்று உபதேசித்த ஆசார்யர்களின் நல்லருளால் ஐம்புலன்களையும் வென்று பெரும்பயனான மோக்ஷத்தையே இந்த சேதனன் அடைய விரும்புவான்.

## அதிகார விபாகாதிகாரம்

நாம் அடைய விரும்பக் கூடிய பயன் மோக்ஷமே என்பதை யறிந்து நீண்டகாலம் செய்ய வேண்டிய பக்தி வழியையும், குறுகிய காலம் ஒரு முறை செய்தாலே பயன் தரவல்ல சரணாகதி (ப்ரபத்தி) வழியையும் தம் நல்வினை வேறுபாட்டிற்கேற்ப அறிந்த சேதனர்கள் அவற்றிலொன்றினைத் தம் ஆதாரமாகப் பற்றி, முயன்று ஸம்ஸாரத்திற்குக் காரணமான கர்மங்களை யொழிப்பதில் எம் பெருமான் திருவடிகளில் ப்ரபத்தி செய்வதனை விட்டு வேறு சிறந்த உபாயமில்லை என நிற்பார்கள்.

ஒவ்வோர் உபாஸகரும் பக்தியோகத்தையோ ப்ரபத்தியையோ தமக்கேற்றதாகக் கொள்கின்றனர். ஒன்றை ஏற்றவருக்கு மற்றொன்று தேவையில்லை. ஆயினும், உபாயத்தைச் செய்கையில், தடையாய் நிற்கும் கர்மம் அழிவதற்காக 'ப்ரபத்தியை' அவசியம் ஒவ்வொருவரும் மேற்கொள்ள வேண்டுமாம். ஆக, பக்தர்- ப்ரபன்னர் இருவகையினரும் மோக்ஷமடைய அதிகாரிகளாவர் (தகுதியுள்ளவர்).

## 55 உபாய விபாகாதிகாரம்

ஸ்திரமாக உபாயத்தில் முயலும் நிலைக்கேற்ப கர்ம யோகத்தையும், நுட்பமான புத்தியால் ஆன்மாவைக் காண ஏற்றது என்றுசெய்யப்படும் ஜ்ஞான யோகத்தையும், ஜீவனின் ஸ்வரூபத்தைப் பகவானுக்குச் சேஷமாகவே

காண்பதால் இன்பமான பக்தியோகத்தையும் இம்மூன்றில் ஒன்றையும் செய்யச் சக்தியற்றவர்களாய் மோக்ஷத்தைப் பெற விரைபவர்க்கென்று அவர்கள் விரும்பும் நேரத்திலேயே எம்பெருமானின் அருளால் பயன்தரத் தக்க உபாயமான ப்ரபத்தியையும் உள்ளவாறு அறிந்தவரே வேதமறிந்த அந்தணராம்

1. கர்ம யோகமாவது பயனில் பற்றுக் கொள்ளாமல் நியமத்துடன் செய்யப்படும் நித்திய, நைமித்திக, விசேஷ கர்மாக்களை பகவானின் திருவாராதனம், தவம்,தானம் யாகம் முதலியனவாக வகுத்து அனுஷ்டித்தல்.

2. ஞானயோகம்:- எம்பெருமானுக்குச் சரீரமாகத் தன் (ஜீவாத்ம) ஸ்வரூபத்தை அறிந்து எப்போதும் அதனையே சிந்தித்திருத்தல்.

3. பக்தியோகம் :- இச்சரீரம் அழியும் வரை எம்பெருமானைச் சிறிதும் இடைவிடாமல் தியானித்திருக்கும் நிலை. இது மோக்ஷத்திற்கு நேரான உபாயமாகும். இது செய்வதற்கரியது. ஆதலின், இதனை விட்டுத் தவிப்பவர் கைப்பற்றும் சுருக்கமானஎளிய உபாயமே, ப்ரபத்தி-சரணாகதி எனப்படும். இதனைச் செய்பவர்க்கு பக்தியில்லாவிட்டாலும், அதனிடத்தில் எம்பெருமான் தானே, நின்று அப்பக்தி கொடுக்கும்பயனைத் தானே தருகிறார். ஆகவே, பக்தி யோகமும்-ப்ரபத்தியும் எம்பெருமானின் அருள் வாயிலாக மோக்ஷத்திற்கு நேரான உபாயங்களாகின்றன.

## 36. ப்ரபத்தி யோக்யாதிகாரம்:

ப்ரபத்தியை அனுஷ்டிக்க ஓர் ஜாதிக்கட்டுப்பாடுமில்லை. திடமான கருணையாளனும் சேதனரை வாழ்விக்க முயலும் அழிவில்லாதவனும் உலகின் காரணமுமான எம்பெருமான் அந்தணன் முதல் அந்தியர் வரை எல்லா மக்களும் ஸம்ஸார தாபத்தால் துவண்டு வேறு காவலரோ பயனோ அற்றநிலையில் சரணடையும்முறையை அவனடியாரான நம் ஆசார்யர்கள் அறிந்து நமக்கு அறிவித்துள்ளனர்.

## 37. பரிகர விபாகாதிகாரம்:

குறிப்பிட்ட அங்கங்களுடன் ப்ரபத்தியை யனுஷ்டித்தவர், வேறு தெய்வத்தையே நாடமாட்டார். நமக்குச் சிறிதும் சம்பந்தம் இன்றி, நமக்கு நிகரானவர் என்றுசொல்லும்படி நிற்கும் பிற தெய்வங்களைப் பார்த்து, 'எமது ஸம்ஸாரத் துயரத்தைத் தீர்ப்பீராக' என்று இரக்கும் தவறு நேராதவாறும், 'இது நம்மால் இயலுவதா?' என்று ஐயுறுவதாகிய தீய நிலைகளையும், துணையாய் நிற்கும் சர்வேச்வரனை நாம் சரணடைய வேண்டிய வகை பற்றியும் நம்மிடம் அன்புமிக்க ஆசார்யர்கள் உபதேசித்துள்ளனர்.

## 58. ஸாங்கப்ரபதனாதிகாரம்:

எம்பெருமானின் திருவடிகளிலே ஜீவாத்மா தனது ஸ்வரூபத்தையும் தன்னைக் காக்க வேண்டும் பொறுப்பையும், அதன் பயனையுமெ ஒப்படைப்பதே 'ப்ரபத்தி'எனப்படும். வேதாந்த வல்லுனர்களான நம் ஆசார்யர்கள் சேதனனைக் காத்துஅனைவர்க்கும் உட்புகுந்து ஆட்டி வைக்கும் (அந்தர்யாமி) எம்பெருமானின்

இயல்பை நீ மறவாதே என்று உபதேசிப்பதுடன் நீண்ட காலமாகவே நம்மைப் பெறவே ஊற்றமுடன் அளவற்ற கருணை கொண்ட அவ்வெம்பெருமானின் திருவடிக்கீழ் நம் பொறுப்பு அற்றுப் போக வேண்டி நம்மை- அடைக்கலப் பொருளாய்ச் சமர்ப்பித்தனர்.

**59. க்ருத க்ருத்யாதிகாரம்:-**

ப்ரபத்தி செய்தவன் மோக்ஷ பலனுக்காகச் செய்ய வேண்டிய வேறு செயல் இல்லாமையால் கவலையற்றிருக்க வேண்டும். பக்தர்களுக்கு மோக்ஷம் கொடுத்த பின்னரும் இன்னும் என்ன பயனைக் கொடுக்கலாம் என்று சிந்தித்திருக்கும் வரதராசப் பெருமானின் அருளால் முதலிலேயே காக்கப்பட வேண்டுமென்று ஏற்கப்பட்ட ப்ரபந்நர், மன்னர்களாயும் நித்யஸூரிகளாயும் அவர் தலைவனான எம்பெருமானின் பரமபதத்திலேயே கருத்தைச் செலுத்துபவர்களாயும், பரமஹம்சர்களாகவும் (உயர்ந்த யோகிகள்) அன்னம் போல் சாரத்தையே மேற்கொள்பவர்களாயும் பற்பல வேள்விகளையும் முடித்தவர்களாயும் போற்றும் நிலையைப் பெறுவார்கள்.

**60. ஸ்வநிஷ்டாபிஜ்ஞாநாதிகாரம்:-**

ரஹஸ்யார்த்தங்களையறிந்து ப்ரபத்தி செய்தவனுக்கும், பல செயல்கள் ஏற்படக் காணலாம். 'ஸ்வநிஷ்டை' என்பது ஜீவாத்மாவின் ஸ்வரூபம், உபாயம், புருஷார்த்தம் இவற்றைப் பற்றிய உறுதியானஜ்ஞானம். தன்னிடம் தோன்றும் பற்பலவிசேஷமான செயல்களால் தன்னிடம் அந்த நிஷ்டை இருப்பதாக அறிந்து மகிழ்தல்.

## 1. ஸ்வரூப நிஷ்டையின் குறிகள்:-

தன்னை ஓர் அன்னியன் அவமதித்தாலும், அது தன் ஆன்மாவி லொட்டாதென்றெண்ணி வருந்தாதிருத்தல், தன்னை அவமதிப்பதால் பிறர் பாவத்தை ஏற்கிறார் என்பதால் அவர் பால் இரக்கமுடைமை, தான் நினைத்துக் கொள்ளத்தக்க தன் குற்றங்குறைகளை எடுத்துக் கூறி நினைவூட்டியதற்கு அவர்களிடம் நன்றி கொள்ளுதல், பிறர் தம்மையிகழ்வது எம்பெருமானின் தூண்டுதலாலேயே-யென்றுஉணர்ந்து அவர்களிடம் வருந்தாமை; தன் குற்றத்தைப் பிறர் கூறுதலால் பாவம்கழிகின்றதென்று மகிழ்தல் முதலியனவாம்.

## உபாய நிஷ்டையின் அடையாளங்கள்:-

எம்பெருமானே நமக்கு அடைக்கலமென்று நினைத்தல், மரணத்தைப் (ம்ருத்யு என்ற இங்குள்ள சொல் எமனை குறிப்பதாகக் கொள்ளாமல் ம்ருத்யுக்கும், ம்ருத்யுவான கால காலன் எனப்படும் ஸ்ரீந்ருசிம்மனை குறிப்பிடுவதாகச் சான்றோர் கூறுவர். ப்ரபன்னரான வைணவர் எமனுக்கு வசமாதல். அவர்களுக்கு நரகத்தில் விழல் ஏது? என்று பகவத் தியான சோபானமும் கூறுகிறது) பிரியமான விருந்தினராக எண்ணி மகிழ்தல், எம்பெருமான் நமக்குக் காவலன் என்று உறுதியாய்த் தேறி இருத்தல், ப்ரபத்திக்குப் பின்னர் மோக்ஷபலன் கருதி வேறு உபாயங்களை நாடாமை, தீமைகளை விலக்கி நன்மைகளைத் தருவது எம்பெருமான் பொறுப்பு என்றிருத்தல் என்பனவாம்.

**புருஷார்த்த நிஷ்டையின் அடையாளங்கள்:**

உடலைக் காப்பதில் அதிகப் பற்றின்றி எல்லாமே எம்பெருமானின் ஸங்கல்பத்தாலேயே நடப்பவையென்று தெளிந்து சாஸ்திர விரோதமில்லாத போக போக்யங்கள் தன் முயற்சியின்றி கிட்டினால் தன் கர்மம் கழிகிறதென்று எண்ணி அவற்றை விலக்கியொழிக்காமல் அனுபவித்தல்: இன்பத்தால் மகிழாமலும், துன்பத்தால் மனம் கலங்காமலும், சிறந்த பேரின்பமான எம்பெருமானின் கைங்கர்யத்தில் (பணி விடைகளில்) ஆவலுள்ளவனாதல், எம்பெருமானை விரைவில் அடைய வேண்டுமென்ற-வுணர்ச்சியென்பன.

இத்தகைய ஸ்வ நிஷ்டையடையப் பெற்றவர் நித்ய ஸூரிகளைப் போல மகிழ்ந்திருப்பர்.

**61. உத்தர க்ருத்யாதிகாரம்:-**

பூமியில் பிறக்கும் ஒவ்வோர் மனிதனும், தேவர், பித்ருக்கள், ரிஷிகள் என்பார்க்குக் கடனுடனேயே பிறக்கின்றான். வேள்விகள் செய்வதால், தேவர்களின் கடனும், வேதமோதுவதால் ரிஷிகளின் கடனும், நற்புதல்வரைப் பெறுவதால் பித்ருக்களின் கடனும், தீருகின்றன. ப்ரபத்தி செய்தவனுக்குக் தாமே இக்கடன்கள் கழிந்து விடுகின்றன. பிரபந்நன் எம்பெருமானின் கைங்கர்யத்தாலேயே தன் பொழுதைப் போக்குபவனாகிறான். துவாரகை மன்னனும் கண்ணன் தம்மை அடைக்கலப் பொருளாய் ஏற்றவுடன் தம் மூவகைக் கடன்களையும், தீர்த்தவர்களும் திவ்யப் பிரபந்தத்தை அறிந்தவர்களுமான பாகவதர்கள், தடையின்றியென்றும் நித்யஸூரிகள்வேண்டியன்புடன்

இயற்றும் கைங்கர்யங்களனைத்தையும் இம்மண்ணுலகிலேயே மகிழ்வுடன் பெறுவராம்.

**62. புருஷார்த்த காஷ்டாதிகாரம்:-**

பகவானின் கைங்கர்யத்தை விட பாகவதர்கட்குச் செய்யும் கைங்கர்யமே (தொண்டு) அவன் திருவுள்ளத்திற்கு மிகவும் உவப்பைத் தரவல்லது. வேதமறிந்தபாகவதர்கள் வியப்பை அடையுமாறு விளக்கும் கல்யாண குணங்களையுடைய எம்பெருமான் வகுத்தவாறு நாம் பாகவதர்களின் அடிமையை அன்புடன் ஏற்று, அழியாத வேத சாஸ்திரங்களால் நீதியுடன் நிலைநாட்டப் பெற்ற ஒழுக்கத்தைவிடாமல் கடைப்பிடிப்போமாக.

**63. சாஸ்த்ரீய நிகமனாதிகாரம்:-**

ப்ரபந்நன், பகவானின் கைங்கரியத்தை (தொண்டுதனை) ஆசையுடன் செய்தாலும், அதனை உபாயம் என்றெண்ணாமல் சாஸ்திர முறைகளை மீறாமலே செய்யவேண்டும். இது 'நன்று, தீது' என்பவற்றைக் காட்டிய நான்கு வேதங்களால் கூறப்படும் வழிகளிலேயே நித்ய ஸூரிகள்போல் கைங்கர்யத்தில் ஈடுபட்டோம். இந்த ஸம்ஸார தசையில் ப்ரக்ருதி ஸம்பந்தமே இருள்மிக்க இரவாகையால், திரும்பத் திரும்ப நிறையும் இருளை நீக்க, வேதமென்னும் சந்திரனின் ஒளியாகிய ஸ்ம்ருதிகளைத் தவிர வேறு உபாயமுமுளதோ?

**64. அபராத பரிஹாராதிகாரம்:-**

ப்ரபத்திக்கு முன் செய்த பாவங்கள் யாவும் ப்ரபத்தியால் அழிந்துபோம். ப்ரபத்திக்குப் பின் சூழ்நிலை காரணமாக ஆபத்துக் காலங்களில் அறிந்து செய்யும் பாவங்களும், அறியாமல் செய்யும் பாவங்களும் தாமே

ஒழிந்து விடும். ப்ரபந்நன் ஆபத்து ஒன்றுமில்லாதபோதும் அறிந்துசெய்யும் பாவங்கள் பிராயச்சித்தங்களால் அழியும். பாவம் செய்ய நேர்ந்ததற்கு வருந்தினால், கால் பங்கு பாவமும், பிறகு பாவம் செய்யாது நிறுத்தி விடுவதால் கால் பங்கும் பிராயச் சித்தம் செய்ய முயல்வதால் கால் பங்கும், பிராயச் சித்தத்தால் கால்பங்குமாக முழுப் பாவமும் நீங்கி விடும். சிறந்த பிராயச் சித்தமானது மறுபடி ப்ரபத்தி செய்வதே. இது ப்ராயச் சித்தப்ரபத்தியெனப்படும். இதனைச் செய்யாதவர் இறப்பிற்கு முன்பே சிற்சில தண்டனைகளைப் பெறுவர். ஆக எவ்வகையிலும் ப்ரபந்நனுக்கு நரகமோ மறு பிறவியோ கிடையாது.

தம் வல்வினைக்கு எம்பெருமானின் இரு மலரடிகளையும் திடமான உபாயமெனப் பற்றிய ப்ரபந்நர்களைப் போல்;ப்ராயச்சித்த ப்ரபந்நர்களும் வளரும் தீவினைகளைத்தாமே விட்டிடுவர். பின்னர் தாழ்ந்த நிலை ஒழியுமாறு எம்பெருமானின் அருளாகிற தேன் வளரும். அதனால் கவலை நீங்கப் பெறுவர்.

## 65. ஸ்தான விசேஷாதிகாரம்:-

ப்ரபந்நர் வசிப்பதற்கு பாகவதர் வசிக்கும் இடமே உரியதாகும். அதுவே சிறந்த புண்யஸ்தலமாகும்.

ச்ரியப்பதியுறையும் வைகுந்தத்தையடைய ப்ரபத்தி செய்தவர்- இப்புவியில்வசிக்குமிடமே- தவவனம் மிக்க இமயமலையும், கங்கை. காவிரிக் கரையும் கடல் நடுவிலுள்ள ச்வேதத்வீபமும் பல்வேறு புண்ய க்ஷேத்ரங்களும் பரமபதமும் போன்ற நல்ல ஸ்தலமாகும்

**66. நிர்யாணாதிகாரம்:-**

இத்தகைய ப்ரபந்நர் இவ்வுடலை விட்டு வெளியேறி மோக்ஷம் செல்ல இடம், காலம், நிமித்தங்கள் போன்ற கட்டுப்பாடுகள் இல்லை. சேதனனின் இதயத்திலிருந்து 101 நாடிகள் கிளம்புகின்றன. அவற்றுள் 100 நாடிகள் வழியே வெளியேறுபவர் பிற உலகங்களைச் சார்வர். தலை நடுவேயுள்ள மூர்த்தன்யநாடியால் ப்ரபந்நர் வெளியேறி அர்ச்சிராதி வழியே பரமபதம் சேருவர். இதனை "ஸுஷும்னை" எனவும் 'ப்ரஹ்ம நாடி'யெனவும் கூறுவதுண்டு. ப்ரபந்நர் புறப்படும் தேசமும், காலமும் நிமித்தமுமே மங்களகரமானவையாம். 'இதுகூடாதெ'ன்று நியமமேதுமில்லை.

**67. கதி விசேஷாதிகாரம்:-**

மோக்ஷம் செல்பவர் அர்ச்சிராதி வழியிலே சென்று நடுவில் கிட்டும் போகங்களைப் பெற்றுப் பின் பரமபதம் ஏகுவர். சரீரத்தை விட்டு வெளியேறும் ப்ரபந்நர், சூக்ஷமமான உடலுடன் நடந்து செல்ல, அக்னி, பகல்தேவதை, சுக்லபக்ஷம், உத்தராயணம், ஆண்டு, வாயு, சூர்யன், சந்திரன், மின்னல், வருணன், தேவேந்திரன், பிரஜாபதி, என்னும் தேவர் வழிகாட்டி அழைத்துச் செல்ல நடுநடுவே போகங்களைப் பெற்று, எழில்மிக்க பரமபதத்தை அடைவார்கள். அக்னி முதலிய தேவதைகளை ஆதிவாஹிகர்கள் என்றழைப்பர். இவ்வாறு செல்லும் வழி அர்ச்சிராதிமார்க்கம் எனப்படும்.

**68. பரிபூர்ணப்ரஹ்மானுபவாதிகாரம்:-**

பரமபதம் சேர்ந்தவர் என்றும் இங்கு திரும்பாமல் எம்பெருமானை அனுபவிப்பர். அவ்விடம் செல்பவர்,

எல்லா சேதனர்களிடமும் அவர்கள் செய்யும் சிறிய உபாயத்தையும் பெரிதாயேற்று மனம் மகிழ்பவனும், திருமுடியில் திருத்துழாய் அணிந்தவனுமான திருமாலையடைந்து, அவன் கைங்கர்யத்திலே இவர்க்குரியபங்கை இவர் பெற வேண்டுமென்று விரும்பிய ஆசார்யர்களின் திருவடிகட்குக் கீழ் மாற்றமின்றி, மேன்மேலும் வளரும் பகவானின் அனுபவத்திலே மகிழ்வுடன் என்றும் ஈடுபடுவர்.

## 69. ஸித்தோபாய சோதனுதிகாரம்:-

ஸித்தோபாயம்என்பது நம்மால் செய்யப்பட வேண்டியதன்றி முன்பே நிலையாயுள்ள உபாயமான எம்பெருமான். (ஸித்தம்- நிலையானது)ஸாத்யோபாயமாவது - நம்மால் செய்யப்படும் பக்தி-ப்ரபத்தி முதலிய உபாயங்கள். இவ்விரண்டும் ஸித்தோபாயமாகிய ஸ்ரீமந் நாராயணனை உவக்கச் செய்து பயனளிக்குமாறு செய்கின்றன. பரமபுருஷன் எந்த சேதனனைத் தேர்ந்தெடுக்கிறுனோ அவனுல்தான் பரமன் அடையத் தக்கவன் என்பது உபநிஷத்துக்கூற்று. இதனுல் கர்ம பரவசனுன சேதனனை அவன் செய்யும் கர்மங்களால் மகிழ்ந்த எம்பெருமான் தேர்ந்தெடுக்கிறுன். கர்மங்கள் என்னும் அளவுகோல் நிமித்தம் இல்லையெனில், சகல சேதனர்களுக்கும் மோக்ஷம் ஸித்திக்க வேண்டியிருக்கும். அந்த கர்மம் என்பது பக்தி அல்லது ப்ரபத்தியேயாகும் என்பது ஆசார்யர்களின் கருத்து. இத்தகைய உபநிஷத்தின் கொள்கைப்படி ஆராய வேண்டிய முறையிலே தெரிந்து உலகைக் காத்தளிக்கும் எம்பெருமானின் கருணையால் ஓர் உபாயத்தைப் பின்பற்றி நல்வாழ்வினைப் பெறுகின்றோம்.

### 71. ப்ரபாவ வ்யவஸ்தாதிகாரம்:-

ப்ரபந்நனின் பெருமையை சாஸ்திரங் கொண்டே இசைய வேண்டும். எம்பெருமான் வீறுகாத தன் கருணையால் நிலைபெற்று நிற்கும் ப்ரபந்நனைத் தன் போன்ற ஸ்வபாவத்தைக் கொடுத்துத் தன்னைப் போலவேயாக்குவதில் மிக்க ஆவலுள்ளவன், அதிசயிக்கத் தக்க செயல்களைப் புரிபவன். அவனருளிய சரமச்லோகத்தின் கருத்தையுணர்ந்த வியாஸர் போன்ற மஹான்கள், வேதாந்தத்தின் நீதிமுறைகள் சிதைவதை ஏற்கமாட்டார்கள் என்ற உண்மையை நம் ஆசார்யர்கள் அருளியுள்ளனர்.

### 72. ப்ரபாவ ரக்ஷாதிகாரம்:-

ப்ரபந்தர்கள், ஜாதி முதலியவற்றால் தாழ்ந்திருப்பினும், அவர்களின் பெருமை அளவிடற்கரியது. உண்மையே பேசும் வேத, வேதாந்தங்களில் போற்றப்படும் எம்பெருமானின் பெருமை அளவிடற்கியலாதது. ஆதலின், அவன் திருவடிகளைச் சரணடைவார்க்கு சாதி முதலியவற்றால் தாழ்வு இருப்பினும் அவர்களின் பெருமையும் அளவிடற்கியலாததாம். என்ற இச்சொல்லை நம் ஆசார்யர்கள் ஓரவஞ்சனையின்றி கூறியுள்ளனர்.

### 73. மூல மந்த்ராதிகாரம்:-

திருவெட்டெழுத்து மாமந்திரத்திற்கு முக்கியப் பொருள்-நாம் எம்பெருமானுக்கே அடியவரென்பதும் அவனைச் சரணடைதலும் அவன் கைங்கர்யத்தைப் பிரார்த்திப்பதுமாகும். உயர்ந்த ரக்ஷகனாகிய எம்பெருமானைத் தவிர்த்த பிறருக்கு உரிமையின்றி, அறிவின் உறைவிடமாய் அறியாமை நீங்கி, வேறு ஒரு

பாபமுமில்லாமல், அவனால் காக்கப்பட வேண்டிய பொருளாய் அவ்வெம்பெருமானின் பாதங்களையே சரணமாகப் பற்றி,நித்யஸூரிகளும் விரும்பும் அவன் கைங்கர்யங்களையெல்லாம் நாம் வேண்டுவதாக திருவஷ்டாக்ஷர (எட்டெழுத்துள்ள) மந்திரத்தை அனுசந்திக்கிறோம்.

## 74. த்வயாதிகாரம்:-

ஸ்ரீமந் நாராயணனி திருவடிகளில் ப்ரபத்தி செய்தலும் அவன் திருவடிகளில் கைங்கர்யத்தைப் பிரார்த்தித்தலும் தீமைகள் ஒழிவதை வேண்டுவதுமே த்வய மந்திரத்தின் பொருளாகும். வேதத்தில் இரண்டு வாக்கியங்களை ஒன்று சேர்த்து கருணையினால் நமக்கு உதவிய எம்பெருமானின் இரு திருவடிகளையும் உபாயமாகப் பற்றி ச்ரியப்பதியினை (ஸ்ரீமந் நாராயணனை) நெருங்கி இன்பம் பெருகும் தேசமாகிய பரமபதத்தில், கைங்கர்யங்கள் அனைத்தையும் நாம் செய்து அனுபவிக்கிறோம் என்ற உறுதியான ஜ்ஞானத்தோடு அவனை அடையும் வகையை இம்மந்திரத்தில் அனுசந்திக்க வேண்டும்.

## 75. சரமச்லோகாதிகாரம்:-

இம்மந்திரத்தில் மற்ற உபாயங்களை விட்டு ப்ரபத்தி உபாயத்தையே மேற்கொண்ட சேதனனின் ஸகல பாவங்களையும் எம்பெருமான் போக்கிடுவான் எனப்படுகிறது. மனவொருமையோடு செய்ய வேண்டிய பக்தியோகம் முதலியன செய்ய முடியாமல், கண்ணனின் திருத்துழாய் சூடிய திருவடிகளே மெய்யான உபாயமென்று விரைந்து பற்றி, அதனால் ஒழிந்த பாவத்தின் திரும்பி வராவண்ணம் வளைத்து, நம்மை வசப்படுத்துவதும்

கண்ணனின் திடமான கருணையினுல் தோன்றியதுமான சரமச்லோகத்தால் அஜ்ஞானம் நீங்கப் பெற்றோம்.

### 76. ஆசார்யக்ருத்யாதிகாரம்:-

ஆசார்யர்கள் ரஹஸ்யமான பொருட்களைச் சேமித்து வைத்திருந்து தாம் பரமபதம் ஏகுமுன் தகுதி வாய்ந்த சீடர்களுக்கு அவற்றை உபதேசிப்பர். அஜ்ஞானமற்ற அவர்கள் பரமபதம் செல்ல விரும்பியதால் இவ்வுலகமெல்லாம் இருள் நீங்கி எம்பெருமானின் இரண்டு திருவடிகளையும் உபாயமாகப் பற்றி உய்ய வேண்டுமென்று எண்ணுவதால் கருணை நிரம்பிய உள்ளத்தோடு விவேகம் நிரம்பிச் செய்யத்தக்க சிறந்த கைங்கர்யமாகிற செல்வம் வளர்ந்து, உயர்ந்த, சிஷ்யர்களிடம் அழியாத ஸம்பிரதாயமாகிற தீபத்தை ஏற்றி வைப்பர். இதுவே அவர் தம் கடமையாம்.

### 77. சிஷ்யக்ருத்யாதிகாரம்:-

ஆசார்யன் சிஷ்யனுக்குச் செய்யும் உதவிக்கு மாறாக உதவியை யாரும் செய்தல் அரிது. உள்ளத்திலே ஞானவிளக்கை ஏற்றி அறியாமையென்னும் இருளை நீக்கியருளிய ஆசார்யர்களின் உதவிக்குக் கைம்மாறு செய்வதென்பது எம்பெருமாலுைம், இயலாததாம். ஆதலின், சிஷ்யர் செய்யக் கூடியது யாதெனில், ஆசார்யனைப் போற்றிப் புகழ்வதும், உள்ளத்திலே தியானிப்பதும், அவரது நிறைந்த புகழைப் பறைசாற்றி மேன்மேலும் வளர்ப்பதுமே யவர் பெற்ற உதவிக்குச் சிறியதோர் கடமையாகும்.

## 78, 79 நிகமநாதிகாரம்:-

எம்பெருமானின் சரணாகதியைப் பற்றி உபதேசித்த வேதாந்திகளான நம் ஆசார்யர்கள் பக்கம் சிறந்த அறிவைப் பெற விரும்பும் சிஷ்யர்களுக்கு முன் ஆசார்யர்களிடம் பெற்ற விவேகத்தால் கலக்கம் தெளிதலும், மூன்று ரஹஸ்யங்களிலும் தன்னை எம்பெருமானுக்கே அர்ப்பணித்துத் தன் பற்று நீக்குதலும், பணிந்தவர்கட்கு உபதேசிக்கக் காரணமான நிகரிலாக் கருணை போன்றவற்றையும், உள்ளவாறு உணர்ந்த, நாம் அற்ப விஷயங்களில் ஏன் ஈடுபடவேண்டும்? சிறந்த குணங்களில் தவறாத சிஷ்யர்களுக்கு ஆசார்யர்களும் எம்பெருமானும் தாமே கருணையுடன் நலன்களை நல்குவதாய் நான்கு வேதக் கருத்தையும் ஆராய்ந்து செவிக்கு அமுதமெனப் பாடிய இந்த 32 பாடல்களும் முத்தமிழும் விரவிய நம் மொழிக்கே அணியாகும்.

இப்பாடல்களின் கருத்தே ரஹஸ்யத்ரயஸாரத்தின் சுருக்கமாகும். இதன் அனுபந்தமாக அதிகார சங்கிரஹத்தில் மற்றும் சில பாடல்களும் உள்ளன.

அவற்றின் கருத்து வருமாறு:-

## 80. தத்வத்ரய சிந்தனாதிகாரம்:-

வேத விழுப்பொருளான கண்ணன் ஜீவாத்மாவை கௌஸ்துப மணியாகவும், அழியாத மூலப்ரக்ருதியை ஸ்ரீவத்ஸமென்னும் மறுவாகவும் மஹத் என்ற தத்துவத்தை 'கௌமோதகீ'என்ற கதையாகவும், ஜ்ஞானத்தை நந்தகம் என்னும் கத்தியாகவும் அஜ்ஞானத்தை அதனுறையாகவும், தாமஸம், ஸாத்விகம் என்னும் அஹங்காரங்களை முறையே சார்ங்கமாகவும்

(வில்) பாஞ்சஜன்யமாகவும் (சங்கு) மனத்தை ஸுதர்சனமென்னும் சக்ரமாகவும் பத்து இந்திரியங்களையும் அம்புகளாகவும், தன்மாத்ரங்களைந்து, பூதங்கள் ஐந்தையும், வனமாலையாகவும், இவ்வாறு, சகல தத்துவங்களையும், சேதன அசேதனங்களையும் தனக்கு ஆயுதங்களாகவும், அணிகலன்களாயும் பெற்று கரிகிரி (காஞ்சி-அத்திகிரி) மேல் நின்று உலகனைத்தையும் காக்கின்றான்.

## 8.1.83. ஸ்தான விசேஷாதிகாரம்:-

ப்ரஹ்ம தேவனால் இக்ஷ்வாகுவிற்குக் கொடுக்கப்பட்டு அவன்வம்சத்துமன்னர்களான-இராமபிரான் வரை -யிருந்தவர்களால் ஆராதிக்கப்பட்ட பின் விபீஷணனுக்கு அளிக்கப்பட்டு ப்ரணவாகார(ப்ரணவம்போல்தோற்றமுள்ள) விமானத்தினடியில், அவனால் பிரதிஷ்டை செய்ய பெற்ற கோயிலாய் விளங்கும்-ஸ்ரீரங்கமே வினையனைத்துத் தீர்க்க வல்ல தலமாம். அடுத்தபடி நமக்குக் கண்ணனடிகளைக் காட்டி, வினைகளைத் தீர்த்து, பரமபதமாகக் காட்சி தருவதும், புண்ய தீர்த்தங்கள் நிரம்பியதும், புண்ணியத்தினிருப்பிடமான வெற்பாய் பரமபதத்தின் இன்பங்களையெல்லாம் தருவது, விண்ணவரும் மண்ணவரும் விரும்புவதும் வேதத்தால் போற்றப்படுவதுமான வேங்கடமாமலை நம் வாசத்திற்கு ஏற்ற இடமாகும்.

பின்னர், காஞ்சி க்ஷேத்ரம் இத்தகைய சிறந்த வாசஸ்தலமாகும். இது அடியார்களின் பாவங்களை நீக்க வல்ல சக்ராயுதம் போன்றது - இராமனும், கண்ணனும் உகந்த இப்பதியேயாகும் என்பர்.

## 84. திருமந்த்ராதிகாரம்:-

எட்டெழுத்துத் திருமந்திரத்தை ஜபிப்பவர்கட்குப் பெறமுடியாத பயன் ஏதுமில்லை. இம்மந்திரம், எட்டு உருவங்களைக் கொண்ட சிவபிரானையும், எட்டு கண்களையுடைய நான்முகனையும் எட்டுத் திசைகளையும் அவற்றின் எட்டுப் பாலகர்களையும் (தலைவர்களை) எட்டு தத்துவங்களையும், எட்டுக் குல பர்வதங்களையும் படைத்த எண் குணத்தவனை எம்பெருமானைப் போற்றிப் புகழ்வது. இம் மந்திரத்தைப் பொருளுணர்ந்து தியானிக்கும் எட்டுகுணம் படைத்த புத்தியையுடைய விவேகிகட்கு புலனடக்கம் போன்ற எட்டு குணங்களும் எட்டு சித்திகளும், எண்வகை பக்திகளும் எட்டு வகை யோகங்களும், அணிமா முதலிய எட்டு ஐச்வர்யங்களும். எட்டெட்டு (64) கலைகளின் அறிவும் எட்டுக்கு மேலான சுவைக்கும் (9) நவரஸங்களும் எளிதில் கிட்டுவனவாம்.

## 85-88. சரம ச்லோகாதிகாரம்:-

சரமச்லோகாதிகாரத்தின் பொருள் தெரிந்து, ப்ரபத்தி செய்தவனுக்கு சம்சாரபந்தம் நீங்கிவிடும். எம்பெருமான் பக்தியோகம் முதலியன செய்ய வியலாத அதிகாரிகளுக்கு ப்ரபத்தி செய்ததும் பாவங்களைப் போக்கி முக்தியைக் கொடுப்பான். எம்பெருமானையே உபாயமாகவும் உபேயமாக (பலனாக)வும் கொண்டு சரணடைபவனுக்கு சம்சார துக்கங்கள் அனைத்தும் அழிந்தே போகும். அவன் மோக்ஷம் தர விரும்பும்போது நாம் அதைப்பெற பின்வாங்கலாகாது. நான் மோக்ஷம்தர விரைந்தாலும், சேதனன் சம்சாரத்தை விட மனமின்றி இன்றுவேண்டாம்; நாளை பார்ப்போம்; என்று காலம் தாழ்த்துகிறானே:

என்னே இவன் அறியாமை! என்று எம்பெருமான் ஏளனம் செய்கிறனும்.

**89. ஆசார்யக்ருத்யாதிகாரம்:-**

த்வாபரயுகத்தில் ஒருநாள் இரவில் முதலாழ்வார்கள் மூவரும் திருக்கோவிலூரில் ஒரு வீட்டில் மழைக்காக இடைக் கழியில் ஒதுங்க, எம்பெருமான் இவர்களின் திருமேனி ஸம்பந்தத்தையும், திருவந்தாதிகளின் தோற்றத்தையும் விரும்பி, அவர்களிடையே வந்து நெருக்க, இவர்களும் அவனைக் கண்டு கொண்டு, மூன்று திருவந்தாதிகளைப் பாடினர். அவ்வந்தாதி நூல்கள் நாட்டின் அறியாமை இருளை நீக்க, வல்லவை. ப்ரபத்தி மார்க்கத்தை விளக்குபவை.

**90.95. நிகமனுதிகாரம்:-**

எம்பெருமான் அரங்கநாதனின் திருவடிகளது பெருமை அளவிடற்கரியது. நற்குணங்கள் யாவும் அமையப் பெற்றவரே நம் சம்பிரதாயத்தில் சேருவர். இந்த ப்ரபந்தத்தில் கூறிய வழியே சிறந்ததென்பது ஆசார்யர்கள் ஏற்றதாகும். சரமச்லோகத்தின் கருத்தினை நன்குணர்ந்தால், ஒரு கவலையுமின்றி வாழலாம். எம்பெருமான் உகந்த இப்பிரபந்தத்தைப் பாராயணம் செய்பவர்க்கு எல்லாச் சிறந்த நிஷ்டைகளும் உண்டாகும். வெள்ளைப்பரி (குதிரை) முகத்தவரான ஸ்ரீஹயக்ரீவப் பெருமான் ஆசார்யனுகத் தோன்றிஉபதேசம் எனும் சாதனத்தால் எம் உள்ளத்தில் எழுதியவற்றைத் தொகுத்து நாம் பட்டோலையிலெழுதினேம். இதில் குற்றமேது? இதன் பெருமையைக் கண்டு கூர்மதியினர் ஏற்றுக் கொண்டாடினுலும் எம் உள்ளம் அதற்காக ஏதும் மகிழாது.

குற்றமுள்ளது என்று இகழ்ந்தாலும் பொறாமையாளர் வெறுத்தாலும், சிறிதும் இகழாது, நாம் அவர்களை வெறுக்கவும் மாட்டோம். ஸ்ரீஹயக்ரீவப் பெருமாள் ஆசார்யன் மூலமாக உபதேசித்த விஷயங்களே இந்தப் பிரபந்தத்தில் அமைந்தவையென்பதாம்.

பி.கு. (தலைப்புகளில் உள்ள எண்கள் அதிகார சங்கிரகத்தின் பாக்களுக்கு தேசிகப் பிரபந்தத்தில் வ.ந. ஸ்ரீயின் பதிப்பில் கொடுக்கப்பட்டுள்ள தொடர் எண்களாகும்.)

## திருமந்திரச் சுருக்கு

இப்பிரபந்தம் அறுசீராசிரிய விருத்தத்தில் அமைந்த பதினொன்றுவது பிரபந்தமாகும்.

சேதனர்கள் மேனிலை யெய்ய ,வீடு பேறுக்குரியவராக - வழி வகுக்கும் மறை பொருட்கள் மூன்று. அவை திருமந்திரம், துவயம், சரம ச்லோகம் என்பனவாம். இவை ஒவ்வொன்றும் தனிச் சிறப்பு வாய்ந்தன. எல்லா வேதங்களின்-சகல மந்திரங்களின் சாரமானது திருமந்திரம். தீமைகளை நீக்கி நலன்களையெல்லாம் தர வல்லது. எல்லா உபாயங்களையும் பயன்தரத் தக்கனவாக்கும் திறன் கொண்டது. எல்லாச் சமூகத்தவரும், வைதிகமாகவோ, தாந்த்ரிகமாகவோ, ஜபித்துப் பயன்பெறச் செய்வது. சேதனன், அசேதனன், இறைவன் என்னும் மூன்று தத்துவங்களையும் விளக்குவது. பிற மந்திரங்களை எதிர்பாராமல் தானே எப்பயனையும் தரவல்லது. பகவானின் எல்லா மூர்த்திகட்கும் பொதுவானது. ஆழ்வார், ஆசார்யர்கள் போன்ற்ரோரால் அளவிலாது புகழப்பட்டது. திருமங்கை மன்னன் போன்ற்ரோர்க்கு எம்பெருமானே

இதனை (பெருமையை) உபதேசித்து அருளிய வரலாறே இதன் பெருமைக்குப் போதிய சான்றாகும்.

இஃது எட்டு எழுத்துக்களைக் கொண்டதாதலின், திருவஷ்டாக்ஷரம் எனப்படுகிறது. உபநிஷத்து (வேதத்தின் இறுதிப்பகுதி) இதனை ஓதுவோரின் பெருமையையும், இதன் பொருளான ஸ்ரீமந்நாராயணனின் சிறப்பினையும் விளக்கும். மூன்று பதங்களின் பொருளையும் விளக்கிடும் தேசிகனின் நூல்-பிரபந்தம்-"திருமந்திரச் சுருக்கு" எனப் பெயர் பெற்றது. ஸம்ஸாரத்திலே தவிக்கும் சேதனர்களை இரக்கத்துடன் அழைத்துச் செய்யும் உபதேசமே யிம் மந்திரம். இதில், வடமொழி சந்திவிதிகளுக்கேற்ப, முதல் சொல்லாம் பிரணவத்தின் எழுத்தான அகாரம், அதன் மீது தொக்கி நிற்கும் நான்காம் வேற்றுமை உருபு, உகாரம், மகாரம், பின் நம: என்ற நடுச்சொல், நார எனும் சொல் அயனம் என்ற சொல், 4ம் வேற்றுமை உருபு இவற்றின் பொருளையெல்லாம் விளக்கிக் காட்டிப் பின், இவ்வர்த்தங்கள் யாவும், நம் ஆசார்யர்கள் பெரு நிதி போல் தேடி வைத்தனவாகும் என்றும், திருமந்திரச் சுருக்கு என்னும் பிரபந்தம் பத்துப் பாசுரங்களில் விளக்குகிறது.

அனைத்து வேதங்களின் சாரமான இம் மந்திரத்தின் பொருளை நன்குணர்ந்தால் சேதனன், தன்னையும் பரமாத்மாவையும் உள்ளபடி உணர்ந்து, அறியாமை நீங்கிப் பிறவிக் கடலைக் கடக்கலாம். வலம்புரிச் சங்கு போன்ற தோற்றமுடையது இந்தப் ப்ரணவம். இதன் முதலெழுத்து 'அகாரம்' 'அவ்' என்ற வினைப் பகுதியிலிருந்து தோன்றியது. இதற்குக் காத்தல் என்பது பொருளாகும். ஆகவே, இவ்வெழுத்து எல்லாவுலகங்களையும் காக்கவல்ல ஸ்ரீமந்நாராயணனைக் குறிக்கும். இந்த 'அ'

என்பதன் மேல் நான்காம் வேற்றுமையுருபு மறைந்துள்ளது. இது அவ் வெம்பெருமானுக்கே என்று விளக்குவதாய் அவனுக்கே சேஷித்வம் (ஆண்டான் என்ற தன்மை) உள்ளமையை விளக்குவதாகும். எம்பெருமானுக்கே நாம் அடிமை யென்று உணர்வதனுல் அஹங்காரம் நீங்கி இன்பம் பெறுகிருன்.

இரண்டாவதாக உகாரம், தேற்றப்பொருளில் வரும் ஏகாரம் போன்றது. எம்பெருமான் ஸ்ரீமந்நாராயணனுக்கே சேதனன், அடிமை. வேறு எந்த தேவதைக்கும் இல்லை என்று உணர்த்துவது இவ்வுகாரம்.

உகாரம் மற்ருெரு பொருளையும் தரவல்லது. அகாரம் எம்பெருமானைக் குறிப்பது போல் உகாரம் பிராட்டியை உணர்த்துவது. மகாரம் சேதனனைக் குறிப்பது. ஆக அ,உ எனப்படும் பெருமானுக்கும் பிராட்டிக்குமே 'ம்' எனப்படும் சேதனருகிய நான் அடிமை என்று தியானித்தல் வேண்டும் என்பது இந்தப் ப்ரணவத்தின் பொருளாகும். கதிரவனும், அவனொளியும் போல என்றும் விட்டுப் பிரியாதிருப்பது பெருமாளுக்கும் பிராட்டிக்கும் இயல்பு. அவ்வாறு பிரியாதிருந்து உலகை அவர்கள் காத்து வருகின்றனர். அவர்களுக்கே நம்மை அடியவராக அனுஸந்திருத்தல் கடமையென்பதாம்.

மகாரத்தின் பொருள் சேதனன். இருபத்தைந்தாம் தத்துவமானவன் வடமொழி மெய்யெழுத்துக்களில் இருபத்தைந்தாவது மகாரமாகும். ஆதலின், அது ஜீவாத்மாவைச் சுட்டி நிற்கிறது.

ப்ரக்ருதி, மஹான், அஹங்காரம், இந்திரியங்கள் பதினென்று பூதங்கள் ஐந்து, தன்மாத்திரங்கள் ஐந்து, ஆக

இவ்விருபத்திநான்கிற்கும் மேம்பட்டு, வேறுபட்டது சேதனனென்னும் தத்துவம். இவ்வாறே இவன் பரமாத்மாவை விட்டும் வேறுபட்டவன். இவ்வாறு உணராமல் பூதங்கள், இந்த்ரியங்கள் முதலியவற்றின் குவியலாய் நிற்கும் அசேதனமான உடலையே ஆன்மாவென்னு மயங்கி நிற்கும் நிலையை விட்டு ஜ்ஞானஸ்வரூபனுகவுணர்ந்து பரமாத்மாவின் அடிமையாகத் தெரிந்து கொள்ளவேண்டும். மன் என்னும் வினைப்பகுதி நினைத்தல் பொருளது. ஆதலின் ஞானத்தை ஸ்வரூபமாகவுடையவன் என்னும் பொருள் தரும் மன் என்ற அளவுப்பொருளுள்ள வினையால் அணு வடிவின னெனினுமாம். அடுத்து நம: என்ற சொல்லின் பொருள்.

(298) தனதிவை யனைத்துமாகத் தானிறையாகு மாயன்
உனதெனு முணர்த்தி தாராதுமக்குநீருரிமையுற்றீர்
எனதிவை யனைத்தும், யானே யிறையெனும் இரண்டுந்தீர
மநவெனும் இரண்டின் மாரு வல்வினை மாற்றுவீரே.

சேதனர்களே!எல்லாப் பொருட்களும், எம் பெருமானுக்கு அடிமையானவை. அவனே தன் மிக்காரில்லாத தனிப் பெருந் தலைவன் என்று நினையுங்கள். மாறுகத் தாமேயுரியவர் என்றெண்ணி சுவதந்திரர் என்று மயங்காதீர். நீங்கள் உய்வதற்கான வழியையறியுங்கள்.

திருமந்திரத்தில் இரண்டாவது பதம் 'நம' என்பது. ம: என்ற பதத்திற்கு, ஜீவனுகிய எனக்கு என்பது பொருள்.'ந' என்பதற்கு ஒன்றுமில்லை என்று பொருள். ஆகவே, எந்தப் பொருளும் எனக்கு சேஷமன்று

சொந்தமன்று எனப்பொருளை அனுஸந்திக்கிறோம். நான் ஸ்வதந்திரத் தன்மையுடையேனல்லேன் என்றும் பொருள் கொள்வதால் நம் அஜ்ஞானம் நீங்கி தூதீவினைகளும் ஒழியும். ஆதலால், இவ்வாறு தியானியுங்கள் என்பது மேற்கண்ட பாடலின் பொருள்.

அடுத்து நார என்னும்சொல்.

(1)' நர' என்ற சொல் அழிவில்லாதது எனப் பொருள்படும். அழிவு என்னும் பொருளில்' ரீ 'என்ற வினைப் பகுதியிலிருந்து 'ர' என்பது தோன்றுகிறது. அழிவில்லாத ஜீவாத்மா- பரமாத்மா இருவரையும் 'நர' என்பது விளக்கும்.

(2) 'ந்ரு' என்னும் வினைப்பகுதியிலிருந்து 'நர' என்ற சொல் கிளைத்தது என்றுகொண்டால், எல்லா உயிரினங்களையும் நல்வழியில் செலுத்துபவன் என்ற வகையில் இது எம்பெருமானைக் குறிக்கும். அந்த 'நரன்' என்னும் எம்பெருமானைச் சேர்ந்த கல்யாண குணங்கள், திருமேனி முதலிய யாவும் நாரம் எனப்படும்.

(3) நரனிடம் தோன்றியவை நாரங்கள் எனக் கொண்டால் எம்பெருமானைக் காரணமாகக் கொண்ட உலகனைத்தும் அச்சொல்லால் சுட்டப்படுவனவாம். ஆகவே அத்தகைய நாரங்களுக்கு அயனன் (இருப்பிடம்) என்று ஆறும் வேற்றுமைத் தொகையாகக் கொண்டால் உலகனைத்திற்கும் முக்கியமாய் சேதனர்கட்கு உபாயமாயும், பயனும், ஆதாரமாயும் உள்ளவன் எம்பெருமானென்று பொருள் கிட்டும்.

அன்மொழித் தொகையாகக் கொண்டால் நாரத்தை சேதன சமூகத்தைஅயனமாக-ஆதாரமாகக் கொண்டவன்

அந்தர்யாமியாய் எல்லோர்க்கும் உள்ளே புகுந்து நின்று நியமித்து வருபவன் என்று பொருள் தரும். சேதன சேதனங்களுக்கு உறைவிடமானவன் என்றும், அவற்றைத் தமக்கு உறைவிடமாகக் கொண்டவன் என்னும் இருவிதமாகப் பொருள்படுவதாம் நாராயணன் என்ற சொல்.

அடுத்து, நாராயண பதத்தின் மேலேறி நிற்கும் 'ஆய' என்னும் நான்காம் வேற்றுமையுருபு- நாராயணனுக்கே (எம்பெருமானுக்கே) குற்றேவல் புரிவதை விளக்குவதாம். இதனையறிந்திட்டால் சிறந்த குற்றேவல்களை நம் உரிமையாகவும் விரும்பத் தக்க முக்தியின் பயனும் புருஷார்த்தமெனவும் கொண்டு, தீவினைப் பயனை புலன் நுகர்வைப் பெரிதாக எண்ணுமல் பேரின்பம் பெறுவோம். இப்பொருளனைத்தும் நம் பூர்வாசார்யர்கள் சேமித்து வைத்த மறைபொருளாகும். இவ்வாறு கூறிய ஒன்பது பொருட்களையும் உலகம் புகழும் நம் ஆசார்யர்கள் பரமக்ருபையுடன் அருளிப் போந்தனர். "தாம் பெற்ற விண்பம் பெறுக வில் வையகம்"என்ற திருவுள்ளங் கொண்டு திருமந்திரத்தை ஆழ்ந்த பொருள் நுட்பத்துடன் புதையலாய் நமக்கருளினர். இவற்றைச் சுவைத்தவர்கள் தகாதவர்களுக்கு இவற்றைக் கூறமாட்டார்கள். இவ்வாறின்றி தோன்றியவாறு பொருட்களை வெளியிட்டு விலைப் பொருளாக்குபவர் இவற்றை உள்ளவாறு உணர்ந்தவராக மாட்டார் என்பதனை ஸ்வாமி தேசிகன்-

"எண்டிசை பரவுஞ்சீரோ ரெங்களுக் கீந்த வெட்டி
நுண்டவர்நுரைப்பார் போலவொன்பது பொருளுரைத்தோம் மண்டு
நான் மறையோர் காக்கு மாநிதி யிவையனைத்துங்
கண்டவர் விள்ளார் விள்ளக் கருதுவார் காண்கிலாரே."

என்று திருமந்திரச் சுருக்கு என்னும் பிரபந்தத்தை முடிக்கின்றார். கண்டவர் விண்டதில்லை; விண்டவர் கண்டதில்லை எனப் பழமொழியைக் கேள்விப்படுகிறோம். அதன் பொருள், மறுமையையும், எம்பெருமானின் பெருமை, ஸ்வரூபம் கல்யாண குணாதிகளையும் கண்டவர் திரும்பி வந்து இங்கு அவற்றை விளக்க முற்படுவதில்லை. அவ்வாறு விளக்கிக் கொண்டிருப்பவர் நேரில் அவற்றைத் துய்க்கும் பேறு பெற்றிராதவர் என்பதாகும். அதே பழமொழி இவ்விடம் வேறு பொருளில் கூறப்படுகின்றது. நான்மறையோர் காத்துத் தந்த மாநிதியைக் கண்டவரான சான்றோர் (கண்ட கண்ட பேர்களுக்கு அவற்றை) விள்ளுவதில்லை; அவ்வாறு (எளிதில் யாவரிடமும் தகுதி பாராமல்) விண்டு விளக்க நினைப்பவர் (அதன் பெருமைகளையும் தகுதிகளையும்) உள்ளவாறு காணாதவரே என்ற பொருளில் அமைகிறது.

## திருமந்திரத்தின் கருத்துச் சுருக்கம்

அனைத்தையும் காக்கும் ஸ்ரீமந்நாராயணனும் சிறிதும் பிரியாத பிராட்டியும் சேர்ந்திருந்து, அழிவற்று எல்லாவுயிர்களையும் நல்லறிவளித்துப் பாதுகாப்பவன். ஸ்ரீமந் நாராயணன் அழகிய திருமேனியுடன் அளவற்ற கல்யாண குணங்களைக் கொண்டு எல்லாவற்றையும் பாதுகாப்பவன். சேதனர்க்கு உபாயமாயும், பலனாகவும், சேதன சேதனர்கட்கு ஆதாரமாயுமிருந்து, அவற்றினுள் பிரவேசித்து அந்தர்யாமியாய் நிற்பவன்.

சேதனரான நாம் ஞானமேயுருவாயும் குணமாகவும் கொண்டு, அணு வடிவினராய் - எம்பெருமானையும், அசேதனப் பொருட்களையும் விட்டு மாறுபட்ட

தன்மையுடன் அவர்க்கே அடிமையாய்த் தமக்கென ஒரு சேஷமும் (அடிமையும்) பெற்றிராமல் அவனுக்கே வசமாய், சிறிதும் சுதந்திரத் தன்மையற்றவராய் உள்ளவர்கள். அத்தகைய நாம் பிராட்டியுடன் விளங்கும் நாராயணனுக்கே யிடைவிடாத கைங்கர்யம் செய்யக் கடவோம் என்பதே இம்மந்திரத்தின் கருத்துச் சுருக்கம்.

**தூயச் சுருக்கு**

இப்பிரபந்தம் 12 கட்டளைக் கலித் துறைகளாலானது. 13ஆவது பிரபந்தம்

ஒரு காலத்தில் ஸம்ஸாரிகளான சேதனர்கள் உய்யும் வழியை அருளுமாறு பிராட்டி பெருமாளிடம் வேண்டினளாக, உபநிஷத்தில் உள்ள இரண்டு வாக்கியங்களை ஒன்றுகச் சேர்ந்து த்வய மஹா மந்த்ரம் என்ற தொன்றை மந்த்ரங்களுள் இரத்தினமாக அவர் உபதேசித் தருளினர். இதில் முதற் பகுதி உபாயத்தையும், இரண்டாம் பகுதி பலனையும் வெளியிடுகிறது. எம் பெருமானைச் சேதனன் சரணமாக வரித்தலையும், பின் சேதனன் தன் ஸ்வரூபத்தையும், தன்னை ரக்ஷிக்கும் பொறுப்பையும், பலனையும் எம்பெருமானிடம் சமர்ப்பணம் செய்வதையும் இரு பகுதிகள் விளக்குவதால் துவயம் (இரட்டை) என்ற பெயர் ஏற்பட்டது. அம் மந்திரத்தின் பொருளைச் சுருக்கி வெளியிடும் இப் பிரபந்தம் தூயச் சுருக்கு எனப்பட்டது. முதற் பாசுரத்தில் த்வயத்தின் 10 பொருட்களையும் தொகுத்துணர்த்துவார். 1. ஸ்ரீ என்ற சொல் 2. மதுப் என்ற விகுதி 3. நாராயண எனும் சொல் 4. சரணௌ எனும் சொல் 5 சரணம் என்ற சொல் 6. ப்ர எனும் உபசர்க்கத்துடன் கூடிய பத் எனும்

வினைச்சொல் 7. தன்மையொருமை விகுதி 8. பிற்பட்ட ஸ்ரீமந் நாராயண சப்தம் 9. 4ம் வேற்றுமை உருபு 10. நம: என்ற சொல் இவற்றின் பொருட்கள் இங்கு விளக்கப்படுகின்றன.

ஸ்ரீ என்னும் சொல்லின் ஆறு பொருட்கள்:

(304) அருவுரு வானவை தன்னையடைத்திடத் தானடைந்து
வெருவுரை கேட்டவை கேட்பித் தகற்றும் வினை விலக்கி
யிருதலை யன்பதனுலெமை யின்னடி
சேர்த்தருளுந்திருவுடனே திகழ்வார் செறிந் தாரெங்கள்
சிந்தையுளே

(பொருள்) சேதனம், அசேதனம் யாவும் தன்னையடைந்து நிற்க, பிராட்டியாகிய தான் எம்பெருமானையடைந்து, அல்லது எல்லா வஸ்துக்களையுமடைந்து, அவர்களின் அச்சம் நிறைந்த சொற்களைக் கேட்டு அவற்றை எம்பெருமான் திருச் செவிகளில் கேட்குமாறு செய்து, அவருடன் சேர-வொட்டாமல் சேதனர்களைத் தடுத்திடும் வினைகளை-யெல்லாம் கழியச் செய்து எம்பெருமானுக்கும் சேதனர்-கட்குமிடையே யேற்படும் அன்பினுல் நம்மை அவரின் இனிய திருவடிகளில் சேர்த்தருளும் பிராட்டியோடு திகழும் எம்பெருமான் நம் மனத்திற்குள் என்றென்றும் வாசம் செய்தருளுகிருர்.

ஸ்ரீ என்ற சொல்லை ஆறு வகை வினைச் சொல்லடியாகப் பிறந்ததென்று கொண்டு ஆறு பொருட்களையுணர்த்துகிருர்கள். 1. உய்ய விரும்பும் சகல சேதனர்களாலும் அடையப்படுகிருள். 2. அடைகின்ருள்-

தன்னையடைந்த மக்களுக்காக புருஷாகாரமாக எம்பெருமானையடைகின்றாள், அல்லது

1 எல்லாப் பொருட்களாலும் ஆதாரமாக அடையப்படுகிறாள்.

2. எல்லாப் பொருட்களையும் பிரவேசிக்கப்படும் இடமாகக் கொண்டு எம்பெருமானைப் போலவே வடிவுடன் (எங்கும் நிறைந்த பொருளாய்) அந்தர்யாமியாய் அனைத்தையும் அடைகிறாள் என்னுமாம்.

3. சேதனர்கள் இவளிடம் வந்து எங்களைச் சர்வேசுவரனிடம் சேர்ப்பிக்க வேண்டும் என்று வேண்டுகின்ற சொற்களைக் கேட்கிறாள்.

4. சேதனர்களின் அபயக் குரலைச் சர்வேச்வரன் கேட்குமாறு தனிமையில் விண்ணப்பிக்கின்றாள். அல்லது பகவானிடம் உலகிற்கு நன்மையானவற்றைக் கேட்டு அவற்றை எதிரிகளும் கேட்குமாறு பணிக்கிறாள்.

5. தன்னைச் சார்ந்தோரின் சரணாகதி என்னும் உபாயத்திற்கு ஏற்படும் இடையூறுகளான தீவினைகளைப் போக்குகின்றாள்.

6. பக்குவமான நிலையைச் சேதனர்களுக்கு உண்டாக்கி குற்றேவல் புரிவதற்கான சூழ்நிலையை ஏற்படுத்துகின்றாள்.

இவ்வாறு ஆறுவகைப் பொருட்களும் ஸ்ரீ என்ற சொல் தோன்றிய வெவ்வேறு வினைச் சொல்லின் பகுதி காரணமாக அமைகின்றன. இத்தகைய பெருமை வாய்ந்த

பிராட்டியுடன் இணைபிரியாத எம்பெருமான் நம் மனத்தில் நித்திய வாசம் செய்கின்றுள் என்பது மேற்கண்ட மந்த்ரத்தின்- பாசுரத்தின்-பொருளாகும்.

அடுத்தபடி ஸ்ரீமான் என்ற சொல்லிலுள்ள மதுப் என்ற விகுதியின் பொருளைப் பார்ப்போம். உடைமையைக் காட்டும் இவ்விகுதி எம் பெருமானை விட்டுச் சிறிது நேரமும் இணை பிரியாமல் திருமாமகள் சேர்ந்து நின்று உலகெங்கும் எல்லா வஸ்துக்களிலும் அந்தர்யாமியாய்ப் பரந்து நிற்கும் நிலையை உணர்த்தும். ஸ்ரீவைகுண்டத்தில் விளங்கும் பர- வாஸுதேவனிடமும், ஸங்கர்ஷணன் முதலிய வ்யூஹஸ்வரூபங்களிலேயும், இராமன், கிருஷ்ணன் முதலிய விபவாவதாரங்களிலும், திவ்ய தேசங்களில் காட்சி தரும் அர்ச்சாவதாரங்களிலும் இதயத்தினுள் நிலையான அந்தர்யாமி ரூபத்திலும் தக்கவாறு பிராட்டி எம்பெருமானை விட்டுப்பிரியாமல் சேர்ந்தே நிற்கின்றுள். இவ்வாறு எம்பெருமானின் ஸ்வரூபம், ரூபம், விபூதி (ஐச்வர்யம்) கட்குத் தக்க திருக்கோலங் கொண்டு சேர்ந்திருப்பதை மதுப் என்ற விகுதி உணர்த்துகின்றது. இத்தகைய பிராட்டியுடன் நம்பெருமாள் நம் உள்ளத்திலே குடி கொண்டிருக்கிறுர் என்பதைத் தியானிக்க வேண்டும்.

**அடுத்து, முதல் தொடரிலுள்ள நாராயண பதத்தின் பொருள்:**

முன்பு திருமந்திரத்திலே விளக்கியவாறு நரன் என்றும் எம்பெருமானைச் சேர்ந்தவற்றிற்கெல்லாம் ஆதாரமானவன் என்றும், அவனைச் சார்ந்த உலகனைத்தையும் தன்னிருப்பிடமாக உடையவன் என்றும் பொருள்படும் நாராயண என்னும் சொல். ஆறும்

வேற்றுமைத் தொகையாலும் அன்மொழித் தொகையாலும் இவ்விரு வகைப் பொருள் கிட்டும்.

நரனிடம் பிறந்தவை நாரங்கள் என்பதால் அனைத்துலகிற்கும் எம் பெருமானே காரணமானவன் என்றும் புலப்படுகிறது. ந்ரு என்னும் பகுதியிலிருந்து நர என்னும் சொல் தோன்றியமையால் அஃது அனைத்தையும் ஆள்பவன் என்ற பொருளைப் பெறுவதாகும். நரனைச் சார்ந்தவை நாரங்கள் என்பதால் நரனின் ஸம்பந்தம் தோற்றுவதால் அவன் சேதனர்க்குத் தாய், தந்தை, சோதரன், தோழன், அடைக்கலம் ஆதாரம், கதி என்னும் எல்லாவித உறவினனுகவும் திகழ்கிருன். அயனம் என்ற சொல் உபாயம், பலன் ஆதாரம் என்ற பொருட்களைத் தருவது. அதனுல் எம்பெருமான் எல்லோர்க்கும் உபாயமாகவும், பலனுகவும், ஆதாரனுகவும் உள்ளவன் எனப் பெறப்படுகிறது. தன் திருமேனியிலே சகல சராசரங்களையும் அடக்கிக் கொண்டு ஆதாரமாய்த் தாங்குபவன் என்றும் அனைத்தினுள்ளும் புகுந்து பாலில் வெண்ணெய் போன்றும், எள்ளில் எண்ணெய் போன்றும் பரவி நின்று (விபு) நியமனம் செய்யும் (கட்டளையிடும்) அந்தர்யாமி என்றும் இரு பொருட்களைக் கொண்டதாகிறது.

சரணௌ - என்ற சொல்லின் பொருள் எம்பெருமானின் திருவடிகளை என்பது. ஸ்ரீவைகுண்டத்திலே சேவை தரும் ஸ்ரீமந் நாராயணன், அவனது வ்யூக ரூபங்களாவன-ஸங்கர்ஷணன், ப்ரத்யும்னன், அநிருத்தன், வாஸுதேவன் என்பவை. அவன் எடுத்த விபவாவதாரங்களான மீன், ஆமை, இராமன், கிருஷ்ணன் முதலிய ரூபங்கள் திருக்கோயில்களில் காட்சி நல்கும்,

அர்ச்சாவதார விக்ரஹங்கள், நம் உள்ளங்களிலே குடி கொண்டுள்ள அந்தர்யாமி என்ற வடிவம் என இவ்வைந்து ஸ்வரூபங்களைக் கொண்ட திருமாலின் செந்தாமரையொத்த திருவடிகளை (அடைவேன்) என்பது பொருள்.

சரணம் என்பது உபாயம் எனப்பொருள் தருவது. திருத்துழாய் அலங்கல் மார்பன், பிற தெய்வங்களைத் தொழநேரும் தீவினிகளை நீத்து நம்மை ஆட்கொள்ளத் திருவுள்ளம் பற்றி அடைந்தவர்களைக் காக்கவல்ல தன் திருவடிகளைக் காட்டித் தந்து நமக்கு உபாயமாய் நிற்கின்றுன் என்பதை சரணம் எனும் சொல் விளக்கி நிற்கிறது.

ப்ர எனும் உபசர்க்கத்துடன் கூடிய பத் என்ற வினைப் பகுதியை ப்ரபத்யே (அடைகிறேன்) என்ற சொல்லிலே காண்கிறோம். அதில் ப்ர என்ற உபசர்க்கம் மிகவும் என்ற பொருளது. பத் என்ற வினைப்பகுதி அடைதல், அறிதல் என்ற பொருளுள்ளது. மிகவும் அறிதலாவது-மிக்க நம்பிக்கை கொள்வது. ப்ரபத்தி எனப்படும் சரணுகதிக்கு ஐந்து தேவையான உறுப்புக்களிலே, மகாவிச்வாஸம் எனப்படும் பெரு நம்பிக்கை என்பது மிகமிக வேண்டற்பாலது. அதனை இச்சொல் விளக்குவதால் எம்பெருமான் ஸ்ரீமந்-நாராயணனின் திருவடி மலர்களையே உபாயமாகப் பெரு நம்பிக்கையோடு அடைகிறேன் எனக் கருத்து ஏற்படுகிறது. நம் தகுதி குறைந்திருப்பினும், கடினமான பக்தியென்னும் உபாயத்தால் மகர்ஷிகளும், சான்றோர்களும் அடைந்த எம்பெருமானை அந்த பக்தி என்னும் உபாயத்தைச் செய்யத் திறனற்ற காலத்தும் கைப்பொருளில்லா-

மையாலே அவன் நிச்சயம் நம்மைக் காத்தே தீருவான் என்ற தன்னம்பிக்கையுடன், அவ்வுபாயத்தின் இடத்திலே ப்ரபத்தியைச் செய்கின்றோம். நாம் அவனது பெருமையையும் நம் எளிமையையும் கண்டு வெள்கி ஓடாதவாறு தன் எளிமையை (ஸௌலப்யம்)க் காட்டித் தன்னையடையுமாறு நல்லறிவினை நமக்கு நல்குகின்றான். மஹாவிச்வாசம் என்னும் நன்னம்பிக்கையையும் தந்து தன்னைச் சரணடையுமாறு செய்யும் இந்த ஸ்ரீமந்நாராயணனால் காக்கப்பட வேண்டிய பொருளானோம். இந்த ப்ரபத்தியையே - ப்ரபத் என்னும் வினைப்பகுதியுணர்த்துகின்றது.

அச் சொல்லிலுள்ள தன்மையொருமையைக் காட்டும் விகுதியால் ப்ரபத்தியோகத்தை நாடும் நம் போல்வாரின் ஆகிஞ்சன்யம் (கைப் பொருள் ஒன்றும் பெற்றிராமை) உணர்த்தப்படுகிறது. வேதார்த்தங்களைச் செவ்வனேயுணர்ந்து, கர்மாக்களை விடாமல், செய்து பக்தியோகத்தை ஒழுங்கு படச் செய்தல் முனிவர் போன்றோர்க்கே இயல்வதாம். நமக்கெல்லாம் அத்தகைய பக்தி செய்யச் சக்தியில்லாமையால் நாம் உபாயம் எதனையும் கைப்பொருளாகப் பெறாதவர்களாவோம். இதனால் கடைத்தேற வழி தெரியாமல் திகைத்து நின்ற நமக்கு ஸ்ரீமந் நாராயணனின் திருவடிகளிலே பாரத்தை (சுமையை) ந்யாஸம் செய்து (ஒப்படைத்து) மீள்வதைத் தவிர வேறு உபாயமில்லை என்பதாகிறது.

இதுவரை முற்பகுதியில் பொருளைக் கண்டோம். இனி த்வய மகா மந்த்ரத்தின் பிற்பகுதியினது பொருளைக் காண முயல்வோம். முதலில் ஸ்ரீயுடன் கூடிய நாராயண பதத்தின் கருத்தைக் காணலாம்.

முன் குறிப்பிட்டபடி ஸ்ரீ என்ற சொல் பல பொருட்களால் திருமகளை யுணர்த்துவதாயின் இவ்விடம் அது ச்ரு என்ற பகுதியினடியாய்த் தோன்றி - நம் குற்றேவல்களையேற்பவள் எனும்பொருளைக் காட்டும். இது நம் ப்ரபத்திக்குப் பலனுன தன்மையை விளக்குவதாம். இதுவே புருஷகாரப்ரபத்திக்கு மூலமாம். ஸ்ரீ என்ற சொல்லின் மீதேறி நிற்கும் மதுப் என்னும் விகுதி நமக்கு உபாயமாகும் நிலையில்- எம்பெருமானை விட்டு அகலாது தானும் உபாயமாய் நிற்பதனை யுணர்த்துவதுபோல, பல தசையில் (பயன்தரும் நிலையில்) நாம் வைகுந்தத்தில் குற்றேவல்களை யேற்கும்போதும் எம்பெருமானை விட்டுப்பிரியாமல் நிற்பதனையுணர்த்தும்.

இங்குள்ள நாராயணனெனும் சொல், பல பொருட்களைக் கொண்ட தாயினும், பலனுகும் தன்மைக்குத் தேவையான பல நற்குணங்களைக் கூறுவதாம். அக் குணங்கள், எல்லா ஆத்மாக்களுக்கும் ஸ்வாமியாய் (எசமான்) நிற்றல், எல்லையில்லாக் கல்யாண குணங்கள், பெருத்த ஐச்வர்யம், தெய்வீகமான மங்களத் திருமேனி, எல்லா வகையாலும் தெவிட்டாத-அரிய -அமுதமாய் நிற்றல் என்பன போன்றவை.

எல்லாவுயிர்களுக்குள்ளும் அந்தர்யாமியாய்த் தங்கியிருப்பினும், அவற்றிடமுள்ள குற்றங்கள் தம்மீது படாமல் விளங்கும் எம்பெருமான், இதுவரை நமக்கு அருளாத குற்றேவல்களையெல்லாம் சேர்த்துப் பெற ஆசை கொண்டு, எப்போதும் அவனைவிட்டுப் பிரியாத பேற்றினை விரும்பி நிற்கின்றோம் என்றபடி.

நாராயணுய என்ற சொல்லின் நான்காம் வேற்றுமைப் பொருளாவது: நமக்குத் தோன்றும் மூவகைத்

துன்பங்களையும், (ஆத்யாத்மிகம் - உடலில் தோன்றுவன; தெய்வத்தால் ஏற்படுவன ஆதி பௌதிகம்; ஆதி தைவிகம் என்பது பஞ்ச பூதங்களால் வருவன) எம்பெருமான் தன் திருவடிகளில் வணங்கினூர்க்கு எளிதில் நீக்குபவன். அவனடிகளை வணங்கும் நாம், அவன் சாத்திக் களைந்த ஆடை, சாத்துப்படி முதலியவற்றை அவன் பிரசாதமாகப் பெற்றுத் தலையினுல் தாங்கி பரம பக்தியுடன் அவனுக்குக் குற்றேவல் புரிய அவாவுகின்ரேம் என்பதாம்.

இறுதியில் நம என்ற சொல் நான் என்னும் அஹங்காரமும், எனது என்றெண்ணும் மமகாரமும் சேதனனை ஸம்ஸாரமாம் படுகுழியில் வீழ்த்தித் துயர்ப்படுத்துகின்றன. நம: என்ற ஈரெழுத்துக்களையும் கூறுகையில் நம்முடன் சம்பந்தமுள்ள பொருள்கள் அனைத்திலும் நமக்கு எந்த சம்பந்தமுமில்லை என்று எண்ண வேண்டும். அது போலத் தன் ஸ்வரூபம், குணம், சரீரம் முதலியவற்றின் காரணமாக வரும் அஹங்கார மமகாரங்களை ஒழிப்பதே நம: என்ற சொல்லின் பொருளாகின்றது. இங்ஙனம் கூறிய பத்துப் பொருட்களையும் சேர்த்துத் தொகுத்து ஸ்வாமி தேசிகன் ஒரு பாசுரத்திலே விளக்குகின்ருர்.

சேர்க்கும் திருமகள் சேர்த்தியின் மன்னுதல் சீர்ப்பெரியோற்
கேற்கும் குணங்களிலக்காம் வடிவிலிணையடிகள்
பார்க்குஞ் சரணதிற் பற்றுத னந்நிலை நாம் பெறும்பே
றேற்கின்ற வெல்லை களெல்லாக் களையற வெண்ணினமே,

இதன் திரண்ட கருத்து

எல்லோர்க்கும் தலைவனும், எவ்விதமும் சுவைக்கத் தெவிட்டாத ஆரமுதாயும் பிராட்டியை விட்டுப்

பிரியாதவனுமான ஸ்ரீமந் நாராயணனின் திருவடிகளில் ஸர்வ விதமான குற்றேவல்களையும் எப்போதும் செய்திட விரோதியான வினைகள் யாவும் நீங்கப் பெற்று, மேற்படி குறைவில்லாக் குற்றேவல்கள் புரிய வேறு உபாயங்களில் சக்தியற்ற அடியேன் என் ஆத்மாவிலும் அதனைக் காக்கும் பொறுப்பிலும், அதன் பலனினும், சம்பந்தம் கொள்ளாதவாறு (எம்பெருமான் திருவடிகளில்) ஐந்து அங்கங்களுடன் கூடிய சரணாகதியைச் செய்கின்றேன் என்பது இந்த த்வயமஹா மந்திரத்தின் கருத்தாகும்.

**சரமச்லோகக் கருத்து**

போர்க்களத்திலே செய்வதறியாது திகைத்து நின்ற அர்ச்சுனனுக்கு தேர்த்தட்டில் சாரதியாயிருந்து கீதையைக் கண்ணன் உபதேசித்து கடமையைச் செய்யுமாறு வற்புறுத்தினன். கீதையில் -நித்யமான ஆத்ம ஸ்வரூபம், கர்ம யோகம், ஞானயோகம், பக்தி யோகம் இவற்றை உரிய அங்கங்களுடன் விளக்கியருளவே-பக்தி யோகம் செய்வதற்கரிதாயுள்ளமை பற்றி அர்ச்சுனன் மறுபடி கலங்குவானுனன். இதைக் கண்டு கண்ணனும் விரைவில் பயன் தரவல்ல ப்ரபத்தியை (சரணாகதியை) உபதேசித்தருளினர். இப்ரபத்தியை விளக்குவதே சரமச்லோகம் எனப்படும். ஸர்வதர்மான் எனத் தொடங்கும் ச்லோகம், பல சிறப்பான பொருட்களைக் கொண்ட இந்த ச்லோகத்தை சரமச்லோகம் என்று கூறி ஸ்ரீவைஷ்ணவர்கள் நிதமும் மந்திரமாய் ஜபம் செய்வது வழக்கம். மூன்றுவது ரஹஸ்யமாக இதனைப் போற்றுகின்றோம். இதன் கருத்தைவிளக்கும் ஸ்வாமி தேசிகனின் பிரபந்தம் சரமச்லோகச் சுருக்கெனப்படும். இந்த சுலோகத்திலுள்ள 10 பகுதிகளைப் பிரித்தெடுத்து

ஒவ்வொன்றுக்கும் ஒவ்வொரு பாவின் மூலம் விளக்கம் தரப்படுகிறது. கட்டளைக் கலித்துறையால் ஆனது இப் பிரபந்தம்.

> கல்லா ரகலுங் கருமமு ஞானமும் காதலுமற்
> றெல்லா நிலைகளுக் கேற்ப விதித்த கிரிசைகளும்
> வல்லார் முயல்க வலியிழந் தாரென்ற னைத் தொழுகென்
> றெல்லாத் தரும முரைத்தன னின்னடி சேர்ந்தனமே

சாத்திரங்களை நன்கு கற்றோர் மட்டுமே கர்ம யோகம், ஞ்ஞான யோகம், பக்தியோகங்களைச் செவ்வனே செய்திட முடியும். மற்றவர்களால் இயலாது, ஆதலின், சிறந்த அறிவும் ஆற்றலுமுள்ளோர் மட்டுமே அவ்வுபாயங்களைச் செய்ய வேண்டும். இயலாதவரான நம் போல்வோர் என்னைச் சரணமடைந்தால் நானே அந்த உபாயங்களின் ஸ்தானத்தின் நின்று, அவற்றின் பலனைக் கொடுப்பேன் என்றும், நீ கவலைப்படாதே என்றும் கண்ணன் கூறுவதாக இந்த ச்லோகத்தின் பொருளை இப்பாசுரம் சுருக்கிக் காட்டுகிறது.

எளிதில் செய்ய முடியாத உபாயத்திற்குப் பதிலாக என்னைச் சரணடைந்தால் நானே அவ்வுபாயம் தரும் பலனைக் கொடுப்பேன் என்பதே சரமச்லோகத்தின் கருத்து.

ஸர்வதர்மான் பரித்யஜ்ய (எல்லாத் தர்மங்களையும் விட்டு) என்பதற்கு ஆறு பொருட்கள் கூறப்படுகின்றன. தர்மம் என்பது சாஸ்திரங்களால் அறியப்படும் பலனைத் தரும் ஓர் சாதனம்- உபாயம்: தர்மான் என்ற பன்மையால் தர்மங்களின் பல வகைகளையும் குறிப்பிடும். மோக்ஷத்திற்கு உபாயமான பக்தி யோகங்களையே இங்கு

தர்மான் என்பது சுட்டுவதாம். இத் தொடருக்கு ஆறு பொருட்கள் சிறப்பாகக் காட்டப்படுகின்றன.

மோக்ஷ பலனைப் பெறுவதற்குத் தன்னிடம் ஓர் உபாயமுமில்லாமையையுணரல்; அவ்வில்லாமையால் வகுத்த அங்கங்களைத் தவிர வேறங்கம் இல்லையெனவுணரல்: குள்ளன் கொம்புத் தேனை விரும்புவது போன்ற துன்பத்தைக் கைவிடல்: பிரஹ்மாஸ்திரம் பிற அத்திரங்களைப் பொருதது போல் ப்ரபத்தியும் பிறவற்றைப் பொருதெனை வுணர்தல்: ஓர் சிறந்த தர்ம மார்க்கம் இந்தப் பிரபத்தியே என்பதை தர்மஸ்வரூபியாம் கண்ணன் அர்ச்சுனனுக்கு உபதேசித்தான்.

அடுத்து மாம் என்ற சொல்லாலே கண்ணன் தன் திவ்ய மங்கள விக்ரஹத்தைத் தொட்டுக் காட்டுகிறான். இதனால் வாத்ஸல்யம், ஸ்வாமித்வம், ஸௌசீல்யம், ஸௌலப்யம் என்னும் நான்கு குணங்கள் வெளிப்படுகின்றன.

1) வாத்சல்யமாவது: தன்னையடைந்தவனின் குற்றத்தைப்புறக்கணித்து அவனையேற்கும் கருணை.

2. ஸ்வாமித்மாவது: ப்ரணவத்தில் வெளியாகும் நம் ஆண்டவன் என்ற சம்பந்தம்.

3. ஸௌசீல்யமாவது: பெரியோர் சிறியோரிடம் ஒரு நீராகக் கலந்து நிற்கை.

4. ஸௌலப்யமாவது: ஸநகாதிகளும் காணவொட்டாத தம்மை யாவரும் காணுமாறு நிற்கும் எளிமையான தன்மை.

எக்காலத்திலும் தன்னைவிட்டுப் பிரியாது நிற்கும் மலர் மகளையும் மாம் என்பது சுட்டும் இப்பொருளை எண்ணுங்கால் எம்பெருமானின் அவதார ரஹஸ்யம் நினைக்கத் தக்கதாகிறது. ஏகம் என்ற சொல்லால் ஆறு சிறப்புப் பொருட்கள் குறிப்பிடப்படுகின்றனவாம். மாம் என்ற சொல்லே ஒருமையைக் குறிக்கையில் ஏகம் என்ற தனிச் சொல் எதற்கு எனில், நான் செய்யும் ப்ரபத்தி என்னும் பயனுல் எம்பெருமானைப் பயனுகப் பெறுகிறேன் என்று எண்ணுமல் அவனே உபாயமும், பயனும் என்று எண்ணுவதற்காம்.

ஏக சப்தத்தால், சேதனனின் சுதந்திரம் நீக்கப்படுகிறது. பலனைக் கொடுக்கும் இறைவன் ஓர் உபாயமாவான். அதற்குரிய சாதனத்தைச் செய்யும் நானும் ஓர் உபாயமாவேன் என்று எண்ணுதிருக்கப் பயன் படுகிறது. சேதனனின் செயல் இறைவனின் ஸங்கல்பத்தால் ஏற்படுவதேயன்றிச் சுதந்திரமானதன்று. அவனது கடாட்சத்தால் தூண்டப்பட வேண்டும். அஃதில்லையேல் தனியே சேதனன் ஒன்றும் செய்ய இயலாதவன். ஆக ஸ்வதந்த்ரனை பரமாத்மாவுடன் சேதனன் தன்னையும் சமமான சித்தோபாயமென்று எண்ணலாகாதென்றும் உணர்த்துகிறது.

உபாயம் இருவகை: சித்தம்-சாத்யம் என்பவை அவை. சேதனனுல் செய்யப்படும் பக்தி-ப்ரபத்தி முதலியவை சாத்யோபாயமாகும். யாராலும் செய்யப்படாத எம்பெருமானை சித்தமான உபாயம் எனலாம். இங்கு ப்ரபத்தியை சித்தோபாயனை எம்பெருமானுக்கு ஈடானதோர் உபாயமாக எண்ணலாகாது, அது ஒரு சாக்காக அமைவதேயன்றி உபாயமாகக் கணிக்க

வொண்ணுதது. பக்தியைப் போலவே உபாயமாக விதிக்கப்பட்டிருப்பினும், இயற்கையில் கருணை சுரந்து நிற்கும் எம்பெருமானுக்குச் சேதனனிடம் ஏற்படக் கூடிய சில அதிருப்திகளைக் களையவே பக்தியும், ப்ரபத்தியும் பயன்பட்டு ஒய்ந்து விடுகின்றன. பலனை மோக்ஷத்திற்கு சர்வ சக்தனும் கருணாகரமுமான எம்பெருமானின் சங்கல்பமே காரணமாய் நின்று, எவனைக் காக்க நினைக்கின்றானோ அவனை பக்தி அல்லது ப்ரபத்தி செய்யத் தக்க நல்லறிவுடன் கூட்டுகிறான் (வே) பக்தி முதலியன செய்யச் சக்தியற்ற சேதனனுக்கு ப்ரபத்தி செய்திட்டால், பக்தியின் இடத்தைத் தானே ஏற்று முழுமையாக்குகின்றான். இந்த வ்யாஜமாத்ரமான (சாக்கு) ப்ரபத்தியும் அவன் செய்விக்கவே நம்மால்செய்யப்படுகிறது. இத்தகைய ப்ரபத்தியை பேருபாயமாக நிற்கும் எம்பெருமானுடன் ஒரு சேர உபாயமாக எண்ணுவது தவறென்பதை ஏகம் என்ற சொல் காட்டுகிறது.

மேலும் ப்ரபத்தி செய்தபின் எம்பெருமானுக்கும் அந்தப் ப்ரபத்திக்கும் இடையில் சேதனனுக்கு வேறொரு சுமையைச் சுமத்தாமல்-வேறு உபாயங்களின் இடத்திலே தான் ஒருவனே நின்று வேறு உபாயங்களை எதிர்பாராமலே பலன் தரத்தக்க-தன்னிகரில்லாதான் என்ற பொருளை ஏக சப்தம் சுட்டுகிறது.

ப்ரபத்தி செய்கையில் இதற்குரிய அங்கங்களைத் தவிர வேறு அங்கங்களை-அவன் எதிர்பார்க்காமையை-இவ்வேக சப்தம் சுட்டிக் காட்டுகிறது. எம்பெருமானே ப்ரபத்திக்குப் பலன் தரத் தயாராயிருக்கிறான். இதற்கு வகுத்த ஐந்து அங்கங்களைத் தவிர வேறு அங்கம் எதனையும் நாம் செய்ய வேண்டியதில்லை. அவ்வாறு பிறவற்றைச்

செய்தாலும் அதற்காக அவன் பலன் தருவதில்லை. இவ்வாறு வேருெரு அங்கத்தையும் எதிர்பாராமல் தனியே பலன் தரக் காத்திருக்கின்றுன் என்பதும் இதனுல் புலப்படும்.

நிற்க, ஒவ்வோர் பலனைப் பெறவும் தனித்தனி சாத்திரங்களிலே உபாயங்கள் விதிக்கப்பட்டுள்ளன. அவற்றையெல்லாம் நிறைவேற்ற சக்தியோ, ஜ்ஞானமோ இல்லாமையாலும், பலனைப் பெறுவதற்குள்ள காலதாமதத்தைப் பொறுக்க மாட்டாமையாலும் வருந்தும் சேதனர்களை நோக்கி, எம்பெருமான், நீ அவ்வுபாயங்களுக்காக அலைய வேண்டாம். அவற்றுலெல்லாம் கிடைக்கக் கூடிய அத்தனை பயன்களையும் நீ என்னிடம் செய்யும் ப்ரபத்தி ஒன்றிற்காகவே நான் தருகின்றேன், என்றருளி அவன் ஒரே உபாயமாய் நிற்கும் நிலை ஏக சப்தத்தின் பொருளாம்.

இங்கு சிலர்-ஏகம் என்பதால் எம்பெருமான் மட்டுமே உபாயம். பிராட்டிக்கு அதில் சம்பந்தமில்லை என்று பொருள் கூறுவர். எம்பெருமான் ஒருவன் என்றுல், கல்யாண குணங்கள், திருமேனி எல்லாவற்றுடன் சேர்ந்த அவனையே குறிக்கின்றதே போல-பிராட்டியும் இணைபிரியாத பகுதியாதலால் அவனையும் உபாயமாகக் கொள்வதால் எம்பெருமானுக்குரிய தனிமையோ ஒருமையோ விலக்கப்பட்டதாகக் கொள்ளத் தகாதது. 1. உன்னிடம் பிராட்டியையும் சேர்த்து ஒருமித்ததாகவே குறிப்பிடுவதால் வேதம் ஒவ்வோரிடத்திலும் இருவரைத் தனித்தனியே குறிப்பிட வேண்டாததாயிற்று. எம்பெருமான் என்றுலே திவ்ய மஹிஷீ பரிஜனபரிச்சதங்களோடு கூடியவன் என்றேதான் பொருள். அதனையே இங்கு

ஸ்வாமி தேசிகன், பொன்னருளோடும், அப்பூமகளோடும் என்று குறிப்பிட்டருளினர்.

இனி சரணம்-என்பதன் பொருளைப் பார்ப்போம். இங்கு சரண சப்தம், மற்ற உபாயங்களை அனுஷ்டிக்கச் சக்தியற்றுப்ரபத்தியை அனுஷ்டிக்கும் சேதனன் விஷயத்தில் மற்ற உபாயங்களின் இடத்தில் எம்பெருமானே நிற்கும் நிலையைக் காட்டும்.

வ்ரஜ என்பதன் பொருளைக் காண்போம். இச்சொல் ஆத்மாவை எம்பெருமானிடம் ஸமர்ப்பி என்று பொருள் தரும். எம்பெருமானுக்கு பிரதி கூலமான செயல்களை விலக்கி, அனுகூலமாகவேயிருப்பேன் என்று உறுதி பூண்டு, கைம் முதலற்றவனுனேன் என்று கார்ப்பண்யத்தை எண்ணி, அவனையே யடைக்கலமடைவதால் அவனைக் காப்பவனுக வரித்தலும், அடைக என்றதால் ஆத்மாவின் சமர்ப்பணமும் இஃதெல்லாம் எம்பெருமானே செய்து கொண்ட செயல் என்று ஸாத்விகத்யாகமும், ஆக ஐந்து அங்கங்களையுடைய சரணுகதி விளக்கப்படுகிறது.

அஹம் என்று காடுகள் போல் பரந்து எளிதில் அறிந்துணர முடியாத வேதங்களில் உள்ளபடி உலகனைத்தையும் காப்பவன் ஸர்வேச்வரனே என்பதை யறியாதார்க்கு எம்பெருமான் தானே பேசிப் புலப்படுத்துகின்ருன்.

இவ்வுலகில் மக்களை வாழ்விக்க நித்ய ஸூரிகளுடன் தானும் மானிட வடிவத்தில் அவதரிக்கின்றனன். அத்தகைய எம்பெருமானே சரமச்லோகத்தில் அஹம் என்ற பதத்தால் தன் பெருமையைக் காட்டி நம்மைத் தன் திருவடிகளில் சேர்த்துத் கொள்கின்ருன். ஆகவே அஹம் என்பது

அடைக்கலம் புகுந்தோரை அனைத்துப் பாவங்களி-லிருந்தும் விடுவிக்க வல்ல அபார சக்தியுடைய தன்மையைக் காட்டுகிறது. பெரும்பாவம் செய்த சேதனனை ஸம்ஸாரம் என்னும் சிறையில் விலங்கிட்டு வைத்திருந்த நான், அவன் செய்த, உபாயத்தால் கருணை சுரக்கப் பெற்று, அவன் பிழைகளைப் பொறுத்துப் பலன் தரும் வேளையில் அதனை விலக்க வல்லார் யாருமில்லை. வேறொருவனாலே இவனுக்கு முக்தி கொடுக்கவும் இயலாது என்ற தன் சக்தியையும் அஹம் என்ற சொல் விளக்குகிறது.

அடுத்து த்வா என்ற பதம் உன்னை என்றுபொருள்படும். இவ்விடம் சிறப்பாக என் உபதேச மொழிகளால் மூன்று தத்வங்களிலும் விவேகம் பிறந்து, ஐச்வர்யம் கைவல்யம் முதலியவற்றின் ஸ்வல்ப பலனை உணர்ந்து, வெறுத்து என்னையே யடைதலாகிய பலனை விரும்பி, விதிக்கப்பட்ட பிற உபாயங்களை அனுஷ்டிக்கச் சக்தியற்று ஸகல விரோதிகளையும் ஒழிக்க வல்லனும், உன்னால் அடையத் தகுந்தவனுமான என்னிடம், உன் பொறுப்பினைச் சமர்ப்பித்துச் செய்ய வேண்டிய கார்யங்களைச் செய்து முடித்து மறுபடி அதே பலனுக்காக இச்செயலைச் செய்ய வேண்டாதபடி நிற்கின்ற உன்னை என்று-த்வா என்ற சொல் குறிக்கின்றது.

ஸர்வ பாபேப்ய: என்பது காடுகள், நரகம், விஷம் நெருப்பு, நள்ளிருள் இவை போன்ற ஸகல பாவங்களிலிருந்தும் நான் விடுவிக்கிறேன் என்கின்றார். இதில் அவித்யையால் எம்பெருமானையடையத் தடையான கர்மம், அந்தக் கர்மத்தால் மறுபடி அவித்யை தோன்றுவதால், (1) கர்மத்திற்குக் காரணமும் காரியமுமான

அவித்யை (2) உலக சுகங்களை அனுபவித்ததால் ஏற்படும் வாசனை (3) அவற்றில்ஈடுபாடு (4) ஸ்தூலமாயும், சூக்ஷ்மமாயும் நிற்கும் ஜீவனை இறுதி வரை பற்றி நிற்கும் ப்ரக்ருதி சம்பந்தம் என்பவற்றை ஸர்வ பாபேப்ய: என்பது சுட்டிக் காட்டுவதாகும். சரணாகதிக்கும் முன்னும் பின்னும் செய்யப்படும் பாவங்களும் இதில் அடங்கும்.

மோக்ஷயிஷ்யாமி - விடுவிக்கிறேன் என்பது; பரமபதத்தில் சென்று நித்யரோடும் முக்தரோடும் கைங்கர்யம் செய்ய விரும்பும் உன்னை நீ விரும்பும் காலத்தில் உன்பால் கருணை கொண்டு உன் எல்லாப் பாவங்கள்ளையும் ஒழிப்பேன் என்று பொருள்படும்.

இறுதியில் மாசுச: என்பது (துக்கப்படாதே) ஸர்வாதாரனாய் நம் உள்ளத்திலே நிலையான எம்பெருமான் பிற உபாயங்களில் சக்தியின்றி தன்னைச் சரணடைந்தவராகிய நம்மைக் காக்கத் திருவுள்ளங் கொண்டு மறுபடியும் இக்கர்ம பூமியில் பிறவாதபடி செய்து நம் துக்கத்தைப் போக்குகிறான் என்பதாம்.

1. பக்தி செயற்கரிதாய் - பல தடைகளும் கொண்டுள்ளமையாலும், பலன் தருவதிலும் மிக்க காலந்தாழ்த்துவதாலும் சேதனன் கவலைப்படலாம்.
2. சரணாகதிக்குப் பின்பு-காக்கும் பொறுப்பும், அதனால் வரும் பலனும், அதனையடைபவனும் எம்பெருமானேயாதலால், நம்மைக் காக்க முடியாவிடில், தனக்குத் தீங்கு வருமேயென்று எண்ணுபவனாதலின், அவருடைய ஸ்வதந்த்ரத் தன்மையால் நம்மைக் கைவிட்டு விடுவான் என்று அச்சம்-துயரம்-வேண்டாம்.

3. ப்ரபத்தி ஸகல சாதியாரும் அனுஷ்டிக்கத் தக்கதாதலின், நான் இதற்கு அதிகாரியல்லனே என்று எண்ணி துக்கமடைதல் வேண்டாம்.

4. ப்ரபத்தி எளிதாய், ஒரு க்ஷணத்தில் அனுஷ்டிக்கக் கூடியதாய் வேறு உபாயங்களையும் (வகுத்த அங்கங்களைத் தவிர) வேறு அங்கமெதனையும் எதிர்பாராததாய் இருப்பதால் வேறு பெரிய உபாயத்தை அனுஷ்டிக்க வேண்டுமோ என்றும் வருத்தம் தேவையில்லை.

5. சிறிய உபாயமாகிய ப்ரபத்திக்கு வசமாய்ப் பலன் கொடுக்கும் சர்வேச்வரனை நான் மிக எளியனுய், நம்பத் தக்கவனுய், கருணை நிறைந்தவனுய், தடையற்ற சுதந்திரமுள்ளவனுய்- ஸித்தோபாயமாய் நிற்கும் நிலைபற்றி சந்தேகித்துச் சோதிக்க வேண்டா.

6. ப்ரபத்தியை யனுஷ்டித்த பின் என் பிரீதியையே பலனுகக் கொண்டு வேறு பலனை விரும்பாமல் செய்யும் கர்மாக்கள் அனைத்தும் ப்ரபத்திக்கு அங்கமல்லவாகையால் அவற்றை அனுஷ்டிக்கையில் கால தேசாதிகளில் துறைகளால் அங்கங்களில் குறை ஏற்படுமோவென்று கவலையும் வேண்டுவதில்லை.

7. ப்ரபத்திக்குப் பின் பாவம் நேரிடாதவாறு ப்ராயச்சித்தாதிகள் செய்து முடித்தால் பின் பாகவதாபசாரம் முதலிய பாவங்கள் நேருமோ என்றும் பயப்பட வேண்டாம்.

8. அவ்வாறு முன்பே சேர்த்து ப்ரபத்தி செய்யத் தவறி, பிரபத்திக்குப் பிறகு தெரிந்தே பாவம் செய்வோருக்கும் ஒருவாறு பாவங்களை நான் போக்கி விடுவதால்

நரகம் முதலிய துன்பம் வருமோ என்ற கவலை வேண்டாம்.

9. ஒரு கணமும் விளம்பத்தைப் பொறுக்காமல் உடனே மோட்சம் வேண்டும் என்று ஆர்த்தப்ரபத்தி செய்தார்க்கு உடனே மோக்ஷம் தருகின்றேன். ஆதலால் நரகம் போன்ற இச் சரீரம் நீடிக்குமென்று அஞ்ச வேண்டா.

10. சரணமடைந்தவனைக் காக்க பகவான் உறுதி கொண்டிருப்பதால் மோக்ஷம் கொடுக்க விளம்பித்தாலும்-பலன் கொடுப்பதில் சிறிதும் ஐயம் இல்லையாதலின், சிற்சில பாவங்களால் ப்ரபத்தியாகிற புண்யமும் தடைப்பட்டுப் பலன் கிடைக்காது போகுமோ என்று ஐயுற வேண்டா.

11. சரீரத்தின் முடிவு காலத்தில் மோக்ஷம் வேண்டுமென்று குறித்து வேண்டியபடியால் கர்மங்களால் மறுபிறவி உண்டோவென்றும் சோகம் வேண்டா.

12. மோக்ஷத்தையே விரும்பி ப்ரபத்தி செய்தவனுக்கு அதற்குத் தடையான எல்லாக் கர்மங்களும் கழிந்து போவதால் கைவல்யம் முதலிய இடையூறுகளால் மோக்ஷத்திற்கு விளம்பம் ஏற்படுமோவென்றும் துயரமடைய வேண்டா.

இவ்வாறு சகல சோகங்களும் நீங்கப் பெற்ற நீ இனி சோகப்பட்டால் அது ப்ரபத்தியின் பெருமைக்கும் உன் பொறுப்பை ஏற்றுக் கொண்ட என் பெருமைக்கும் சரணாகதி செய்த உன் நிலைக்கும் தக்கதாகாது. சரணாகதிக்கு முன் சோகப்படாமையும், பின்பு

சோகப்படுதலும் அறியாமையின் செயலாம் என்றிவ்வாறு கண்ணன் இந்த சரமச்லோகத்தால் அருளினான்.

## இப்பிரபந்தத்தின் சாரமான கருத்து

ஏ சேதனனே! உன் அறிவு சிறியது, சக்தியும் அற்பமே. உன் ஆயுள் காலமும் சிறிது. மோக்ஷத்திற்கான விளம்பத்தை நீ பொறுக்க இயலாது. பிற உபாயங்களோ, நீ செய்தற்கரியவை. அவை காலந்தாழ்த்தியே பலனைத் தருபவை. ஆதலால் அவற்றிற்காக அலையாதே. எளியனும், சர்வரோக சரண்யனும், காப்பவனும், ஸகல குணங்களினிருப்பிடமும் நானே. என்னையே உபாயமாக எண்ணி ஐந்து அங்கங்களையுடைய ப்ரபத்தியைச் செய். இவ்வாறு கடமையைச் செய்தால் எனக்குப் பிரியனாய் காக்கப்படு பவனுமாவாய். அளவற்ற கருணையால் உன் மீது அருள்புரிவேன். தடையிலாத சுதந்திரத் தன்மை கொண்ட நான், என் ப்ரவிருத்தியின் பயனாகவும் நிற்பேன். என் செயல்களுக்கு என் ஸங்கல்பமே (திருவுள்ளமே) துணை நிற்கும். அளவற்ற ஒழிக்கவொண்ணாத உன் விரோதியினத்தையழித்து உன்னைத் தொடராமல் செய்வேன். என்னையும் என்னைச் சேர்ந்தவற்றையும் உன் அனுபவத்திற்கே தந்து எனக்கு நிகரான போகத்தையும் தர வல்லேன். இவ்வாறு என்னை நீ அனுபவித்தால் எங்கும்-எப்போதும் எந்நிலையிலும், செய்யத்தக்க கைங்கர்ய ஸாம்ராஜ்யத்தை உனக்கே யருள்வேன். நீ எதற்கும் கவலைப்பட வேண்டாம் என்றவாறு.

மேற்கூறிய மூன்று மந்திரங்களுமே ரஹஸ்யங்களெனப்படுபவை. இந்த ரஹஸ்யத்ரயத்தின்

அடிப்படைக் கருத்தும் முடிவும் ஒன்றே-எம்பெருமானை ஒருவித ஐயமுமின்றி, நான், எனது என்ற எண்ணமின்றி நன்னம்பிக்கையைப் பூர்ணமாகக் கொண்டு சரணடைய வேண்டும். அது ஒன்றே மனிதனுய்ய வழி ஜீவாத்மா, அசேதனம், பரமாத்மா என்ற மூன்றும் சேர்ந்ததொரு முக்கோணம். இக்கோணத்திடையே எம்பெருமான் ஆட்சி செலுத்துகின்றான். மனிதனின் இதய கமலத்தினூடே-யுறைபவன் அவன். 'பத்ம கோசப்ரதீகாசம் ஹ்ருதயம்'(வே) என்று நம் இதயம் நாபிக்குமேலே தலைகீழாக தாமரை மொட்டுப்போல் தொங்குகிறது என்றும் அதன் நடுவில் அவன் வீற்றிருக்கிறான் என்றும் வேதம் பேசுகிறது. இதே முக்கோணமாக ப்ரணவம் எனும் ஓங்காரமும், அதே வடிவினதாக அர்ச்சுனனின் தேரும் வர்ணிக்கப்படும். தேர்-ஓர் அசேதனமான சடப் பொருள். அதனை போக்யமாகக் கொண்டு முன்புறம் கண்ணனும், பின்புறம் அர்ச்சுனனும் வீற்றிருக்கும் நிலை சிந்திப்பதற்குரியது. ப்ரணவத்தில் அகாரம் முன்னால் நாரணனைக் குறிப்பதாகவும், ஜீவனைக் குறிக்கும் மகாரம் இறுதியிலும் நிற்கக் காண்கிறோம். இந்த பிரபந்தங்கள், ஒவ்வொன்றிலும், முக்கியமாக அம் மூன்று தத்துவங்களும், அவற்றை விளக்கும் மூன்று ரஹஸ்யங்களும் விளக்கப்படும் முறை முக்கோணத்தினை நினைவூட்டும், எம்பெருமான் கண்ணனே முக்கோண வடிவினதான மூன்று வர்ணங்களால் (எழுத்துக்களால் நிறங்களால்) அழகிய தாமரை மலர் மீது வீற்றிருப்பதாக தேசிகன் சுவைபட வர்ணிக்கிறார். 1. வர்ண த்ரிகோணருசிரே வர புண்டரீகே... வல்லப சக்ரவர்த்தீ (கோபால விம்சதி) ஸ்ரீபாஷ்யமும்-ஸ்ரீரங்கநாதனின் விமானமும் ப்ரணவத் தோற்றமுடையது என்கின்றனர். ஸ்ரீபாஷ்யம் முதலில்

அகில என அகாரத்திலே தொடங்கி, உக்தஞ்ச என்று உகாரத்தை இடையில்கொண்டு ஸர்வம் ஸமஞ்ஜஸம் என மகாரத்தில் முடிவடைவதால் ப்ரணவம் போன்றதாம். ஸ்ரீரங்கவிமானம் ப்ரணவம் போன்ற அமைப்பைக் கொண்டுள்ளமையால் ப்ரணவாகார விமானம் எனப்படும். இவ்வாறு ப்ரணவமும், பிற ரஹஸ்யமந்திரங்களும் போதிப்பது தஞ்சப்பரகதி எனப்படும் சரணாகதி என்ற ஒரே கருத்தையே என்பது ஒவ்வோர் நூலிலும் தேசிகனார் நிலைநாட்டிச் சொல்லும் முடிவாகும். அதுபற்றியே அவருடைய வாழித்திருநாமத்திலே (துதியில்) "தஞ்சப்பரகதியைத் தந்தருள் வோன்" எனப் போற்றப்படுகிறார். பூர்வாசார்கள் மேலெழுந்த வாரியாகக் காட்டிச் சென்ற சரணாகதிமார்க்கத்தை நேராகவும் மறைமுகமாகவும் ஒவ்வோர் பிரபந்தத்திலும் இவர் வற்புறுத்தி நிலை நாட்டுகிறார்.

## 3.2. தேசிக பிரபந்தங்கள் - 2

### 3.2.2 அம்ருதாஸ்வாதினீ

ஸாரஸாரம் முதல் முனிவாஹன போகம் ஈறாக உள்ளவை. தேசிகனார் அருளிய மணிபவள நடையிலுள்ள சில்லறை ரஹஸ்யத்தின் மறுபகுதியாகவும், ரஹஸ்யத்ரய சாரத்தின் பிந்திய ரஹஸ்யங்களெனவும் வழங்கப்படும். இவற்றின் செய்திகளடங்கிய பாசுரங்களின் தொகுப்பாய், அமுதம் போல் இனிய விஷயங்களடங்கியமை கொண்டு இப்பகுதி அம்ருதாஸ்வாதினீ எனப்படுகிறது. இதில், மூன்று மந்திரக் கருத்துக்களும், ஸ்ரீமத் ராமாயணத்தின் சாரமான காகாசுர சரணாகதி, விபீஷண சரணாகதி முதலியனவும் விளக்கப்படும். வராஹ சரமச்லோகத்தின் பொருள்,

அஞ்சலியின் பெருமை. பிற ரஹஸ்யங்களின் சுருக்கம். எம்பெருமானாரின் புகழை வெளியிடும் அற்புத சம்பாஷணை வடிவான ஓர் பாடல், அமலனாதிபிரான் என்ற பிரபந்தத்தில் சாரக்கருத்து என்பன இதில் அடங்கியுள்ளன.

இந்நூலில் 37 பாசுரங்கள் உள்ளன. இதில் முதல் ஆறு பாக்கள் ரஹஸ்யத்திரயமெனப்படும் திருமந்திரங்கள் பற்றி விரித்துரைப்பன. ரஹஸ்யம் மூன்றின் பொருளை உள்ளவாறு அறிந்து, அனுபவிக்கவே ஆசார்யர்கள் ப்ரபந்நர்களை இந்த ஸம்ஸாரத்தில் நிறுத்தி வைக்கின்றனர். அர்ஜுனன் பின்புறம் இருப்பதைப் போலவே ப்ரணவத்திலும் எம்பெருமானைக் குறிப்பிடும் அகாரம் முதலிலும், ஜீவாத்மாவைக் குறிப்பிடும் மகாரம் பின்னரும் உள்ளன.

இப்பிரணவத்தின் பொருளையுணர்ந்தாலே, எம்பெருமான் ஜீவாத்மா என்ற இருவரின் ஸ்வரூபத்தையும் நாம் அறியலாம். அடுத்துள்ள நம: என்ற சொல்லின் பொருளையுணர்ந்தால், அஹங்காரம், மமகாரமும் நீங்கிவிடும். பின்னர் எளிதில் பிரபத்தியை நிறைவேற்றலாம். அடுத்தபடியாக நாராயண சப்தத்தின் பொருளாக - எல்லாவுலகுகளையும், படைத்துக் காத்துத் தலைமை தாங்குபவனாய் இழி குணங்களின்றிச் சிறந்த குணங்கள் நிரம்பி ஸர்வ விதத்திலும் பந்துவாய் சரணாயுள்ளவன் என்பது விளக்கப்படுகிறது. பின்னர் நாராயணாய என்ற சொல்லிலுள்ள ஆய என்ற நான்காம் வேற்றுமைப் பொருள் ஸ்ரீவைகுண்டம் செல்லும் ஜீவாத்மா அங்கு செய்யும் கைங்கர்யங்களைக் (தொண்டுகள்)

குறிப்பிடும். இவ்வாறு எட்டெழுத்துத் திருமந்திரப் பொருளையுணர்ந்தால் ஜீவாத்மா பரமாத்ம ஸ்வரூபத்தை யறிந்து முக்தியையடையலாம்.

**(அடுத்தபடியாக 7,8,9ஆம் பாடல்கள் த்வயாதிகாரப் பொருளை விளக்குவன)**

கர்ம யோகம், ஜ்ஞான யோகம், பக்தி யோகம் இவை மூன்றும் பெரிய காடு போன்றவை. இவற்றுள் அலைந்து திரியாவண்ணம் ஆசார்யர்கள் சரணாகதி (ப்ரபத்தி) மார்க்கத்தை உபதேசிக்க விரும்பி, மமகாரம் (எனது என்ற எண்ணம்) இன்றி கைங்கர்யம் செய்து வாழும் நல்வாழ்வை நமக்களிக்க, பிராட்டியை விட்டுப் பிரியாத எம்பெருமானின் வலிய திருவடிகளையே துணையாக ஸம்ஸாரக் கடலைத் தடுக்கும் அணையாகக் கொண்டு அவனைச் சேர்கின்றேன் என்ற பொருளை திவ்ய மந்திரத்திற்கு உரியதாய் எடுத்து உபதேசித்தனர். இம்மந்திரத்தால் சேதனன், எம்பெருமான் திருவடிகளைச் சரணடைகிறான். எம் பெருமானே சேதனனை ஓர் உபாயத்தில் ஈடுபடச் செய்து தன் பெருமையை நிலைநாட்டிக் கொள்கின்றான். அவன் நமக்காக அர்ச்சா ரூபத்தில் (விக்ரஹங்களாய்) எழுந்தருளி அருள்புரிகின்றான்.

**(பின்னர் பாடல் 10 முதல் 14 வரை - சரமச்லோகாதிகாரம்)**

பக்தி யோகாதிகளில் சக்தியற்றவனை எம்பெருமான் பிரபத்தியில் மூட்டிப் பலன் தருகிறான். கண்ணனைத் தேர்த்தட்டின் மீது நின்று அவனடிகளையே சரணமெனப்

பற்றிடவும்-பிறவுபாயங்களையெல்லாம் உபாயமென்-றெண்ணுமல் மறந்திடவும், உபதேசித்தான். இவ்வாறு ப்ரபத்தி செய்தவன் எம்பெருமானைப் பரமபதத்திலே நெருங்கிப் பணி செய்யும் நல்ல நாளுக்காக மிகவும் துடிதுடிப்பான். இவ்வாறு அருமையான மூன்று ரஹஸ்யங்களாலும் சிஷ்யர்களுக்குப் பரவலான புகழ் ஏற்படும் என்றும், மிக்க செல்வம் கிட்டும் என்றும், புண்ணியமுண்டு என்றும், எதிர்பாராமல் ஆசார்யர்கள் கன்றுக்குப் பாலூட்டும் பசுவைப் போன்றே கைம்மாறு கருதாமல், உபதேசத்தை நல்லமுறையில் நவ்குவர். க்ருபா மாத்ர ப்ரஸந்நாசார்யர்கள் என்ற பெயர் அவர்களுக்கு இதனுலேயே வந்ததாகும்.

**(அடுத்தபடி, 15 முதல் 19 வரையுள்ள பாக்கள் - 3.2.3 அபயப்ரதான ஸாரம்)**

சேதனர்கள் பிழைகளைச் செய்திட்டாலும், எம்பெருமானைச் சரணடைந்து விட்டால், அவன் காப்பாற்றி விடுவான் என்பதே வேதங்களின் சாரமாகும். ஸ்ரீராமபிரான் தன்னைச் சரணடைந்தோரைக் காத்தே தீருவேன் என்று செய்த பிரதிஜ்ஞையை நினைத்தால், யாரும் எளிதில் நல்வாழ்வு பெற வாய்ப்புண்டு. இத்தகைய எம்பெருமானின் திருவடிகளைப் பற்றுபவனே, பகுத்தறிவாளன். மற்றவர் பற்றிப் பேசியென்ன மற்ற யோகங்களைச் செய்யும்போது, ஆங்காங்கு நிறை வேருது விட்டுவிட்ட பகுதிகளை நிறைவேற்றவும், ப்ரபத்தியே பெரிதும் துணை செய்கிறது. ஆதலின், மற்ற யோகங்களையும் சாதித்துத் தர வல்லது பிரபத்தியேயாகும். ப்ரணவத்தின் பொருளை நன்குணர்ந்தால், ப்ரபத்தி

ஸ்வரூபத்தை நன்கறிந்ததாகும். காகாசுரன் போல் தன் பிழையைத் தான் உணர்ந்து வேறு கதியில்லையென்று அவனைச் சரணடைந்தால் - அவன் காப்பது உறுதியே. இவன் கைங்கர்யமே நம் போன்ற சேதனர்க்கு புருஷார்த்தம். ப்ரபத்தியால் வசப்படும் அவனது அருளே அதைப் பெறச் சிறந்த உபாயமாகும்.

**(பின்னர் 20 முதல் 23 வரை பாடல்கள் - (3.2.4) ரஹஸ்ய சிகாமணி)**

பூமிதேவி, ஞானமும், சக்தியும், பக்தியுமில்லாத சேதனர் உய்ய, எளிதானதோர் உபாயத்தை யருளுமாறு கருணையால் வராஹாவதாரப் பெருமாளிடம் வேண்டி நிற்க, அவர், இரு ச்லோகங்களால் - ப்ரபத்தி மார்க்கத்தை அவளுக்கு உபதேசித்தார். அவையே வராஹசரமச்லோக மெனப்படுகின்றன. இவற்றை ஆசார்யர்கள் மூலம் அறிந்தால் நல்ல ஜ்ஞானம் கிட்டும். அவற்றின் கருத்தாவது: என் உடலான சேதனர்கள், பிறப்பும்-இறப்பும் இல்லாத என்னை, பேரன்புடன் 'உறுதியான கதியாவேன்' என்று நம்பிச் சரணடைந்தால் உயிர் நீங்குகையில், அவர் உய்யும் வழியை நானே நினைத்து, சிறந்த அர்ச்சிராதி கதியால், பரமபதத்தைச் சேர்ப்பித்து, என்னுடன் வாழும் நிலையை யளிப்பேன் என்றார். வராஹப்பெருமானின் இந்தக் கூற்றை நினைத்து அஜ்ஞானம் நீங்கப் பெற்றோம்.

இவ்வாறு வராஹ சரமச் லோகச் கருத்தினைப் பின்பற்றி எம்பெருமானைச் சரணடைந்தார்க்கு, எல்லா வினைகளும் நீங்கிவிடும். சேதனனின் தர்ம பூதஜ்ஞானம் என்பது பூமியிலே எல்லாவற்றையும் அறியவொண்ணாது

சுருங்கிச் கிடக்கிறது. முக்தி பெற்ற பின் அந்தஜ்ஞானம் மலர்ந்து எல்லாவற்றையும் அறியவல்லது. அவன் முக்தி பெறும்போது அவனைவிட்டுக் கர்மாக்கள் அனைத்தும் ஒழிய வேண்டியவையாதலின் அவன் செய்த புண்யங்கள் அவன் நண்பர்களையும், பாவங்கள் விரோதிகளையம் போயடையும் என்பது உபநிஷதக் கருத்தாகும். (வே) சேதனன், தன் சரீரம் அநித்தியமானது பெரிய மலை கூட அழியும்போது, நம் உடல் பற்றி என்னே கூறுவதற்கு உள்ளது-என்று உணர்ந்து ப்ரபத்தியைச் செய்யக் கடவன்.

## (24ஆம் பாடல் - (3.2.5) அஞ்சலியின் பெருமை)

1. ஆளவந்தார் அருளியபடி அஞ்சலி செய்வது (கை குவித்து வணங்குவது) அளவற்ற பெருமை வாய்ந்ததென்ற உறுதியாய்த் தெளிந்தபின் அற்ப புத்தியுள்ளவரின் வாதங்களை யொழித்து, பழம்பெருமை வாய்ந்த ப்ரபத்தியையே உபாயமாகக் கொள்வோம். கைகளைக் கூப்புதல் என்றும் அஞ்சலியைக் காணும் எம்பெருமான் அடையும் உவப்பிற்கு எல்லையேயில்லையாம். இந்த அஞ்சலி எம்பெருமானிடம் ப்ரபத்தி செய்தவன், தன்னைக் காத்துக் கொள்ள மறுபடி வேறு ஒரு கார்யமும் செய்ய வேண்டாமென்றும் நிலையைக் காட்டுகிறதாம்.

## (அடுத்து 25,26,27 ஆம் பாடல்கள் - 3.2.6 ப்ரதான சதகம்)

## (உவமை நயம்)

நம்மாழ்வார் முதலிய பூர்வாசார்யர்கள் நமக்கு முக்கிமாய்க் காட்டிய உபதேசங்கள், ஆறுகளுள் கங்கை

போலவும், ஏழு கடல்களுள் பிராட்டியார் தோன்றிய பாற்கடல் போலவும், சங்குகளுக்கிடை பாஞ்சஜன்யம் என்ற திருமாலுகந்த சங்கு போலவும் மிகச் சிறந்தவை.

எம்பெருமானே ஆசார்யனாய்த் தோன்றி, மரக்கலம்போல் சேதனனை ப்ரபத்தியில் ஈடுபடுத்தி, பந்தத்தை (கட்டினை) தீர்க்கின்றான். ஆதலின், சேதனன் அவ்வெம்பெருமானுக்கே கடமைப்படுகின்றான். மற்ற தெய்வங்கள் சிறு தெப்பம் போன்றவை. நீர்க்குமிழி போன்றவை. ஆதலின் ஆசார்யர்களின் உபதேசத்தாலேயே அவன் கடைத்தேற முடியும்.

**(பின்னர், 28,29,30 ஆம் பாடல்கள் - 3.2.7 உபகார சங்க்ரஹம்)**

எம்பெருமான் ஜீவனின் ஸ்வரூபத்தையும் மாற்ற வல்லனாயினும், தன் நித்யமான ஸங்கல்பத்தாலே அவனை நித்யனாக்கி; அவன் ஸ்வரூபத்தையும், தர்ம பூதஜ்ஞானத்தையும் நித்யமாக்கி, அவனது ஸ்வபாவத்தையும் காக்கின்றான். ஆக அவனே எவ்வித உதவியும் செய்ய வல்லவன். வேதாந்தார்த்தங்களை-யறிந்தால், ஜீவாத்ம பரமாத்ம ஸ்வரூபங்களையெல்லாம் உள்ளவாறு உணரலாம். சரீரத்தை விட்டுப் பிரிந்து செல்லும் சேதனனுக்கு ஆதிவாஹிகர்களான அக்னி முதலிய தேவர்கள் மூலமாக, வழியிலே உபசாரங்களைச் செய்வித்துப் பரமபதம் தரும் எம்பெருமானின் உதவியை ஒருவரும் அளவிட வியலாது.

**(31-ஆம் பாடல் - ஸார ஸங்க்ரஹம்)**

எம்பெருமான் ப்ரபந்நனுக்கு ஒரு பொறுப்பையும் வைக்காது தானே காக்கின்றான் என்ற செய்தி இதில் காட்டப்படுகிறது.

**(அடுத்தபடியாக, 32,33,34-ஆம் பாடல்கள் 3.2.8 விரோதபரிஹாரம்)**

எம்பெருமான் பாகவதர்கட்கு அனுகூலமாக மன உறுதியைத் தருகின்றான். எம்பெருமானாரின் (ஸ்ரீராமானுசரின்) புகழ் எங்கும் பரவி நீரையெல்லாம் பாலாக்கிவிட்டமையால், பாலையும் நீரையும் பிரிக்கும் திறனையிழந்த அன்னம் தவிப்பதாக, ஓர் கற்பனை உரையாடல் இங்கு அமைந்துள்ளது. ஆசார்யர்களின் உபதேசத்தால் பிற மதத்தவர் அறிய இயலாத பேருண்மைகளையறிய நமக்கே வாய்ப்புள்ளது.

**(பின் 35,36,37-ஆம் பாடல்கள் - அமலனாதிபிரான் 3.2.9 முனிவாஹன போகம்)**

அமலனாதிபிரானின் பொருளை நன்குணர்ந்த பாகவதர்கட்கு, மனம் எம்பெருமானிடமே ஈடுபடும். இப்பிரபந்தம் எல்லாப் பலன்களையும் கொடுக்கவல்லது. ஆதலின்,அதுவே சேதனர்கட்குச் சிறந்த கதியாகும். ஸகல வேதார்த்தங்களையும் தன்னுள் அடக்கியுள்ள அமலனாதிபிரானுக்கு அரிய 'முனிவாஹன'போகம் என்னும் உரையை ஆசார்யர்கள்பால் கேட்டு, உணரவேண்டும். இதனால், வேதாந்தாசார்யன் என்னும் விருதை அரங்கநாதன் அருளால் பெற்றபோதிலும், நாம் கர்வம் கொண்டவரல்லோம்; நன்மை தீமைகளை

நமக்கெடுத்துரைக்க வல்ல ஆசார்யர்கள் உள்ளனர். அவர்களை நாடியே நிற்போமாகஎன்கிறார்.

## (3.2.10 பரமபத ஸோபாநம் - 21 பாடல்கள்)

இதே பிரபந்தத்தின் பெயரில் ஒரு ரஹஸ்ய நூலும் விரிவாக ஸ்ரீவேதாந்த தேசிகனாலேயே இயற்றப்பட்டுள்ளது. அது மணிபவள நடையிலுள்ளது. அதிலுள்ள பாடல்களின் தொகுப்பு தேசிகப் பிரபந்தத்தில் உள்ளது. ஓர் உயரமான இடத்திற்கு போகப் படிக்கட்டு தேவைப்படுவதுபோல், பரமபதத்தை அடைய ஒன்பது விஷயங்களை 9 படிகளாக அமைத்துக் கற்பனையால், இந்நூலை அமைத்துள்ளார். ஆதலின், பரமபதத்திற்கான படிக்கட்டு என்ற பொருளில் இதன் பெயர் வைக்கப்பட்டது.

இந்நூலில் கூறப்படும் ஒன்பது படிகளாவன:-

1. தத்துவங்கள் முதலியவற்றை உள்ளவாறு வகுத்து அறிதல்.
2. மனந்தளர்தல் அடைந்து ப்ரபத்தி மார்க்கத்திலிழிதல்.
3. உலக சுகங்களில் ஆசையறுதல்.
4. தன் பாவங்களின் மிகுதியால் இனிவரக் கிடக்கும் நரகானுபவம் - முதலிய துன்பங்களுக்கு அஞ்சுதல்.
5. எம்பெருமான் மோக்ஷத்தையருளக் காரணமான உபாயங்களைச் செய்தல்.
6. இவ்வுடலிலிருந்து ஜீவன் வெளியேறுதல்.
7. அர்ச்சிராதி மார்க்கத்தில் செல்லுதல்.
8. ஸ்ரீவைகுண்டத்தையடைதல்.
9. அங்கு எம்பெருமானைக் கண்ணாரக் கண்டு அனுபவித்து அவ்வின்பத்திலே மூழ்கித் திளைத்தல்.

என இந்த விஷயங்கள் இந்நூலிலே சுருக்கிக் கூறப்படுகின்றன.

### 3.2.11 பிறர் மதம்கடிதல்

அடுத்து 'பரமதபங்கம்' என்ற நூலில் 54 பாடல்களுள்ளன. பிற மதங்களின் முடிவுகளையும், அவற்றின் உள்ள குற்றங்களையும் நமது மதத்தின் மேன்மையையும், யாவரும் உணர வேண்டி, இந்நூலை மணிபவள நடையில் அமைத்திட்டார். ஒவ்வோர் அதிகாரத்தின் முதலிலும் முடிவிலும் கருத்தைத் தொகுத்துள்ள பாடல்கள் கொண்டு "பரமதபங்கம்" என்ற பிரபந்தமாகியது.

முதலில் பிற மதங்களைக் கண்டிக்கும் ஆற்றலைத் தமக்கு அருள் புரியுமாறு திருவாழியாழ்வானைத் துதித்து வேண்டுகிறார். பின்பு ஆசார்யர்களின் பேருதவியைப் போற்றி, நம் சித்தாந்தத்தின்படி மூன்று தத்துவங்களை விளக்கிப் பிற மதங்களைக் கண்டிப்பதன் அவசியத்தைக் காட்டுகிறார். பிற மதங்களிலுள்ள குற்றங்களை வெளியிட்டு, சார்வாக மதம், பௌத்தத்தின் நாற் பிரிவுகளான மாத்யமிகம், யோகாசாரம், ஸௌத்ராந்திகம், வைபாஷிகம் என்பனவற்றையும், அத்வைதம், ஜைனம், பாஸ்கர மதம், யாதவ மதம், வையாகரணமதம், கணாதமதம், கௌதம மதம், மீமாம்ஸக மதம், ஸாங்க்ய மதம், யோக மதம், பாசுபத மதம், இவற்றின் கொள்கைகளைச் சுருக்காமாகக் கூறிப் பின் அவற்றைக் கண்டித்து, இறுதியில் பாஞ்சராத்ர சாஸ்திரப் பெருமை, சரணாகதியின் பெருமை, நாம் பலன் பெறும் வகை இவற்றைக் காட்டி,

நம் முன்னோர் காட்டிய ஸம்பிரதாயமே (மரபே) சரியானது என்று நிறுவி, இவ்வாறு பிற மதங்களைக் கண்டிக்கும் ஆற்றலைத் தமக்கருளிய திருவாழி யாழ்வானின் பதினாறு திருக்கரங்களின் வலிமையைப் போற்றி இந்நூலை முடிக்கின்றார். பதினாறு மதங்கள் கண்டிக்கப்பட திரிருவாழியாழ்வானின் பதினாறு (16) கரங்களையும் போற்றிய கற்பனைநயம் பொருத்தமாய்த் தோன்றுகிறது.

### 3.2.12 மெய்விரதமான்மியம்(தலப்பெருமை)

எம்பெருமானையடைக்கலமடைந்த பிரம்மதேவன் பயன் பெற்றமை.

ஸத்யவ்ரதம் என்னும் காஞ்சியம்பதியின் பெருமை. ஸத்யவிரதமாஹாத்ம்யம் என்ற மணிபவள நடையில் தேசிகனார் அருளிய நூலில் உள்ள பாசுரங்களால் அமைந்தது இந்நூல். இங்கு செய்யப்படும் விரதங்கள் போன்றவை உடனுக்குடன் பலன் தருகின்றமையால் இப்பதிக்கு ‘ஸத்யவ்ரத க்ஷேத்திரம்’ எனப் பெயர் ஏற்பட்டது. இங்கு பேரருளாளன் (வரதராசப் பெருமாள்) அவதரித்த பெருமை இந்நூலில் விளக்கப்படுகிறது. இந்த சம்பிரதாயத்திற்கு இன்றியமையாத ஆறு பொருட்களை இவ்வெம்பெருமான் அருளியவாறு ஈண்டு உள்ளத்தில் கொள்ளவேண்டும். இதன் சுருக்கம் வருமாறு.

முன் செய்த பாவத்தால் பிரம்மதேவன், நேரில் எம்பெருமானைச் சேவிக்க இயலாமல், பாரத தேசத்திலே ஓரிடத்தில் வந்து, கடும்தவம் புரிந்தான். அப்போது அவனெதிரே வானில் ஓர் அசரீரி வாக்கு, “பிரம்மனே! நீர் ஸத்யவ்ரத க்ஷேத்ரம் சென்று அத்திகிரியை யாகத்தின்

வேதியாகக் (குண்டமாக) கொண்டு அசுவமேதம் புரியும் என்று கட்டளையிட்டது. அவன் விருப்பப்படி, விச்வகர்மா என்னும் தேவசிற்பி அவ்வாறே - யாக வேதியை அமைத்தான். அதற்கு காஞ்சி எனப் பெயரிட்டு அங்கு யாகம் செய்யத் தொடங்கினான். (க - அஞ்சி= காஞ்சி = பிரம்மனால் பூசிக்கப்பட்டது எனப் பொருள்)

அப்போது பிரம்மனின் தேவியான கலைமகள், ஸரஸ்வதீ, ஊடலால் தனியே சென்று ஸரஸ்வதீ நதிக் கரையில் தவம் செய்யலானாள். மனைவி யாகத்தின் போது அருகேயிருத்தல் வேண்டுமாதலின், பிரம்மன் தன் புத்திரனான வசிஷ்டனை யனுப்பி, அவளை அழைத்துவரச் செய்தான். அவள் வர மறுத்தாள். வசிஷ்டன் திரும்பி வந்து தந்தையிடம் நிகழ்ந்ததைக் கூறவே, பிரம்மன் ஸாவித்திரி முதலிய மனைவியரைக் கொண்டு யாகத்தைத் தொடங்கினான். இந்நிலையில், யாகத்தைக் கெடுக்க எண்ணிய அஸுரர்கள் ஸரஸ்வதியிடம் சென்று அவளுக்குக் கோபத்தை வளர்த்தனர். சினந்த அவள் ஒரு நதியாக உருவெடுத்து வேகமாய்ப் பாய்ந்து யாகசாலையையே அழிக்க முற்பட்டாள். இதைக் கண்ட எம்பெருமான் தானே ஓர் அணையாக மாறி, குறுக்கே அவ்வாற்றைத் தடுத்துப் பள்ளிக் கொண்டான். ஸரஸ்வதி தேவி, சினம் தணிந்தவளாய் பிரம்மனிடம் வந்தாள். பின் அவளையும் துணை கொண்டு பிரம்மனால் யாகம் நடத்தப் பெற்றது. வேகவதிக்கு அணையாய் அமைந்ததால் திருமால் வேகாஸேது எனப் போற்றப் பட்டார்.

முடிவில், யாகவேதியிலிருந்து ஒரு பேரொளியும், புண்ய கோடி விமானமும் தோன்றின. அவ்விமானத்தின்

நடுவில் பேரருளாளனும் (வரதராசப் பெருமாள்) தோன்றினர். பிரம்ம தேவன், மகிழ்ச்சிக் கடலில் மூழ்கி, எம்பெருமான் திருவுள்ளப்படி அவ்விடமே தங்கியிருந்தருளுமாறு வரம் வேண்ட, அவரும் அவ்வரத்தை நல்கினர். பின் யாகத்தை முடித்த பிரம்மன், ஸத்யலோகம் சென்று, பகவானையே தியானித்திருந்தான் என்பது வரலாறு. இப்பிரபந்தத்தில் சந்தர்ப்பத்திற்கு ஏற்றவாறு பல சந்தங்களிலும் பாடல்களை இனிது அமைத்திருக்கும் அழகு அறிந்து இன்புறத் தக்கது. அது மட்டுமின்றி, எம்பெருமானர் (ஸ்ரீராமானுசர்) அருளிய ஸ்ரீபாஷ்ய நூலின் 16 பாதங்களின் சாரமான கருத்தையும் ஒரே பாசுரத்தில் அமைத்து அருளிச் செய்துள்ள பாங்கு, 'ஸர்வதந்த்ரர்' என்ற விருதை உண்மையாக நிலை நாட்டுவதாயுள்ளது. அற்புதமான படைப்பு இது:- ஸரஸ்வதி தேவி ஆறாக வரும் நிலை - மெய்விரத மான்மியத்தில் (பாடல்12)

## பதின்மூன்று சீராசிரிய விருத்தம்

அன்னவடி வாலாசையு மன்னநடை யாளுயரு மன்னவர சேறி வருவா
ளத்தனைய னத்தனைய னுத்திதனை யத்திதென வுத்தி புரியா
ளன்னடைவிடாநடமி தென்னநட வாநடுவு நண்ணுகுவ டேறி யிழிவா
ணற்பதிக ளற்பதிகள் கற்புரள வற்புரம ருற்க தியினல்
கண்ணடைவி டாவிடமி லுன்னதிசி ருவிகட மன்னுகிரி கூட மிடியக்
கட்டவிடை யிற்றுவிழ முற்றும்விழி யுற்றடைய விட்டருகுற
வன்னநய சீரயனி தென்னெனவி ழாவமரர் மன்னுபதி யேறிமகிழ
வச்சுதன ணைத்தனுவி லத்தினசவ ரத்தகைய வற்றணுகினள்.

(கருத்து)

1. கலைமகள் அன்னம் போல் அழகும் நடையு-முடையவள், அதையே வாகனமாகக் கொண்டவள்.

2. அவள் தனயன் வசிட்டனின் வேண்டுகோளை இசைய மறுத்தனள்.
3. பிரம்மன் தன்னையழைத்தது வெளி நாடகமெனச் சினந்து வேள்வியைக் கெடுக்க நதியாய் வருகிருள். இடைப்பட்ட குன்றுகளின் மீதேறியுமிறங்கியம் வருகிருள்.
4. வாயு வேகத்தில் நதிவருகையில் சமமாயும், மேடுபள்ளமாயுமுள்ள கற்கள் புரண்டோடுகின்றன.
5. பெரும்பாறைகள் அசைந்து உருள, உயர்ந்த சிகரங்களும் இடிந்து விடுகின்றன.
6. மலையடிவாரங்களும் உடைய, நாற்றிசைகளிலும் பார்வையைச் செலுத்தி யாக வேதியருகே வருகிருள்.
7. தீட்சை பெற்ற பிரம்மனும் திகைக்க, தேவர்கள் அஞ்சி ஓடியபின் மகிழ்கின்றனள்.
8. இதுபோது பக்தரைக் காக்கும் எம்பெருமான் அணையுருக் கொண்டு எழுந்தருளவே வேகம் குறைந்து யாகசாலையை நெருங்கினுள்.

என்பதாம்.

### 3.2.13 அடைக்கலப் பத்து:

ஸ்வாமி தேசிகனுர் பேரருளாளன் திருவடிகளைச் சரணடைந்த முறையினை பத்துப் பாசுரங்களால் இந்நூலில் விளக்குகிருர். முதலில், காகாசுரன், வீபீஷணுழ்வாள் போன்ருேர் சரணம் அடைந்தமையால் பயன் பெற்றதைக் காட்டி, சரணுகதியில் ஸ்வநிஷ்டை, உக்தி நிஷ்டை, ஆசார்ய நிஷ்டை, பாகவத நிஷ்டை என்ற நான்கு பிரிவுகளைக் கூறி, தான் பேரருளாளனிடம்

சரணாகதி செய்து நூலை முடிக்கிறார். இதே கருத்தினை ந்யாஸதசகம் எனும் வடமொழிப் பிரபந்தத்திலும் இவரே வெளியிட்டுள்ளார். கொச்சகக்கலிப் பாக்கள் பதினொன்றினைக் கொண்டது இப்பிரபந்தம்.

### 3.2.14 அர்த்த பஞ்சகம்:

இப் பிரபந்தமும் பேரருளாளனையே பற்றியதாய் 11 கொச்சகக் கலிப்பாக்களாலானது. இதில் முக்தி பெற விரும்புபவன், உணர வேண்டிய ஐந்து பொருட்கள் விளக்கப்படுகின்றன. அவை,

1. நம்மால் அனுபவிக்கப்பட வேண்டிய எம்பெருமானின் ஸ்வரூபம்.
2. அனுபவிக்க விரும்பும் ஜீவாத்மாவின் ஸ்வரூபம்.
3. எம்பெருமானை அடைய முடியாமல் தடுத்துவரும் பாவங்களாகிய இடையூறுகள்.
4. முக்திக்காக நாம் செய்யக்கூடும் உபாயங்கள்.
5. பயனாகப் பெறும் எம்பெருமானின் அனுபவம்.

இவை ஒவ்வொன்றும் இரண்டிரண்டு பாசுரங்களில் இப்பிரபந்தத்திலே விளக்கப்படுகின்றன. இதுவரை தத்துவ விளக்க நூல்களாகும்.

### 3.2.15 ஸ்ரீவைணவ தினசரி தத்துவம் தளிர்க்க - நல்லொழுக்கப் பகுதி

நல்லொழுக்கம் வாழ்க்கைக்கு இன்றியமையாத தென்பதால் அதைவிளக்கும் நூல்கள் சில. அவற்றில் ஒன்றிது.

10 பாசுரங்களில் ஒவ்வோர் வைணவனும் ஒவ்வோர் நாளிலும் ஐந்து காலங்களில் செய்யவேண்டிய ஐந்து கார்யங்களை அழகுபட எடுத்துக் காட்டுகிறது. ஐந்து காலங்கள்:- அபிகமனம்,உபாதானம், இஜ்யை, ஸ்வாத்யாயம், யோகம் என்பன.அவற்றில்

1. அபிகமன வேளையில் அன்றைய கைங்கர்யங்கள் தடையற நடந்திட, எம்பெருமானை வேண்டுதல்.
2. உபாதான வேளையில் - எம்பெருமானின் திருவாராதனத்திற்கு (வழிபாட்டிற்கு) உரிய திருத்துழாய், மலர்,. சந்தனம் முதலியவற்றைச் சேகரித்தல். ஆழ்வார், ஆசார்யர்களின் அருளிச் செயல்களால் காலத்தைப் பயன்படுத்தல்.
3 .இஜ்யை காலத்தில் - முன்னோர் உபதேசித்துள்ள முறைப்படி, எம்பெருமானுக்குத் திருவாராதனம் செய்தல்.
4. ஸ்வாத்யாய வேளையில் வேத வேதாந்தக் கருத்துக்களைப் படித்து மனனம் செய்து பொழுது போக்கல்.
5. யோக வேளையில் - தான் உறங்கும்போது, எம்பெருமான் திருவடிகளில் தன் தலையை வைத்துள்ளதாய் தியானித்துப் பின்னர் உறங்கத் தொடங்கல். இவ்வாறு உரிய முறையில் பூசைவழிபாடுகளைச் செய்வது சரணடையும் ஜீவாத்மாவின் இன்றியமையாத கடமையாகக் கருதப்படுவதால் இந்நூல் மரபை நிலை நாட்டுவதாகிறது.

### 3.2.16 திருச்சின்ன மாலை:

தத்துவப் பொருளான இந்நூல் 11 பாடல்களைக் கொண்டது இந்நூல். எம்பெருமான் கோயில்களில் ஒலிக்கும் வாத்தியம் திருச்சின்னமாகும். இனிய கம்பீரமான அதன் ஒலியிலே எம்பெருமானின் பெருமைகளை ரஹஸ்யமாகக் காட்டும் திருமந்திரம் மூன்றின் பொருட்களையும் தியானித்து அந்த வாத்யத்தின் பெயராலேயே அமைந்த இந்நூலினுள் ரஹஸ்யார்த்தங்கள் அனைத்தையும் விளக்கிக் காட்டுவது அற்புதமாகும். முதல் 6 பாக்களால் திருமந்திரத்தின் பொருளும், 7 ஆவது பாவினுல் த்வயத்தின் பொருளும், 8,9 ஆவது பாக்களால் சரமச்லோகத்தின் பொருளும், 10ஆவதால் பேரருளாளனின் பெருமையும், 11ஆவதால் ஆசார்ய உபதேச சாரமடங்கிய இப்பிரபந்தத்தில் இனிமையைச் சிற்றின்பப் பற்றின்றி, எம்பெருமானிடம் பற்றுடன் ஈடுபடுபவரே அனுபவிக்க முடியுமென்றும், விளக்கப்படுகிறது. எண் சீராசிரிய விருத்தத்தால் ஆகியது இப்பிரபந்தம். இதனருமையால் உவந்த பேரருளாளன் தேசிகனுக்கு ஒற்றைத் திருச்சின்ன வாத்யத்தை அருளிவிட்டானென்பது அத்தல வரலாறு. எவ்விதத்திலும் எங்கும்-இயற்கையிலும், திருமந்திரம் முதலிய ரஹஸ்யக் கருத்துக்கள் துணையாகச் சரணுகதியிலே நூல்கள் கருத்துக் கொண்டு மிளிர்கின்றன.

### 3.2.17 பன்னிரு நாமம்:

சமயத்தொடர்புடையது இது. பேரருளாளன் விஷயமாக வேயமைந்த இப்பிரபந்தம் 13 கட்டளைத் கலித்

துறைகளாலானது. ஸ்ரீவைஷ்ணவர்கள் தம் உடலில்தினமும் 12 திருமண் காப்புகளைத் தரித்துக்கொள்ள வேண்டும். ஒவ்வொன்றையும் தரித்துக் கொள்கையில் கேசவன், நாராயணன் முதல் 12 திருநாமங்களைத் தியானித்தே தரித்துக் கொள்ளல் வேண்டும். அந்த 12 எம் பெருமான்களையும், தியானிக்க வசதியாக அவர்களின் நிறம், ஆயுதங்கள், வீற்றிருக்கும் திசை நம் உடலில் திருமண்காப்பாய் அவர் அமரும் இடம் என்பன முறையே 12 பாக்களில் விளக்கப்படுகின்றன்.

12 திருமண்காப்பு அணிபவர் இப்பிரபந்தத்தைக் கூடவே அனுஸந்திக்கக் கடவர். நடைமுறையில் சிலர் அனுசந்திக்கின்றனர். ப்ரபத்தி செய்தவன் கடமையாக இந்த அனுசந்தானம் இங்கு விதிக்கப்படுகிறது.

இவ்வாறு இந்நூல் அனுஷ்டானத்திற்கு (நன்னடத்தை) இன்றியமையாததாய் அமைந்துள்ளது. இத்தலைப்புக்களுடன் தனியே பிரபந்தத்தின் சாரம் கொடுக்கப்பட்டுள்ளது.

### 3.2.18 திருமந்திரச் சுருக்கு:

இது முதல் மூன்று தத்துவப் பொருளுள்ளன. இதில் 10 பாடல்கள் உள்ளன. அஷ்டாக்ஷரம் என்ற திருமந்திரத்தின் பொருளை எழுத்தெழுத்தாய் பதம் பதமாய் விளக்குவது இப்பிரபந்தம்.

### (13) துவயச் சுருக்கு:

இது 12 பாடல்களைக் கொண்டு த்வய மாமந்திரத்தின் நுட்பமான பொருட்களை விளக்குவது.

**(14) சரமச்லோகச் சுருக்கு:**

11 பாடல்களைக் கொண்டு இந்நூல் கண்ணன் கீதையில் அருளிய சரமச்லோகத்தின் கருத்தை நன்குவிளக்குவது. இம்மூன்றும் ரஹஸ்ய நூல்கள் என்ப்படும். பரம்பரை பரம்பரையாக ஆசார்யர்களால் சீடர்களுக்கே உபதேசிக்கப்பட்டு, அவர்களால் தியானிக்கப்படும். மூன்று மாமந்திரங்களின் பொருட்கள் இம்மூன்று பிரபந்தங்களிலே யடக்கம் பொருளறிந்து மந்திரங்களை ஜபம் செய்வதே சிறந்ததாதலின், இந்நூல் அத்தகைய பொருளை விளக்கும் வாயிலாகப் பெரிதும் உதவுகிறது. இம்மூன்று ரஹஸ்யங்களின் பொருளுணர்தலும் சரணுகதி செய்தவனுக்கு இன்றியமையாததெனக் காட்டப்படுகிறது.

### 3.2.19 கீதார்த்த சங்க்ரஹம்:

இது தத்துவ நூல் 21 பாடல்களைக் கொண்ட இப்பிரபந்தம் கண்ணனின் பகவத் கீதையினது பொருளைச் சுருக்கி விளக்குகிறது. ஆளவந்தார்அருளிச் செய்த கீதார்த்த சங்கிரஹமென்னும் வடமொழி நூலைப் பின்பற்றி இனிய தமிழில் இதனை அருளியுள்ளார். இந்தப் பிரபந்தத்தின் சாரப் பொருளாவது:-

ஸ்ரீவைகுண்டத்தில், ஸ்ரீதேவி, பூதேவி, நீளாதேவி-யருடன் -நித்யஸூரிகள் - பக்தர்கள் முக்தர்களால் சூழப்பட்டு உலகினைக் காத்துவரும் ஸ்ரீமந்நாராயணன், கர்ம பூமியிலுள்ள சாதுக்களைக் காக்கவும், பொல்லாதவர்களை யழிக்கவும் தர்மத்தை நிலை நாட்டவும், கண்ணனுய் அவதரித்தனன். தன்னைச் சரணடைந்த

பாண்டவர்களுக்காகத் தூது செல்வதையும் ஏற்றான். போர்க் களத்தில் அர்ச்சுனன் தேரில் பாகனுயமர்ந்து தாழ்ந்து நின்றான். பார்த்தனைப் பெயரளவில் நிறுத்திக் கௌரவர்களையழிக்கத் தானே காரணமாய் அமர்ந்தான். இதனைக் கண்ட, அர்ச்சுனன் தன் உறவினர் போரில் மடிவது உறுதியென்று உணர்ந்தான். தகாத இடத்திலும் நேரத்திலும் அவன் அன்பும், இரக்கமும் கொண்டு, செயலிழந்து நின்று, தடுமாறினான். தன் ஆசிரியர்களும், உறவினர்களும் உயிரிழக்க விருப்பதையெண்ணி நிலைகுலைந்தான். அரசர்கட்குரிய போரினை அதர்மமென எண்ணினான். இவ்வாறு கலங்கிய அர்ச்சுனன் கண்ணனைச் சரணடைந்தனன். தனக்கு நலம் பயப்பதான கருத்தை உபதேசிக்குமாறு கண்ணனிடம் வேண்டினான்.

கண்ணன் அவன் கலக்கத்தை நீக்கிடக் கருதினன். அவனைச் சாக்கிட்டு, பகவத் கீதையெனும் அமுதத்தை உலகுக்குப் பொழிய எண்ணினான். முதலில், அவன் சரீரத்தைவிட வேறுபட்ட ஜீவாத்மாவின் ஸ்வரூபத்தை நித்யமான தென்று உபதேசித்தான். பின்னர், இத்தகைய ஆத்மஸ்வரூபத்தை நன்கு உணர்ந்தவன், முக்தி பெறக் காரணமாக கர்மயோகம், ஜ்ஞானயோகம், பக்தியோகம் இவற்றை உரிய அங்கங்களுடன் உபதேசித்தான். அர்ச்சுனனைச் சோதிக்க எண்ணி இவ்வுபாயங்களுள் நீ விரும்புவதைக் கொள் என்று கூறி நிறுத்தினான். நிலையான வழியைக் காட்டாமல், தன்னைத் தவிக்கவிடுவதாய் எண்ணிய அவன், துக்கம் நிரம்பி நின்றான். மறுபடியும் கண்ணன் பக்தியோகத்தையே

உறுதியாக உபதேசித்துப் பார்ப்போமெனக் கருதினன். இதைப் பரம ரஹஸ்யமென்றும் கூறினன்.

இதைக் கேட்டு, அர்ச்சுனனின் சோகம் பெருகியது. ஏனெனில், பக்தியோகம் செயற்கரியது. அதற்கு ஜ்ஞானமும், சக்தியும் மிகவும் தேவையாகும். கவனத்துடன் நீண்டகாலம், அதைச் செய்யவேண்டும். விரைவில், பயனும் கிட்டாது. ஆதலால், அவன் கலங்கினன். கலக்கத்தைக் கண்டதும் உலகை உய்விக்கக் கருதிய கண்ணன் முக்திக்கும் பிற வெற்றிகளுக்கும் சாதனமாய்-வகுத்த அங்கங்களைத் தவிர, வேறொன்றையும் எதிர்பாராததாய் எளிதில் ஒரு நொடியில் செயத்தக்கதாய்-பரமரஹஸ்யமாயுமுள்ள பிரபத்தியென்னும் சரணகதி மார்க்கத்தை உபதேசித்தருளினன். இதைக் கேட்ட அர்ச்சுனன் கலக்கம் நீங்கி அவன் ஆணையை ஏற்று நடந்து, உய்ந்தனன்.

இவ்வரலாறே பகவத்கீதையாய் அவதரித்தது. இது உபநிஷத்துக்களின் ஸாரமென்றும், மஹாபாரதத்தின் உயிர்நிலையென்றும் சான்றோர் போற்றுவர். எம்பெருமானார், இதன் உண்மைக் கருத்துக்களை விளக்க, கீதாபாஷ்யம் என்னும் உரைநூலை அருளினார். ஸ்ரீதேசிகனும் அந்த பாஷ்யத்திற்கு தாத்பர்ய சந்த்ரிகை யென்னும் உரைநூலை இயற்றியருளினர். இதில் பிற மதத்தினரின் உரைகளைக் கண்டித்து, எம்பெருமானாரின் உரையே சிறந்ததெனக் காட்டுகிறார். ஆளவந்தாரருளிய கீதார்த்த சங்கிரஹத்திற்கும் கீதார்த்த சங்கிரஹரக்ஷை என்றொரு உரைநூலை வெளியிட்டார். இவற்றின் விளக்கமாக ஆஸ்திகப் பெருமக்கள் அனைவரும் எளிதில்

உணருமாறு, எளிய தமிழில் தேசிகனார் இந்நூலை அமைத்தருளியுள்ளார். முதல் பாட்டிலே, கீதை முழுவதன் ஸாரமான பொருளும் சுருக்கித் தரப்படும் அழகு அறிஞர்க்குப் பெரு விருந்தாகும்.

கருமமு ஞானமுங் கொண்டெழுங்
காதலுக்கோரிலக்கென்
றருமறை யுச்சியு ளாதரித்தோது மரும்பிரமம்
திருமகளோடு வருந்திரு மாலென்று தானுரைத்தான்
றரும முகந்த தனஞ்சய னுக்கவன் சாரதியே.

**கீதார்த்த சங்க்ரஹம்**

1. வேதாந்தங்கள், பக்தி யோகத்திற்கு இலக்கானவன் ஸ்ரீமந் நாராயணனே யென்று கூறுகின்றன. தர்மத்தில் கருத்தூன்றிய பார்த்தனுக்குத் தானே அத்தகைய பரப்பிரம்மம் என்ற ரஹஸ்யத்தை வெளியிட்டனன் என்பதே இந்நூலின் கருத்துச் சுருக்கம். பகவத் கீதையில் ஆறு ஆறு அத்யாயங்களாக மொத்தம் மூன்று ஷட்கங்கள் உள்ளன. முதல் ஷட்கத்தில் கர்மயோகமும் ஜ்ஞான யோகமும், இரண்டாவது ஷட்கத்தில் பக்தியோகமும், மூன்றுவது ஷட்கத்தில் - முற்பாதியில் சேதனம், அசேதனங்களின் சேர்க்கையாகிய உலகம், பரப்ரஹ்மம் இவற்றின் ஸ்வரூபங்களும், ஸ்வபாவங்களும் - பிற்பாதியில் கர்மம், ஜ்ஞானம், பக்தி இவற்றை அனுஷ்டிக்கும் முறையும், சாஸ்திரத்திற்குக் கட்டுப்பட்ட தன்மையும் இறுதியாக ப்ரபத்தியே சுருக்கமான எளிய வழியெனவும் முக்கியமாய் விளக்கப்படுகின்றன.

### 3.2.20 மும்மணிக் கோவை:

இப்பிரபந்தம், அகவல், வெண்பா, கட்டளைக் கலித்துறை எனும் மூவகைப்பாக்களால் அமைந்து மூவகை மணிகளால் அமைந்த முத்தாரம் போல விளங்குவதால் இப்பெயரைப் பெற்றது. இதன் தொடக்கத்தில் பிராட்டியின் பெருமையையும் - ஸ்ரீ என்ற சொல்லிற்கான ஆறு பொருட்களையும் பேசி தெய்வ நாயகனின் திருக் கல்யாண குணங்களையும் புகழ்கிறார். மேலும், அவனே எல்லாப் பொருளாயும் - எல்லாவித உறவினனுமாய் இருப்பவன். ஆதலின், அவன் திருவடிகளை உபாயமாகப் பற்றியவர் அவனுக்குச் சமமான நிலையை யடைவர் என்கின்றார்.

இந்நூலில் - தேசிகனுருக்குத் தெய்வநாயகன் (திருவயிந்தைப் பெருமாள்) மீதுள்ள அளவிலாக் காதல் பிற ஆழ்வார்களைப் போலவே, இதுவரையும் தம்மைத் தலைவியாகவும், பெருமாளைத் தலைவனாகவும் வைத்து, தோழி, செவிலி பேச்சாய்ப் பல பாடல்களையும் பாட வைத்துள்ளது.

முதலில், தெய்வ நாயகனைச் சரணடைய விரும்புமிவர், செங்கமலவல்லித் தாயாரிடம் - புருஷகாரம் - வேண்டிச் சரணாகதி செய்தே தொடங்குகிறார். இந்த மும்மணி மாலை திருமாலுக்கு மிகவும் உவப்பளிக்க-வல்லதென்று பாடுவது மிகுந்த நம்பிக்கையின் பிரதிபலிப்பாயுள்ளது. இந்நூல் 10 பாசுரங்களைக் கொண்டது. இவற்றுட்பல அகப்பொருள் பாசுரங்கள்.

### 3.2.21 நவமணிமாலை:

இதுவும் 10 பாசுரங்களைக் கொண்ட பிரபந்தமே, இதனை நவரத்தினமாலை யென்றும் கூறுவர். நவரத்தினங்கள் போல் ஒன்பது வெவ்வேறு பாக்களால் அமைந்தமையின் இப்பெயர் ஏற்பட்டது. இந்நூலில், காணும் கருத்துக்களாவன: திருவயிந்திரபுரத்-தெம்பெருமானின் பெருமைகள்: அவனெடுத்த பத்து அவதாரங்களின் வரலாறு: பிரம்மன், கருடன், திருவனந்தாழ்வான், பூமிதேவி என்போர் படைத்த புண்ய தீர்த்தங்களின் கரையிலேயவன் உகந்து எ.ழுந்தருளி-யுள்ளமை, மாசி மாதத்தில் பெருமாள் கடற்கரைக்கு எழுந்தருளி, திருமணல்-தோப்பில் உற்சவம் கண்டருளல்: அவனது வடிவழகு; அதில் மறவாத ஈடுபாடு கொண்டவர்கட்கு ஸம்ஸாரபந்தம் அற்றுப் போதல், தம் இறுதி காலத்தில் தனக்கு அபயமளிக்க, எதிரே தோன்றுமாறு தெய்வநாயகனை வேண்டுதல்: தெய்வநாயகனே தன்னைப் பாடுமாறு பணித்ததற்கிணங்க வடமொழியில் இரண்டும், தமிழில் ஏழுமாக ஒன்பது பிரபந்தங்களைப் பாடிச் சமர்ப்பித்தமை என்ற செய்திகள் இனிய முறையில் இதில் விளக்கப்படுவனவாகும். இந்நூலும் சரணாகதியைக் குறிக்கோளாகக் காட்டும் பிரபந்தமாய் மிளிர்கிறது.

### 3.2.21 ஆகார நியமம்:

சமயப் பழக்கவழக்கங்கள் ஆகார விஷயத்தில் நாம் கடைப்பிடிக்க வேண்டிய முக்கியமான கட்டுப்பாடுகளை சாஸ்திரங்களுக்கிணங்க எடுத்துக் காட்டி விளக்குவதால்

இப்பிரபந்தத்திற்கு இப்பெயர் ஏற்பட்டது. ஆகாரம் தூயதாயிராவிடில், மனத்தெளிவு ஏற்படாது. தெளிவற்ற மனதினன் எந்த நற்கார்யத்தையும் செய்ய உரியவனல்லவன். ஆதலின், இந்நூலில் முதலில் உண்ணக்கூடிய பொருட்களைக் காட்டி, பின் உண்ணக்கூடாத விலக்க வேண்டியவற்றையும் காட்டுகிறார். இவை அன்றாட வாழ்விற்கு இன்றியமையாதவை. அனுஷ்டானத்திலே, உணவு முறையும் ஓர் உறுப்பாகும். இது 15 பாடல்களால் ஆன நூல்.

**உண்ணத்தகாத பொருட்கள்:**

1. வீட்டின் கொல்லைப்புறம் போன்ற - தகாத வழிகளால் கொணர்ந்த பொருட்கள், வரகு -முதலிய தான்யங்களாலானவை, வாயிலிருந்து விழுந்த எச்சிலுடன் சம்பந்தப்பட்டவை, வாயில் போட்டுக்கொண்ட கவளத்தின் மிச்சம்; கொடியவர்களின் கண் பார்வைபட்டது. தீய்ந்து போன பொருள், துணி, எச்சில், தும்மல்பட்ட பொருள், நாய் முதலியன தீண்டிய அல்லது பார்த்த பொருள், ஏகாதசி போன்ற விரத தினங்களில் சமைத்த பண்டங்கள் இவை நீக்கத் தக்கவை.
2. மனிதர், பசு முதலியவற்றால் முகரப்பட்ட பொருள். தீண்டத்தகாத பதிதர் (பாவிகள்) நோயாளிகள் தீண்டிய பொருள், ஆதரவும் இனிமையுமின்றி இடப்பட்டது. ஈ, புழு, நூல், ரோமம், நகம் சம்பந்தப்பட்டது, துறவியால் கொடுக்கப்பட்டது. துறவியின் பாத்திரத்தில் பட்டது. மனிதர், எலி, கோழி,

காக்கை பூனைகளின் வாய்ப்பட்ட பொருள் இவை விலக்கத்தக்கவை.

3. அத்தியின் வகைகள், பேரார்க்கு, இறவி, வெண்கத்திரிக்காய், ஆல், அரசு, நறுவலி, புங்கு, அயில், ஆரை, திகைப்பூண்டு, குறிஞ்சி, தான்றி, குசும்பை, வேளை, சிவப்பு முருங்கை, நாட்டு முருங்கை, சுகம், தாமரைக்கிழங்கு, உள்ளி, சிறிய அவரை, தும்மட்டி, பண்ணைக்கீரை, தொய்யிற்கீரை, சீங்காடன், தேற்றங்காய், கோவைக்காய், பனை, நாயுருவி, கடம்பு, நாய்க்குடை, சுரைக்காய், பீர்க்கு, சணற்கீரை, அசுத்த நிலத்தில் விளைந்தவை என்றிவ்வகை காய்கறிவகைகள் விலக்கத்தக்கன.

4. சிறுகீரை, செவ்வகத்தி, முள்முருங்கை, புரசு, சிறுபசலை, பெரும்பசலை, அம்மணந்தான், பிறர் தோட்டத்தில் அனுமதியின்றி பறித்தவை, பொது (கோஷ்டி) வினியோகத்திற்கானதிலிருந்து முதலில் தனக்கென தனியே எடுத்து வைத்துக்கொண்ட பொருள். உண்பதற்கரிய கடுங்கசப்பும், உவர்ப்பும் உள்ளவை, மிக்க காரம், புளிப்பு உள்ளவையும் விலக்கத் தக்கனவாம்.

5. மேலும், இறைவனுக்கு நிவேதனம் செய்விக்காத பொருள், விருந்தினர்க்களிக்காது தனக்காக வைத்தவை, இக்காலத்தில் இவை உண்ணத் தகாதன எனக் கழிக்கப்பட்டவை, கடையில் வாங்கியபடியே கழுவாமல் சமைத்த காய்கறிகள் தீய வழியில் தேடிய பொருட்கள், உண்ணத் தகாத பொருட்களுடன் சேர்த்துச் சமைத்தவை, ஆசாரமற்ற

சிறுவர் சமைத்தவை, சிறுநீர்-மலத்துடன் சம்பந்தப்பட்டவை இவற்றை விலக்கிட வேண்டும்.

6. பிற தெய்வங்களுக்கென்று தீர்மானித்து வைத்தவை: சிவன் போன்ற தெய்வங்கட்கு நிவேதனம் செய்த பொருள் ப்ராணவாயுவுக்கும் - உடலுக்கும் தீங்கு விளைவிப்பவை. இது இன்னதென்று தெரியாதவை, நாவுக்குத் தாங்காத சூடு, காரம் முதலியவற்றினைக் கொண்டவை, மனத்திற்குப் பிடிக்காதவை, அகாலத்தில் பூக்கும் பூ, காய்க்கும் காய், அழுக்கான உப்பு முதலியனவும் தீயனவாம்.

7. கிளிஞ்சல் சுண்ணும்பு, நீர்க்குமிழி, நுரைகள், முதலில்விளைந்ததும் பெருமாளுக்குச் சமர்ப்பிக்காத பொருள், பலன் கொடுத்து முடித்தபின் அதே செடி காம்பில் மறுபடி தோன்றியவை, பெரியோர்கள் விலக்கியவை யாவும் நம்மாலும் விடத் தக்கவை. மோர், தவிர - சாரம் நீக்கிய பிற பொருட்கள், பகலில் விளாம்பழம், பொரியும், இரவில் - எள் கலந்த பொருட்கள், நல்லெண்ணெய், தயிர் கலந்த உணவுப் பண்டங்கள், தவத்தையும் ஜபத்தையும் கெடுக்கும் தாமஸப் பொருட்கள் இவற்றை விலக்க வேண்டும். ஏகாதசி முதலிய விரத தினங்களில் உணவு உட்கொள்ளலாகாது. அந்தி நேரத்திலும், பாதியிரவிலும் உண்ணலாகாது. சாப்பிடும்போது எச்சில் இலையில் பரிமாறிய நெய், இருமுறை பக்குவம் செய்த பொருள், இரும்பு அல்லது கையினுல் பரிமாறிய பண்டம் இவை உண்ணத்தகாதவை. பக்குவம் செய்யாத பச்சைப்

பொருளைக் கையாலே பரிமாறலாம். கடித்து வைத்த மீதிப் பொருள், ஊசிப் போன பழைய பொருள், பிறர் வீட்டில் சமைத்துக் கொண்டுவந்த அன்னம், பிறர் தமக்கென விரும்பிய உணவு, பிறரால் பழிக்கப்பட்ட உணவு, மண்ணின் மணமுள்ளவை, தீயவை, நகத்தால் கிள்ளியவை, நேரில் பரிமாறிய உப்பு, பித்தம் தரும் பொருள், காடி விருந்தினருக்குத் தனி, தனக்குத் தனியாகச் சமைத்த உணவு, பெருங்காயம் தவிர மரத்திலிருந்து பெருகும் பால் போன்றவை தவிர்க்க வேண்டியவை.

இவ்வாறு 10 பாட்டுக்களில் விலக்கத்தக்கவற்றைக் காட்டி 5 பாடல்களிலே கைக்கொள்ளக் கூடிய பொருட்களையும் குறிப்பிடுகிறார்.

**ஏற்கத்தக்கவை:**

1. தந்தை, ஆசிரியர், தமையனர் எச்சில்கள், ஸோமயாகத்தில் அந்தணர் ஸோம பாத்திரத்தில் செய்யும் எச்சில், மனைவிக்குக் கணவன் எச்சில் இவைசிறந்தவை. இவற்றில் மயிர், புழு, நூல் முதலிய விழுந்திருந்தாலும் சுத்தம்செய்து உண்ணலாம். எம்பெருமானுக்கன்றி - நமக்கென மாதுளங்காய் ஏற்கத் தகாது. விலக்கப்பட்ட பொருள் எதுவும் ஆபத்துக் காலத்திற்குச் சேர்த்துக் கொள்ளலாம். உபவாஸ தினங்களில், ஜலம், கிழங்கு, நெய், பால், யாகத்தின் ஹவிஸ், ச்ராத்தத்தில் நிமந்த்ரணம், (சாப்பிடுதல்) மருந்துகள்,குருவின் உபதேசம் இவை ஏற்கத் தக்கவையே.

2. கருப்பஞ்சாறு, தயிர், பால், நெய், பாக்கு, சங்கம், மிளகு, தேன், ஏலம், பனிநீர் இவை நல்லவை. எதுவும் குற்றம் தோன்ருத வரையில் நன்ரும். பௌர்ணமியிலும், அமாவாசையிலும் கடலில் நீராடலாம். கிரஹண காலத்தில் எந்த ஜலமும் கங்கை போன்றதாம். நதிநீர் எந்த அசுத்தப் பொருளைக் கொணர்ந்தாலும் வேகத்தாலே தூய்மையாகி- விடுகிறது.

3. நீரின்றியே தீயில் வெந்தவை, தாமாகப் பழுத்த பழங்கள், புழுங்கல்நெல், முதலியன. மா, வடாம், அப்பம், ரொட்டி, சீடை இவை பழையவையாயிலும் சுவை குறையாதிருந்தால் ஏற்கத்தக்கவை. சுவை குறைந்தவை தீயவை.

4. திரட்டுப்பால், போன்றவை, சக்ரமான தேன்குழல், முறுக்கு முதலியன, மருந்துகள், மா, வெல்லம் கோதுமையாலான திண்பண்டங்கள், இவை பழையவையாயினும் உண்ணத் தக்கன. சுத்த ஜலம், வ்யஞ்ஜனம் (ஊறுகாய்) மோர், நெய், பால், தயிர் கலந்த அன்னங்கள் பழையனவாயிலும் உண்ணக் கூடியவை.

5. தயிராலான பண்டங்கள், பூ, காய், பழச்சாறு இவை ஊசினும் சுத்தமே. உண்ணக்கூடாத ஊசியவற்றை ஆபத்துக் காலத்தில் உண்ண நேரிட்டால் நன்கு கழுவி தேன் அல்லது நெய் கூட்டி உண்ணலாம்.

**பருகத் தகாத பால்களாவன:**

ஒற்றைக் குளம்புள்ள குதிரை கழுதை முதலியவற்றின் பால், இரட்டைக் கன்றுள்ள பசுவின் பால், ஒட்டகப் பால், உப்புக்கலந்த பால், மோர் கலந்த பால், பெண்களின் பால், கருவுற்ற பசு முதலியவற்றின் பால், கன்றையிழந்த பசுவின் பால், வேறொரு கன்றைக் காட்டிக் கறந்த பால், திரிந்த பால், தேவதாந்தர சின்னம் தாங்கிய பசுவின் பால், செம்மறியாட்டின் பால், அந்தணர்களிடம் விலைக்கு வாங்கும் பால், செப்புப் பாத்திரத்தில் வைத்த பால், காய்ச்சுகையில் தீய்ந்த பால் என்பன.

பருகத் தகாத நீர்: கங்கை நீர் தவிர மறுநாள் வைத்த நீர், காலைக் கழுவிய மீதி நீர், கலங்கியது, தீயில் காய்ச்சிய இளநீர், சிறுகுழியில் தேங்கியது, வழியிலுள்ளது, தண்ணீர்ப் பந்தல் நீர், ஐயத்திற்குரியது, வண்ணான் துறை நீர், எச்சில் கலந்தது, சங்கைப் பாத்திரமாகக் கொண்டு குடிக்கும் நீர், தரையில் விழுவதற்கு முன் நேரே ஏந்திய மழை நீர் என்பன தவிர்க்க வேண்டியவை.

வெற்றிலை பற்றிய விதிகள்: வெற்றிலைக்கு முன் பாக்கைத் தின்னலாகாது. வெற்றிலையின் அடி, நுனி, நரம்பு, விலக்க வேண்டியவை. ஒரே நேரத்தில் வெற்றிலையையும், பாக்கையும் சேர்த்துப் போட்டு மெல்லக் கூடாது.

விதவைகள் (கைம்பெண்கள்) துறவிகள், பிரம்மசாரிகள், வெற்றிலையைப் பயன்படுத்தலாகாது. சுண்ணும்பு வைத்த வெற்றிலையைத் தின்னலாகாது.

ஏகாதசி போன்ற விரத நாட்களில் வெற்றிலைபாக்குச் சுவைத்தல் மிகவும் தடுக்கப்பட்டதாம். வெற்றிலை போடுகையில் நீர் அருந்தலாகாது.

விதைக்காக வைத்திருக்கும் வெற்றிலைக் கொடியையும் பயன்படுத்தலாகாது.

இன்னும் இதுபோன்ற உணவுப் பழக்க வழக்கங்களில் ஐயமேற்படின், சான்றோர்களிடம் கேட்டுத் தெளியவேண்டும். இவ்வாறு நல்ல உணவையே உட்கொள்வார்களாக என்று கூறி இப்பிரபந்தத்தை முடிக்கிறார்.

### 3.2.23 பரமபத ஸோபாநம்

விசிஷ்டாத்வைத சமயத்தில் யாவரும் அறிய வேண்டியவை- தத்வம், ஹிதம், புருஷார்த்தம் என்ற மூன்று பொருட்களே. சேதனங்கள், அசேதனங்கள் யாவற்றையும் சரீரமாகக் கொண்ட எம்பெருமான் - திருமகளின் நாயகன் - ஸ்ரீமந் நாராயணனே பரதத்வம். அவனை உகக்கச் செய்யும் பக்தி அல்லது ப்ரபத்தி என்பவையே ஹிதமாகும். இவற்றால் உகப்படையும் எம்பெருமானையடைந்து உபய வீபூதிகட்கும் தலையனை அவனுக்கு உகப்பான பணிகளைச் செய்து மகிழ்வதே புருஷார்த்தமென்றும், மோக்ஷம் எனவும்படும். இதுவே, பர்பூர்ணப் ப்ரஹ்மானுபவம் என்பது. இதனை ஸ்ரீவைகுண்டம் என்னும் பரமபதத்திலே சென்று பெறலாம் என்று சாத்திரங்கள் கூறும். அவ்விடம், ரஜஸ் எனப்படும் ப்ரக்ருதிக்கும், தமஸ் என்பதற்கும் அப்பாலுள்ளதென்றும் வேதங்கள் கூறும். அதுவே

விஷ்ணுவின் தன்னிகரற்ற பதம்-ஸ்தானம்-அதனை நித்யஸூரிகள் எப்போதும் பார்த்துக் களித்துக் கொண்டேயிருக்கின்றனர். அழிவற்ற பரமாகாசம் அதுவே. தேவர்களின் இருப்பிடமான அயோத்யையென்றும், பரப்ரஹ்மத்தின் உலகம் என்றும் வேத வாக்கியங்கள் ஓதுகின்றன. அந்த வைகுண்டம் - கதிரவன், அக்கினி அவர்களின் ஒளியைவிட மிக்க ஒளியுள்ளது; ஜ்ஞான ஆனந்த மயமானது. அதன் பெருமையையறிந்தவர்கள் ஸ்வர்க்கம் முதலிய லோகங்களை நரகத்திற்குச் சமமாக மதிப்பார்கள். அங்கு காலத்தினுல் எவ்வித வேறுபாடும் ஏற்படுவதில்லை. அதனையடைந்தவர்கள் மறுபடி ஸம்ஸார பந்தத்திற்குத் திரும்ப மாட்டார்கள் என்றெல்லாம் கூறப்பட்டுள்ளது.

எம்பெருமானின் அருளால் மயர்வற மதிநல மருளப் பெற்ற ஆழ்வார்களும் இந்நாட்டை, சேணுயர் வானம் தெளி விசும்பு மாக வைகுந்தம் நலமந்தமில்லதோர் நாடு, கலங்காப் பெரு நகரம் என்றெல்லாம் பாடினுர்கள். பிணை கொடுக்கிலும் போக வொட்டார் என்பதால் அங்குச் சென்றவர் திரும்புவதில்லையென்று பேசப்பட்டது. இக் கருத்துக்களே ஆளவந்தார், பட்டர், ஸ்ரீராமானுசனுர் முதலிய ஆசார்யர்களாலும் எடுத்துக் காட்டப்படுகின்றன.

இத்தகைய பரமபதம், இதையடையும் வழி, இதையடைய விரும்புவோருக்கு வேண்டிய குணங்கள் என்பன ஸ்ரீபாஷ்யத்தில் பரக்கப் பேசப்படுகின்றன. அதில் முதலிரண்டு அத்தியாயங்களில் பரப்ரஹ்மமே உலகில் காரணமென்பது அதனை எந்தச் சான்று கொண்டும் தடுக்க வியலாதென்பதும் நிலைநாட்டப்படுகிறது.

மூன்றாவதில் அவனையடைவதற்கான உபாயமாம் உபாஸனம் பற்றியும், நான்காவதில்-பயனான மோக்ஷம் பற்றியும் விளக்கப்படுகின்றது.

பகவத் கீதை-பக்தி யோக முறைகளை விரிவாக விளக்கி, அதில் சக்தியற்றவனுக்குப் ப்ரபத்தி மார்க்கத்தைக் காட்டித் தந்தது. பகவத் சாஸ்திரங்களோ இந்த ப்ரபத்தியின் அங்கங்களையும் அதன் பயன்களையும் விரித்துரைக்-கின்றன.

இவ்வாறு ஏராளமான சாத்திரங்களில் பரவிக் கிடக்கும் மறை பொருட்களைச் சேர்த்துத் தொகுத்து - அற்ப மதியினரான மக்களும் தெளிவு பெறுமாறு நம் வள்ளல் ஸ்ரீவேதாந்ததேசிகனார் -ஸாரமாக தம் ரஹஸ்யக்ரந்தங்களில் விளக்கியருளினார். ஸ்ரீரஹஸ்யத்ரய ஸாரத்திலே இவை யாவும் சான்றுகள், பொருத்தம் ஸம்ப்ரதாயம் முதலியவற்றுடன் விளக்கப்பட்டன. இவை தனித்தனி ரஹஸ்யங்களாக ஸார ஸாரம், அபயப்ரதான ஸாரம், ரஹஸ்ய சிகாமணி, அஞ்ஜலி வைபவம் என்பன போன்ற நூல்களிலே விளக்கப்பட்டன. இந்த பரமபத ஸோபானம் என்ற நூலிலோ ப்ரபத்தியைச் செய்தவன் இவ்வுலகிலும் பரமபதத்திலும் பெறும் பேறுகள் விளக்கமாகக் காட்டப்படுகின்றன.

இந்நூலில் கூறப்படும் ப்ரபந்நனின் பெருமைகள் ஸ்ரீபாஷ்யம் முதலிய நூல்களில் பக்தி யோகத்தில் ஈடுபட்டவனுக்கே காட்டப்பட்டு உள்ளன. ஆயினும், ப்ரஹ்ம வித்யைகளில் மேம்பட்ட ந்யாஸ வித்யை (ப்ரபத்தி)யைச் செய்பவனுக்கும் இவை பொருந்தும். இதில் கூறப்படும், கதி சிந்தனம் பக்தர்களுக்கு உபாயத்தின் அங்கமாக

விதிக்கப்பட்டது. கதி சிந்தனம் என்பது ஒரு ஜீவன் இதயத்திலிருந்து மேலே செல்லும் நாடிகளுள், மூர்த்தன்ய நாடி என்பதன் மூலம் ப்ரஹ்ம ரந்திரத்தின் வாயிலாக வெளியேறி, சூரிய மண்டலத்தைப் பிளந்து கொண்டு அர்ச்சி ராதி கதியால் ஸ்ரீவைகுண்டத்தையடையும் முறையும், வழியில் நடக்கும் சிறப்புகளும், இறுதி சரீரத்தை விடுமளவும் ஏற்படும் நிகழ்ச்சிகளுமாகும். இந்த கதி பற்றி உபநிடதங்கள் பரக்கப் பேசுகின்றன.

நம்மாழ்வாரும் சூழ் விசும்பின் முகில் என்ற பதிகத்தில் இந்நாட்டையும், இங்கு சேரும் முக்தனுக்கு நடக்கும் உபசாரங்களையும் அருளியுள்ளார். உடையவரும் (ஸ்ரீராமானுசரும்) இக்கருத்துக்களைக் தொகுத்து ஸ்ரீவைகுண்ட கத்யத்திலே அருளிச் செய்தார்.

இவ்வாறு 'கதி சிந்தனம்' பற்றி - ஆழ்வார்களும் பூர்வாசார்யர்களும் கூறியவற்றையெல்லாம் தொகுத்து அருளிச் செயல்களையே எடுத்துக் காட்டி ஸ்ரீதேசிகனால் இந்நூல் அமைக்கப்பட்டுள்ளது. பக்தனுக்கு இந்த கதி சிந்தனம் இன்றியமையாதது. ப்ரபந்நனுக்கோ அவ்வாறன்று. ஆயினும், ஸம்ஸாரத்தில் காணும் குறைகளால் மனம் வெறுப்படைந்து, தன் சிறிய உபாயமானப்ரபத்திக்காக எம்பெருமான் தனக்குத்தரும் அளவற்ற பெருமைகளையும் நினைத்து மகிழவும், உபாயத்தினல் தான் அடையப் போகும் புருஷார்த்தங்களையும் எண்ணிப் பேராநந்தம், பெறவும் இத்தகைய எல்லையில்லாப் பேரின்பத்தை உடனே பெற வேண்டுமென்ற ஆவலுடன், விரைவு பெறுவதற்குமே

இந்த - கதிசிந்தனம் ப்ரபந்நனுக்கு இந்நூலில் விளக்கப்படுகிறது.

**பரமபத ஸோபாநம்**

1. பட்டர், தன் இறுதி நாளில் இன்னும் சிறிது காலம் என்னை எம்பெருமான் இங்கு விட்டு வைத்தால், பரம பதத்திற்குச் சேர்வதற்கான படிக்கட்டையும் கட்டி வைக்கேனே? என்று அருளினாராம். இந்த பட்டரின் திருவுள்ளத்தை நிறைவேற்றவே இந்தப் பெயரில் தேசிகனார் அழகிய நூலையமைத்துள்ளார் என்று தோன்றுகிறது. முக்தி என்ற உயர்ந்த ஸ்தானத்தைக் கஷ்டமான வழிகளால் அடையவியலாத அசக்தர்கள் ஒவ்வொரு படியாக (ஸோபானம்) ஏறி அதனையடையும் முறையையும் முதல்படியில் ஏறினவனே அடுத்தபடியில் ஏறமுடியும் என்பது போன்ற கருத்துக்களை இது விளக்குகிறது. பரமபதத்தையடைவிக்கும் ஸோபானம் - படிகள் என்பது நூலின் பெயர்ப் பொருளாகும்.

   இது ஒன்பது பர்வங்களைக் கொண்டது. முதல் நான்கும் ஒரு பெட்டி போன்றது. அதனை அதிகார பேடிகை என்பர். ஐந்தாம் பருவத்தை உபாய பேடிகை என்பர். ஏனைய நான்கையும் புருஷார்த்த பேடிகை யென்றும் கூறுவர். முதல் பேடிகையில் சொன்ன குணங்களைக் கொண்டவனே உபாயத்தைச் செய்ய முடியும்.

அவ்வுபாயத்தைச் செய்தவனே இறுதிப் பேடிகையில் சொன்ன பயனைப் பெறலாம். அதாவது ஒரு ஜீவாத்மா விவேகத்தைப் பெற்று, விரக்தியடைந்து (பற்றின்மையைப் பெற்று) அஞ்சுவதஞ்சி எம்பெருமானை யுகப்பிக்க வல்ல உபாயத்தை அனுஷ்டித்து - இறுதி வேளையில் உடலைவிட்டு வெளியேறி அர்ச்சிராதி மார்க்கத்தாலே சென்று, திவ்ய தேசத்தைச் சார்ந்து, பரம புருஷனைப் பெற்று இன்புறும் முறையே இந்த ஒன்பது பர்வங்களில் விளக்கப்படுகிறது.

முதற் பருவத்தில் - விவேகம் என்பது மூன்று தத்வங்களையும் அவற்றின் ஸ்வரூபங்களையும், ஸ்வபாவங்களையும் அறிந்து, தானோ, பிறரோ தனக்கு சேஷி (யஜமானன்) அல்ல; தஞ்சமும் போக்யப் (இன்பப்) பொருளுமல்லர் என்பதை உள்ளவாறு உணர்வது.

2. இரண்டாவது நிர்வேத பருவம் : நல்லாசார்யரின் உபதேசத்தால் விவேகம் (பகுத்தறிவு) பெற்றவன் - தான் இது நாள் வரை பொருளுக்காகவும், காமத்திற்காகவும், மனம்போனவாறு செய்துவந்த ஏராளமான பாவங்களையும், அவற்றால் வரக் கூடும் நரக வேதனைகளையும் - சாத்திர வாயிலாய்க் கேட்டறிந்து, மனந் தளர்ந்து - இனி பாவம் ஏதும் செய்வதில்லை யென்று உறுதி கொள்வது, நிர்வேதம் - மனவேதனை.

3. மூன்றாவது விரக்தி பருவம்: ஐச்வர்யம், கைவல்யங்களில் குறை கண்டு அவற்றில் ஆசையைக் கைவிடுதல், அற்பப் பயனே ஸ்வர்க்கம் முதலியவை - பேரின்பமான மோக்ஷத்திற்கு இடையூறாய். தாமதத்தை யுண்டாக்கவல்லவை. சரீரத்தின் நிலை, சரீரம் படைத்தார்க்கு அதிபர்களின் பதவிகளிலும், தேவதைகள், லோக பாலகர்கள், ராவணன், கார்த்த வீர்யன் முதலானோர் இவர்களையழிக்க வல்ல உருத்ரன், அவன் தந்தை பிரஹ்மதேவன், எல்லோருடைய ஸ்தானங்களிலும் (பதவிகளிலும்) ஆபத்தும் அழிவும் உண்டாவதை உணர்ந்து அவற்றின்மீது பற்றைவிடல் முக்கியமாக இதில் கூறப்படுகிறது.

4. நான்காவதான பீதிப் பருவம்: இவ்வாறு பகுத்தறிவு, வருத்தம், வைராக்யம் பிறந்தவன் ஸ்வர்க்கத்தையும் நரகம் போலவே யிகழ்ந்து எங்குமுள்ள துயரத்தைக் கண்டுநடுங்கி மோக்ஷத்திற்கான உபாயத்தை அனுஷ்டிக்க ஊக்கமும், பரபரப்பும் உடையவனாதல்.

5. ஐந்தாவதான ப்ரஸாதன பர்வத்தில்: பக்தி, ப்ரபத்தி மார்க்கங்களில் வேறுபாடு, ஜ்ஞானம், சக்தி, ஜாதி முதலிய கட்டுப்பாட்டுத்தேவைகளுடன் நோவுக்குத் தக்கபடி விரைவில் மோக்ஷம் கிட்டுதல் என்னும் செய்தி கூறப்படுகிறது.

6. ஆறுவது உத்க்ரமண பர்வத்தில் ஜீவாத்மா தன் கடைசி சரீரத்தை விட்டுப் பிரிந்து செல்லும் முறைகாட்டப்படுகிறது. ப்ரபந்நன் புண்யஸ்தலம் உத்தராயணம் முதலியவற்றில் தான் இறக்க வேண்டுமென்ற கட்டாயமில்லை. (வே) இவன் செய்யும் புண்யங்களை நண்பர்கட்கும், பாவங்களை எதிரிகளுக்கும் பிரித்துக் கொடுத்துச் செல்கின்றான். இறுதிவேளையில் எம்பெருமானை நினைக்க வேண்டும் என்பதில்லை. அதனை எம்பெருமானே நிறைவேற்றிப் பதினொரு இந்திரியங்களையும் மனம், பிராணன் இவற்றையும் ஒன்று சேர்த்து அவற்றை ஜீவனுடன் பஞ்சபூத ஸூக்ஷ்மங்களையும் சேர்த்து இதயத்திலிருக்கும் தன்னிடம் அமர்த்தி இளைப்பாற்றுகின்றான்.

பிறகு மேல் நோக்கிச் செல்லும் ஸுஷும்நை என்கிற ப்ரஹ்ம நாடியால் - இதயத்தின் ஸூக்ஷ்மமான த்வாரம் மூலம் இவனைக் கொண்டு ப்ரஹ்மரந்த்ரம் என்ற தலைவாயிலைத் திறந்துகொண்டு புறப்பட்டு வைகுந்தம் செல்ல வழியனுப்புகிறான் என்று விளக்கப்படுகிறது.

7. ஏழாவது அர்ச்சிராதி பர்வத்தில், வெளிக் கிளம்பிய ஜீவனுக்கு வைகுண்டம் சேரும்வரையில் நடக்கும் உபசாரங்களை வர்ணிக்கிறார். அக்னி, பகல், சுக்ல பக்ஷம், உத்தராயணம், ஸம்வத்ஸரம், வாயு என்ற

தேவதைகள் இவனை எதிர்கொண்டு தம் தம் எல்லைவரை அழைத்துச் செல்வர். அதன்பின் சூர்ய மண்டலத்தின் வழியே - சந்திரனைக் கிட்டி அமானவன்(மின்னல்) துணையாக, வருணண், இந்திரன், பிரஜாபதி என்போர் அழைத்துச் செல்ல இறுதியில் எம்பெருமானின் அருகே சேர்கின்றுன். இவ்வாறு ப்ரக்ருதி மண்டலத்தைக் கடந்தவனுக்கு மறுபிறவி கிடையாது எனக் காட்டப்படுகிறது.

8. எட்டாவதான திவ்ய தேசப்ராப்தி பர்வத்தில் ஜீவன் விரஜா நதியைக் கடந்ததும், ஜ்ஞானனந்த மயமான உலகில் விசித்திரமான ஆறு, மலை, மாளிகைகளைக் காணல், 500 அப்சரஸ்ஸுக்கள் எதிர்கொண்டு இவனை ப்ரஹ்மாலங்காரம் செய்வித்ததும் தெய்வீக கந்தம், ரூபம், தேஜஸ் இவற்றைப் பெற்றவனுய் கோபுர வாயிலைக் கடந்து, திருவீதிகளில் நித்ய ஸூரிகளும் மடந்தையரும் உபசரிக்க திருமாமணி மண்டபம் சேர்ந்து அநந்த கருட விஷ்வக்ஸேனுதியரான நித்யரும், முக்தர்களும் புடைசூழ ஆதி சேஷன் மீது நாய்ச்சிமார்களுடன் வீற்றிருக்கும் பரமபதநாதனைக் கண்ணுரக் கண்டு வணங்குதல் என்று இவை விளக்கப்படும்.

9. ஒன்பதாவது ப்ராப்தி பர்வத்தில்: இத்தகைய முக்தனுன ஜீவன் எம்பெருமானுடன்

சேர்வதைக் காட்டுகின்றார். எம்பெருமானின் திருமேனியழகிலும், திருவாபரணச் சேர்த்தியிலும் ஈடுபட்டு பற்பல ஸ்தோத்ரங்களையும் பாடுகிறான். இவன் தலைமீது அவன் திருவடிகளால் பூமுடி சூட்ட, அவற்றையே பற்றி அந்த திவ்ய பர்யங்கத்தின் (கட்டிலின்) மீது இவன் ஏற, எம்பெருமான் நீ யார்? என்ற வினவைக் கேட்க இவன், தனக்கு மீளாத அடிமைப்பணி வேண்டி வந்துள்ளமையைத் தெரிவிக்கிறார். பின் எம்பெருமான் பங்கயத்தாள் இருவரின் திருவருளையும் பெற்று, பரபக்தி பரஜ்ஞானம், பரமபக்தி, யாவற்றையும் பெற்றவனாய், அவ்விருவரையும் வலம்வந்து, நிழல்போல் விடாமல் பின் தொடர்ந்தும், தாம் விரும்பிய பணிகளைச் செய்தும், பல்லாண்டு பாடியும், என்றும் எங்கும், எப்போதும், எல்லாக் கைங்கர்யங்களையும் செய்தும், நித்யஸூரிகளைப் போலவே, மீட்சியிலா நல்வாழ்ச்சியை யனுபவித்திருப்பான் என்றிவ்வாறு இந்நூல் விளக்குகிறது.

இவ்வாறு ஒவ்வோர் ரஹஸ்ய நூலும், சரணாகதி செய்து கொள்பவனுக்குரிய பல ஆழ்ந்த மறைபொருட்களை விளக்குவதை யாங்காங்கு காண்கிறோம்.

# சில்லரை ரஹஸ்யங்கள் (3)

## 3.3.1 ஸம்பிரதாய பரிசுத்தி:

நம் மதமே (மரபே) தூய்மைமிக்கது எனக் காட்டும் பிரபந்தம்.

கடலமுதத்தைக் கடைந்து சேர்ந்த
திருமாலடி காட்டிய நம்
தேசிகர் தந்நிலை பற்றிச் சேர்ந்தோமே

எல்லாவற்றையுமறிந்து எம்பெருமான் தொடங்கி இன்றுவரை வளர்ந்து வந்துள்ள நம் ஆசார்ய பரம்பரையின் நன்முறையை முரண்படாமல் நிலை நாட்டிய ஸ்ரீஸம்பிரதாய பரிசுத்தி என்ற ரஹஸ்யம்-எம்பெருமானின் திருவருள் ஒன்றையே சாதகப்பறவை போல் எதிர்பார்த்து நிற்கும் பரமைகாந்திகளால் (எம்பெருமானையே நம்பி வாழும் பக்தர்களால்) எப்போதும் சிரத்தையுடன் ஆதரிக்கத் தக்கதாகும்.

மிகுந்த ஞானமும், நம்மீது கருணையும் கொண்ட நம் ஆசார்யர்கள் நம் நல்வாழ்வு கருதினாராகத் தத்துவார்த்தங்களை உபதேசித்து நம் மனக் கலக்கத்தை நீக்கினர். எம்பெருமான் உவந்தேற்கும் ப்ரபத்தி என்னும் உபாயத்தை நாம் அனுஷ்டிக்குமாறு செய்து நம் பிறவியை ஒழித்தனன். இத்தகைய சுத்தமான சம்பிரதாயத்திலீடுபட்டு நாம் மோக்ஷாநந்தத்தைப் பெறும் பேறு பெற்றோம்.

### 3.3.2 தத்துவ பதவீ:

உயர்ந்ததும் தாழ்ந்ததுமான தத்துவங்களையறிவதால் பெறும் பரமபதம் என்னும் பதவியை இப்பகுதி விளக்குவதால் இப்பெயர் பெற்றது.

முக்திக்கருள் சூட மூன்றைத் தெளிமுன்னம்
இத்திக்கா லேற்கு மிதம்,

சேதனனின் மோக்ஷத்திற்கு நேரான காரணம் எம்பெருமானின் அருளே. அதனைப் பெற சேதனன்-அசேதனன்-ஈச்வரன் என்ற மூன்று தத்துவங்களையும் பற்றி முதலில் தெளிவாய் அறிதல் வேண்டும். இவ்வறிவாலேயே

நிகரற்ற பதவியையவன் அடைய முடியும் என்பது இப்பிரபந்தத்தின் கருத்து.

### 3.3.3 ரஹஸ்ய பதவீ:

மூன்று ரஹஸ்யங்களையுமறிபவன் அடையும் பதவியை இது விளக்கும். அநாதிகாலமாக ஸம்ஸாரத்தில் கிடந்துழலும் சேதனர்கள் உய்யும் வழியை வேதாந்த நூல்கள் தத்வம் - ஹிதம் - புருஷார்த்தம் என்று மூன்றுமாய் விளக்குகின்றன. அவற்றையே நம் ஸம்பிரதாயத்திலே கண்களாய் விளங்கும் மூன்று ரஹஸ்யங்களும் விளக்குகின்றன. அவை தாம் திருமந்திரம் (அஷ்டாக்ஷரம்) த்வயம் சரமச்லோகம் என்பன. இவற்றின் ஸாரமான பொருளையே ரஹஸ்யத்ரய ஸாரம் என்பர் பெரியோர். இதனை,

மூன்றிலொரு மூன்று, மூவிரண்டு முந்நான்கும்
தோன்றத் தொலையும் துயர்

என்ற குறளால் நம் தேசிகனுர் விளக்குகின்றார். ஒரு மூன்று சொற்கள் கொண்ட முதல் ரஹஸ்யம் - திருமந்திரமாம். இரு மூன்று சொற்கள் கொண்ட இரண்டாம் ரஹஸ்யம், துவய மாமந்திரம். முந்நான்கு சொற்களால் திகழும் மூன்றும் ரஹஸ்யம் சரமச்லோக மென்னும் கீதையின் ச்லோகமாகும். இம்மூன்று ரஹஸ்யங்களையும் நன்குணர்ந்தாருக்கு ஸம்ஸாரத் துயரம் தொலைந்து போம் என்பது மேற்கண்ட குறட்பாவின் கருத்து. இவ்வாறு மூன்று ரஹஸ்யங்கள் மூன்று தத்துவங்கள் பற்றி செய்திகளை மேலுள்ள இரண்டு ரஹஸ்ய நூல்களும் விளக்குவனவாம். இவற்றையறியும் வழியே இப்பிரபந்தத்திலுள்ளது.

### 3.3.4 தத்வ நவநீதம்:

ஸம்பிரதாய தத்துவக் கருத்துக்களால் தயிரைக் கடைந்தெடுத்த சாரமாய் வெண்ணெய் போல் காட்டலால் இப்பிரபந்தத்திற்கு இப்பெயர் ஏற்பட்டது.

உயிரு முடலு முடலாகவோங்கித்
தயிர் வெண்ணெய் தாரணியோடுண்டான் - பயிரில்
களைபோலசுரரைக் காய்ந்தான்றன் கையில்
வளைபோலெம் மாசிரியர் வாக்கு.

எம்பெருமானுக்கு சேதனமும் அசேதனமும் உடலாகும். இவற்றுள் அவன் அந்தர்யாமியாய் நிற்கிறுன். கண்ணனுய்த் தயிர் வெண்ணெய் உண்டது போல் ஊழிகாலத்தில் உலகனைத்தையும் தம் வயிற்றினுள் அடக்குகிறுன். நிலத்திலே களை நீக்குவதுபோல் பொல்லாதவர்களைக் களைந்து நல்லோரைக் காக்கிறுன்.

அவன் திருக்கையிலுள்ள வளை அல்லது சங்கம் போல நம் ஆசார்யர்களின் அருள்மொழிகள் அமைந்துள்ளன. அவை எதிர் மதத்தினரை வெல்ல வல்லமை பெற்றமையால் இவ்வாறு உவமிக்கப்படுகின்றன. (வளை-வளையல், சங்கம்)

சிறந்த சம்பிரதாயம் என்ற தயிரைக் கடைந்து வேதாந்த தேசிகனுர் வெளியெடுத்த வெண்ணெய் போன்ற தத்துவ நவநீதம் என்ற ரஹஸ்யம் வெண்ணெய்க் காகக் கூத்தாடும் கண்ணனுக்குக் களிப்பூட்டுவதாக இதில் விளக்கம் வருகிறது.

அலையற்ற வாரமுதக் கடல்......... எண்ணுதற்கே யாவரும் எழுதாக்கிளவியாம் உபநிடதங்களின் ஆழ்பொருளான எம்பெருமானுக்கு அலையற்ற அமுதக்கடல், கடல்நீரை முழுதும் பருகிய மேகம், விலையற்ற இந்திர நீலமலை, வெயிலும் நிலவும் சேர்ந்தொளிரும் பகல் முதலிய இயற்கைக்கு மாருனவற்றைக் கவிஞர் உவமானங்களாகக் கூறுவர். ஆனல், அவன் திருவடிகளைப் பற்றின பாகவதர்களக்கு உவமானமாக எதனையும் கூறவியலாது. அவர்கள் எம்பெருமானை விடப் பெருமை வாய்ந்தவர்கள் என்பதாம்.

### 3.3.5 ரஹஸ்யநவநீதம்:

மூன்று ரஹஸ்யமென்னும் தயிரை - ஆசார்யர்களை வழிபடுதலென்ற கயிறு கொண்டு கடைத்தெடுத்த வெண்ணெய் என்பது இதன் பொருள். ஒன்பது செய்திகளை விளக்கும் இப்பிரபந்தம்.

முக்தி தரும் எம்பெருமானின் பெருமையை உணர்ந்த ஆசார்யர்கள், அனைத்திலும் மேம்பட்டவையான மூன்று ரஹஸ்யங்களின் ஒன்பது அர்த்தங்களையும் நமக்கு உபதேசித்தனர். ஒவ்வோர் மந்திரத்தில் மூன்று சிறந்த பொருட்களாம்.

திருமந்திரத்திலே

1. எம்பெருமானிடம் நமது ஸ்வரூபத்தைச் சமர்ப்பித்தல்
2. எம்பெருமானிடம் நம்மைக் காக்கும் பொறுப்பைச் சமர்ப்பித்தல்
3. எம்பெருமானிடம் பலனையும் சமர்ப்பித்தல்.

இவற்றை ஸ்வரூப, பர, பல ஸமர்ப்பணம் என்று சுருங்கக் கூறுவர்.

த்வய மஹா மந்திரத்திலே,

1. ஞான ஆநந்தஸ்வரூபனாய் ஸ்யம்ப்ரகாசனாய் ஞான ஆனந்த குணகனாய் அனுஸ்வரூபனான அடியேன் ஸர்வ ஜகத்திற்கும் காரணனாய், ஸர்வத்திற்கும் சேஷி (ஸ்வாமி) யாய், ஸர்வ ரக்ஷகனும் ச்ரியப்பதிக்கு ஏழாட்காலும் அடிமை செய்பவனே என்று அனுஸந்தானம் செய்தல். இதுவே ப்ரபத்திக்கு அச்சாணியாம். இது ஸ்வரூப ஸமர்ப்பணம்.
2. புகலொன்றில்லா அடியேனை இனி வேறு கடமைகளை உபாயமாகச் செய்யவிடாமல் நீயே யடைக்கலமாய்க் காத்தருள வேண்டுமென்று வேண்டுதல் பரஸமர்ப்பணம்.
3. பல ஸமர்ப்பணமாவது அவனால் காக்கப்படும் பொருளான நமதுமுக்தியென்னும் பலனில் நமக்கு சம்பந்தமில்லை யென்றெண்ணி ஆராவன்பில்

அடியவனுக்கு சரீர இந்திரியகர்மங்களால் ஏற்படும் தகுதியின்மைகளைக் கழித்து வழுவிலாவடிமை கொண்டு வாழ்வித்தருள வேண்டுமென்று பிரார்த்தித்தல்.

**எனக்குரியனெனதுபணம்.......... இருக்கு நாளே**

நானே எனக்குஸ்வாமி (எசமான்); என்னை காக்கும் கடமை என்னுடையதே; அதன் பயனும் என்னுடையதே:என்றித்தகைய மயக்கமெல்லாம் நீங்கி இம்மூன்றையும் எம்பெருமானிடமே ஸமர்ப்பித்தோம். அவன் திருவடிகளையே உபாயங்களாகவும் பலனுகவும் பற்றினேம்; கண்ணன் பார்த்தனுக்கு உபதேசித்த ப்ரபத்தி வழியையே நமக்கும் ஏற்ற வழியாகக் கருதி அதை அனுஷ்டித்தோம். அவனருளிய அனைத்துதவிகளையும் பெற்றேம். வரவிருக்கும் அர்ச்சிராதிமார்க்கம், பகவானின் அனுபவம் முதலிய ஆனந்தங்களை நினைத்து கவலை நீங்கினேம். இனி பூமியில் வாழும் மட்டும் நித்யஸூரிகள் போலவே வாழ்வோம். **என்றிவ்வாறு ஆசார்யனை வழிபடுதலெனும் கடைகயிற்றல் ரஹஸ்யங்களாம் தயிரைக் கடைந்து எடுத்த வெண்ணெய் தத்துவ நவநீதமாம்.**

## 3.3.6 தத்துவ மாத்ருகை:

மாத்ருகை என்பது அ முதல் க்ஷ வரையுள்ள எழுத்து வரிசை. வடமொழியில் மொத்தம் 51 எழுத்துக்கள். அதே போல் இந்த அதிகாரமும், அடுத்த அதிகாரமும் 51 செய்திகளைக் கொண்டு தொகுக்கப்பட்டமையால் மாத்ருகை எனப்படுகிறது. மாத்ருகை என்பது மூலம் எனவும் பொருள்படும்.

தத்துவங்களெல்லாந் தகவாலறிவித்து
முக்தி வழிதந்தார் மொய்கழலே - அத்திவத்தில்
ஆரமுத மாறு மிருநிலத்தி லென்றுரைத்தார்
தாரமுத லோதுவித்தார் தாம்.

ஆசார்யர்கள் தத்துவங்களின் ஸ்வரூப ஸ்வபாவங்களை, உபதேசித்து மோக்ஷோபாயங்களைக் காட்டிக் கொடுத்தனர். அன்னாரின் திருவடிகளே இவ்வுலகில் உபாயமாகவும், ஸ்ரீவைகுண்டத்தில் அனுபவிக்கும் பலனுகவும் மிளிர்கின்றன வென்பதாம்.

பரதத்துவமாவது - எம்பெருமானுன ச்ரியப்பதியாம் புருஷோத்தமன். அவன் எல்லாப் பொருளுக்கும் வித்தானவன்; எப்பொருளிலும் உடல் மிசையுயிரெனக் கரந்து, அளத்தற்கரிய ஒளியாய் - உணர்வாய், ஆரமுதமாய் அமலனுய் அத்யத்புத குணங்களும் பெருமையு முடைய-வனுய் திருவுக்கும் திருவாய் மங்களமான ஸ்வரூபத்தைக் கொண்டவன். உயர்வற வுயர்நலமுடையவன் யவனவன் என்கிற படியே எல்லையில்லாப் பேரின்பம் போன்ற கல்யாண குணங்களை உடையவன். தன்னையடைந்தவர் பிறப்பை யொழிக்கக் கருதி பற்பல பிறவிகளையும் எடுப்பவன். பக்தர்கள் பிறந்து நாட்டில் படும் பாடுகளைத் தவிர்க்கவே தாம் பிறந்து பல பாடுபடுபவன். தான் சொன்னவற்றை நிறைவேற்றும் தேவர், மனிதர் ஆகியோருக்கு தான் சொல்லிய வண்ணமே செய்தருளுபவன். எதிரம்பு கோக்கும் அஸுர இனத்தவர்க்கு தானும் எதிரம்பினுல் நிலைகுலையச் செய்பவன். தன்னை அந்தராத்மா என்று எண்ணி வழிபடும் ஜ்ஞானிகளையே தமக்கு அந்தராத்மாவாக எண்ணுபவன்.

தன்னிடம் ஆத்மாவையும், ஆத்மீயங்களையும் (தன்னைச் சேர்ந்தவைகளையும்) சமர்ப்பணம் செய்வோரிடம் தன்னையும் தன் பொருட்களையும் சமர்ப்பிக்கும் பாங்கினன். இத்தகைய லக்ஷ்மீநாயகனான ஸர்வேச்வரனே பரதத்வம்.

இவன் இப்புவனத்தையும், விண்ணுலகத்தையும் (உபய விபூதிகளையும்) ஆள்பவனாய் ஒப்பாரும் மிக்காரு மற்றவனாய் மிளிர்பவன்.

இவன் நம்மைப் போல் - ப்ரக்ருதி (மாயை) ஸம்பந்தமற்ற - திவ்ய மங்கள விக்ரஹத்தை (திருமேனியை) உடையவன். பரம், வ்யூஹம், விபவம், அர்ச்சை, அந்தர்யாமி என்ற ஐந்து வகைத் தோற்றமுடையவன். இவ்வைந்து தோற்றங்களும் அகலகில்லேனிறையும் என்றபடி அவர்மேல் மங்கை உறையும் வடிவுகள். இவை நம் பாவங்களை நீக்குவனவாய் தியானிக்க எளியனவாய் அமைந்திருக்கும்.

இத்தகைய பரதத்துவமான எம்பெருமானுக்குச் சரீரமென்று சான்றுகளால் காட்டப்பெறும் அவர-(மட்டமான) தத்துவம். சேதனம் அசேதனம் என இருவகைத்து. சேதனமான அவரதத்துவம்-ஜீவ-னெனப்படுவதாய் அளவுள்ள ஸ்வரூபம் சக்தி முதலிய குணங்களையுடையதாயிருப்பது. இது தனக்குத் தானே தோன்றுவது. ஜ்ஞானத்தையும் குணங்களையுமுடையது. ஜ்ஞானத்தின் உதவி கொண்டும் - அஃதின்றியும் தனக்குத் தான் தோன்றுவது. அனுகூலத் தன்மை வாய்ந்தது. ஸூக்ஷ்மமானது. எள்ளில் எண்ணெய் போலவும், விறகினில் தீயைப் போலவும், அசேதனங்களுக்குள்

நுழைந்து நிற்பது மாறுபாடுகள் அடையாதது. முக்குணங்களும் அற்றது. ஐம்புலன்களாலும் உணரப்படாததாய், சரீர சம்பந்தமின்றித் தனித்த நிலையில் உள்ளபோது, தேவன்-மனிதன் என்பது போன்ற பாகுபாடற்றது. ஸர்வ ஆத்மாக்களுக்கும் - பொதுவாக நான்-நான் என்ற புத்தியாலும் சொல்லாலும் அனுபவிக்கத் தக்கதாகும்.

இந்த நான் என்ற பொருளே பிறர் அறியும் போதில் நீ, அவன், இவன், உவன், என்றெல்லாம் வேறுபடுத்தித் தோன்றும். இந்த ஜீவ தத்துவம் பத்தர் (கட்டுண்டவர்) பந்த மற்றவர் (முக்தர்) என இருவகைப்படும். கர்ம ஸம்பந்தமடியாக பிறவிக்கடனுள் துன்புறும் சேதனர் பத்தராவார். அவரவர் கர்மாக்களுக்கு ஏற்ப பகவானின் க்ருபை கிட்டும் காலம் வேறு படுவதால் மோக்ஷம் பெறுங்காலமும் இவர்களுக்கு முன்னும் பின்னுமாக இருக்கும். பந்தமற்றவர் - முக்தர் என்றும் நித்யர் என்றும் இரு வகையினராவர். ஆசார்யர் கருணைமிக்க உபதேசத்தாலே எம்பெருமானைக் சரணம்புக்கு கர்மங்கள் தொலையப் பெற்று, ஒழிவில் காலமெல்லாம் உடனுய்மன்னி எம்பெருமானுக்கு வழுவிலாவடிமை செய்து வாழச் சேர்ந்தவர் முக்தர்கள். நித்யர்கள் என்பார் எப்போதும் பரிபூர்ணமான பகவத் அனுபவத்தைப் பெற்ற-வராய் ஸாத்ய தேவர்களென்றும் - முடியுடை வானவரென்றும் - வைகுந்தத்து அமரரென்றும் போற்றப்படும் அனந்த கருட விஷ்வக் ஸேனுதியரான அயர்வறுமமரர்கள். இவர்கள் வீற்றிருந்து எம்பெருமானுக்கு என்றும் பணி செய்திருக்கும் வைகுந்த

மாநகரும், அது பற்றிய செய்திகளும் இந்த ரஹஸ்யத்திலே விரிவாகக் கூறப்படுகின்றன.

அடுத்து அசேதனம் என்பது ஓர் அபரதத்துவம். இது எதனையும் அறியாதது. அறிவு கொண்டு செயலில் ஈடுபடுதலும் அற்றது. ஒரு பயனையும் அனுபவிக்காதது. நான் என்று தோற்றமும் இல்லாத பொருள். இதனை சடப்பொருள் - சரீரம் என்று கூறுவர். இத்தகைய சேதனங்கள், அசேதனங்கள் இவற்றின் ஸ்வரூபம், நிலையான தன்மை (ஸ்திதி) பிரவ்ருத்திகள் (செயலாற்றல்) இவையெல்லாம் பரதத்துவமான எம்பெருமானின் வசத்திலுள்ளவை.

காரணமாயுயிராதிய னைத்துங் காக்கும். . .
. . . குறிப்புடன். . . நாம் கண்டவகை கூறினோமே

அனைத்துக்கும் காரணமாய் அந்தர்யாமியாய்க் காக்கும் எம்பெருமான், கருணை நீரைப் பொழியும் காளமேகமாய் ஒளிர்கின்றான். அவனுக்கு சரீரமான ஜீவர்கள். அவனுக்குப் போட்டி போட்டுக் கொண்டு பணிவிடை செய்யக் கூடியவர்கள். ப்ரக்ருதி, காலம், சுத்த சத்வம் (ஸ்ரீவைகுண்டம்) முதலியவற்றின் ஸ்வரூபத்தையும், ஸ்பாவத்தையும் பற்றி ஸூக்ஷ்மமாய், ஆசார்யர்கள் உபதேசித்த கருத்துக்களை இந்த ரஹஸ்ய நூலிலே வெளியிட்டோம் என்றருளுகிறார்.

பரிபூர்ணமான அமைதியென்னும் தேனை நாடும் பாகவதராம் வண்டுகள் எம்பெருமானின் திருவடித் தாமரைகளையே மொய்க்கின்றன. அவர்கள் செவிக்கு அமுதூட்டும் செய்திகளையே விண்ணப்பிக்குமாறு

அவர்கள் எனக்கு அருள்வார்களாக என்று இறுதியில் வேண்டுகிறார்.

### 3.3.7 ரஹஸ்ய மாத்ருகா:

திருமந்த்ராதிகளான மூன்று ரஹஸ்யங்களிலும் ஆழ்ந்து கிடக்கும் நுணுக்கமான பற்பல விசேஷார்த்தங்களையும் எடுத்துக்காட்டி, இறுதியில் இப்படி திருமந்த்ராதிகளில் முற்பட நிரூபிக்கப்படும் அர்த்தமே மோக்ஷ சாஸ்த்ரங்களில் - முதல் - நடு - இறுதியாக முகம் மாறிக் கோக்கின்ற வர்ண ஸரங்களுக்கெல்லாம் (பன்னிறமாலை) மாத்ருகை (மூலமானது) என்று முடிக்கிறார்.

செம்பொற் கழலிணை. . .

. . . அமுதெனவோ

பொன்னடிகளைக் கொண்ட திருமகள் உறையும் திருமார்பின்னை திருவரங்கநாதனின் அடியவர்களுக்கு அடியவராய், அன்னவர் அடிகளை முடியில் குடி நிற்கிறோம். இப்பேறு பெற்றயாம், மூன்று ரஹஸ்யங்களின் 51 சிறப்பான அர்த்தங்களை இங்கு விளக்கினோம். இவை உடலை மட்டுமின்றி உயிரையும் காக்கும் அமுதமாகும். ஜ்ஞானிகளான - ஆஸ்திகர்கள் ரஹஸ்யங்களின் பொருளைச் சுருக்கமாய்த் தினமும் அனுபவிக்க இந்த ரஹஸ்யம் பேரின்பம் விளைவிப்பதாகும் என்று முடிக்கின்றார்.

### 3.3.8 தத்வ சந்தேசம்:

சர்வஜ்ஞ சிங்கப்ப நாயகனுக்கு தேசிகன் அருளிய தத்துவங்களைப் பற்றிய செய்திகள் (சந்தேசம் - தூதுச் செய்தி) நம் தத்வங்களை நன்கறிய அவாவும் ஒரு ஆஸ்திகனுக்கு விருப்பத்தை நிறைவேற்றிட எம்பெருமானுர், ஆளவந்தார் முதலியோர்கள் குறிப்பிட்ட சொற்றொடரில் ஸ்வாதீனத்ரிவிதசேதனு சேதன ஸ்வரூப ஸ்திதி ப்ரவ்ருத்தி பேதன் என்று திருமந்திரம், ஆறெழுத்து மந்திரம், பன்னிரெண்டெழுத்து மந்திரம் இவற்றின் பொருளை விளக்கியருளினவாறு இந்த ரஹஸ்யத்தின் வாயிலாக விளக்கப்படுகிறது. இந்த தொடர் மூலம் மூவகையான சேதனன், மூவகையான அசேதனம் இவற்றின் ஸ்வரூபம், நீடித்த நிலை, செயல்கள் முதலியனயாவும், எம்பெருமான் ஒருவனுக்கே வசமானவை யென்னும் கருத்து விளக்கப்படுகிறது. மாதவன் என்பவரின் மகனை ஸர்வஜ்ஞ சிங்கப்ப நாயக்கனுக்கு இந்த ரஹஸ்யத்தில் ஸ்வாமி அருளும் உபதேசங்களாவன: ஸாத்விகர்களின் உள்ளம் உகக்குமாறு நடந்துகொள்; ப்ரஹ்மத்தை அறிந்தவர்களிடம் தவறிழைக்க அஞ்சுக; இம்மையின்பத்திலேயே ஈடுபட்டவர்களைத் துரும்பாக நினை. நித்தியனுய், ஸ்வாமியாய்ப் பிழைகளைக் கருணையால் பொறுப்பவனுய், பிராட்டியுடன் கூடி நிற்கும் எம் பெருமானிடம் உனது பொறுப்பை ஒப்படைத்துவிட்டு முகிலையே எதிர்பார்த்திருக்கும் சாதகப்பறவை போலவே, அவனருளையே எதிர்பார்த்திரு; நீ நலம் பெறலாம் என்பன.

### 3.3.9 ரஹஸ்ய சந்தேசம்:

ரஹஸ்யம் பற்றிய செய்தி ஒரு ச்லோகத்தின் விளக்கம் இது. ரஹஸ்யச் செய்தியெனப் பொருளாம். ஜீவாத்மாவான நான், என் ஜ்ஞானத்தால் (தர்ம பூதம்) பிற பொருட்களை அறிவேன். என்னையறிய வேறு ஜ்ஞானம் தேவையின்றி நானே ஜ்ஞான வடிவமாய் உள்ளேன். நான் அசேதனங்களின் வேறானவன். ஸ்ரீமந்நாராயணனுக்கு அடியவன். ஒரு பொருளிலும் எனக்கு உரிமையில்லை. ஸ்ரீவைகுண்டம் சேர்ந்து இடை விடாது எம் பெருமானுக்கு கைங்கர்யம் செய்து கொண்டேயிருக்க வேண்டுமென்று அவா மிகுதியும் பெற்று தெவிட்டா அமுதமான அவன் திருவடிகளையேயடைகின்றேன் என்று தியானித்தல். இதுவே மூன்று ரஹஸ்யங்களின் சாரமான பொருள். நம் ஆசார்யர்கள் நற்குணமும் நல்லொழுக்கமும் நிரம்பியவர்கள். அவர்கள் செய்திட்ட பிரபத்தியின் பெருமையால் எண்ணிலாத நம் பாவங்கள் தீயிலிட்ட பஞ்சு போல ஒழிந்தன. அஜ்ஞானத்தை மேன்மேலும் வளர்த்து அழியும் இவ்வினையுடல் அழிந்து பரமபதம் சென்று, நாம் எம்பெருமானுக்கு கைங்கர்யம் செய்ய, அவன் ஸங்கல்பித்த (தீர்மானித்த) காலத்தையே எதிர்பார்த்து நிற்கிறோம். இனி எவ்வகையிலும் நமக்கு மறுபிறவியில்லை.

### 3.3.10 ரஹஸ்ய ஸந்தேச விவரணம்:

ரஹஸ்யச் செய்திகள் பற்றிய விளக்கம் இது. ப்ரபத்திக்கு விஷயம் என்பது வேறு காவலின்றி, தேவியின் சம்பந்தம், கல்யாண குணங்கள், பொன்

போன்ற திருமேனி முதலியவற்றையுடைய சர்வேச்வரன் ப்ரபத்தியின் ஸ்வரூபம் என்பது எளிதில் விரைவில் செய்யத்தக்க பரஸமர்ப்பணம் - இது சிரமசாத்தியமான பிற உபாஸனங்களை விட வேறுபட்டதும் உயர்ந்ததுமாகும்.

பரிகரங்களாவன: அங்கங்கள் யமம், நியமம் முதலிய உபாஸன அங்கங்களையும், பக்தி - ப்ரபத்தி என்பன-வற்றையும் விட வேருக, அனுகூலனுயிருத்தல், பிரதிகூலனுகாமை முதலிய ஐந்து உறுப்புக்கள்.

பல (விஷய) ங்கள் என்பன: தேச கால அளவிலடங்காத பகவத் கைங்கர்யமே முடிவான - பரிபூர்ண ப்ரஹ்மானந்தானுபவம். இது ஐச்வர்யம், கைவல்யம், ஸாலோக்யம், முதலியவற்றினைவிட வேருனது. தன்னையும் சார்ந்தோரையும் பகவானிடம் பரந்யாசம் செய்வித்து, அதனுல் பகவான் இதுவரையும் இவரைச் சார்ந்தோரையும் ரக்ஷிப்பான் என்னுமாறு ஆக்குதல். இதனுல் முன் பின் பாவங்கள், போயபிழையும் புகுதருவான் நின்றனவும் தீயினில் தூசாகும் என்றவாறு கழிந்து போகின்றன. அனுதியான மாயையாலே உறங்கும் ஜீவனின் சரீரம் - ஆத்ம பரமாத்ம ஜ்ஞானமின்றி ப்ரக்ருதி சம்பந்தத்தால் தவித்து நிற்கும் இவ்வுடலாகிய சிறையை ஸ்வாமி எம்பெருமான் நீக்கியருளும் காலம் நேருகிறது.

சம்ஸாரத் துயரம் நீக்கவல்ல திருமேனியுடைய ஸ்ரீமந் நாராயணனை கெடு (வழிதவறிய) மரக்கலம் கரை சேர்ந்தால் போல், சேரக் கடவோம். இவ்வாறு, எல்லாத் தீமைகளையும் ஒழித்து இணையில்லாப் பேரின்ப வடிவான பரிபூர்ண ப்ரஹ்மானந்தத்தையடையும் ஜீவன் கூட்டரிய திருவடிக்கள் கூட்டினைநான் கண்டேன்

என்றபடி கடமைகளை நிறைவேற்றியவனுகிருன் என்பது.

"சீலங்கவர்ந்திடும், தேசிகர் தேசின் பெருமையினுல் தூலங்களன்ன துரிதங்கள் வாய்ந்தன. துஞ்சல் தரும் கோலங்கழிந்திடக் கூறிய காலம் குறித்து நின்ருேம். மேலிங்கு நாம் பிறவோம் வேலை வண்ணனை மேவுதுமே" என்ற ஸ்ரீதேசிகரின் பாசுரத்தால் விளங்குவதாகும் - ர.சந்தேசம்-

### 3.3.11 ரஹஸ்ய ரத்னுவளி:

மூன்று தத்வங்களைப் பற்றியும் 10 வாக்கியங்கள் வீதம் 30 வாக்யங்களாகிற இரத்தினங்களால் அமைந்திட்ட மாலையிது. நாராயணனே பரதெய்வம்; சேதனர்களாகிய நாம் அவனுக்கு எந்நாளும் அடியவர்கள். சேதனர், அசேதனம் ஆகிய ப்ரபஞ்சம் முழுவதும் அவனுக்குச் சரீரம் என்று வேதாந்த நூல்கள் கூறும். இப்பொருளை கருணைமிக்க ஆசார்யர்கள் உபதேசித்து நம்மை நல்வழிபடுத்தியமையால் அஜ்ஞானத்தை நீக்கவல்ல சிறப்பான ஜ்ஞானத்தை நாம் பெற்ருேம்.

இந்த ரஹஸ்யம் உருவில் சிறியதாயினும் உயர்ந்த பொருளைப் பொதித்துக் கொண்டிருப்பதால் மிகவும் பெருமையுடையதாகும். அஜ்ஞான இருளை நீக்க வல்ல இரத்தின மாலை போன்ற இந்த இரத்னுவளி யென்னும் இரத்தின மாலை நல்லோர் எண்ணத்தில் ஏற்றணியத் தக்கது ஆகும். அதில் சேதனன் பற்றி 10 வாக்கியங்கள் அசேதனன் பற்றி 10 வாக்கியங்கள், எம்பெருமானைப் பற்றி 10 வாக்கியங்கள் கூறி இவ்வளவு தெளிவு கொண்டு

நாம் ஈடேறலாம் என்று குறிப்பிடுகிறார். மனதிற்குக் கூறப்படும் நல்லுரைகளைக் கொண்ட சிறுபயனில் படியாதா என்ற பாடல் இந்த இரஹஸ்யத்தை இனிது நிறைவு பெறுத்துகிறது.

## 3.3.12 ரஹஸ்ய ரத்னாவளி ஹ்ருதயம்:

30 அழகிய சூத்திரங்களைப் போன்ற வாக்கியங்கள் மூலமாக நம் சித்தாந்தத்தின் அரும் பொருட்களையெல்லாம் விளக்கும் அரியதோர் பிரபந்தமாக இதுவும் திகழ்கிறது. இதன் இறுதியில் உள்ள 2 சுலோகங்களும் 3 பாசுரங்களும் இவ்வதிகாரத்தின் அருமை பெருமைகளை விளக்குவனவாகும்.

அவற்றின் பொருளை முதலில் காட்டுவோம்.

(சுலோகம்:1) பிற மதத்தவர் சாஸ்த்ரங்களுக்குச் சிறிது மொவ்வாமல் முரண்படும் வழிகளிலேயே கர்வம் உள்ளவராய் - தம் கொள்கைகளை நிறுவமுயன்று வெறியுடன் அதையே புகழ்வதும் - கூச்சமின்றி உறக்கக் கூவுவதுமாய் உள்ளனர். அதைக் கண்டு ஸாத்விகர்கள் - நம் சித்தாந்தத்துக்குக் கேடு வருமோ என அஞ்சலாயினர். அவர்கள் வேண்டுகோளை யேற்று எம்பெருமானுக்கு ஓர் அணிகலன் போல் உள்ளதும் போக்யமுமான இந்த ரஹஸ்யத்தின் கருத்தினை ஹ்ருதயம் என்ற பெயருடன் நானே விளக்கி நிறுவினேன்.

(சுலோகம்:2) நாம் சில நூல்களை சுருக்கியும், சிலவற்றை விரித்தும் சிலவற்றை சாதாரண புத்தியுள்ளோர்களுக்கும் புரியுமாறும், சிலவற்றை அறிஞர்கள் மட்டும் அறியுமாறும், சிலவற்றை சுதந்திர

நூலாகவும், சிலவற்றை பிறர் நூல்களுக்கு உரைகளாவும் பலவாறாக இயற்றியுள்ளோம். இந்நூல்களிலுள்ள விளக்க முறைகளைக் கண்டு மகிழ்ந்த ஆசார்யர்களின் அருளால் தோன்றியதே நம் பேச்சு. இது வேதாந்தத்தின் முடிக்கே அணிகலன் ஆகும். ஆதலால், இப்பேச்சு, அறிஞர்களால் நம்பிக்கையுடன் ஏற்கத்தக்க தாகும்.

(முதல் பாடல் கருத்து) முப்பது வாக்கியம் கொண்ட இந்த ரஹஸ்யத்தில் ஸகல வேதாந்தார்த்தங்களையும் சுருக்கிக் கூறினோம். இனி பிற மதத்தினரான பௌத்தர், ஜைனர், சார்வாகர், ஸாங்க்யர், சைவம், தார்க்கிகர், என்போரின் நூல்கள் தலை காட்ட முடியாதவாறு, இந்த ரஹஸ்யத்தை மனத்தில் உறுதியாய்க் கொள்பவர் அஜ்ஞானத்தை எளிதில் போக்கிக் கொள்வர்.

(2ஆம் பாடல் கருத்து) உயர்ந்த தாய், தன்னிடம் புதல்வன் வெறுப்புக் கொண்டாலும், அவனைப் புறக்கணிக்காது நன்மையே செய்வாள். அங்ஙனமே, நாம் எம்பெருமானை வெறுத்திட்டாலும், அவன் இயல்பாக கருணையால் நம்மைக் கைவிடாமல் நம் உள்ளத்திலே குடிபுகுந்து நம்மைக் காக்கிறான். இத்தகைய இறைவனின் இயல்பு, பெருமைகளை ஆசார்யர்கள் பால் கேட்டு உணர்ந்தவாறே வெளியிட்டோம். நம் சித்தாந்தத்திற்கு முன்போல் தீங்கு விளைவிக்கப் பார்க்கும் வாதிகள் நம் ஆசார்யர்களுடன் வாதிட வந்தால் வெள்ளத்திடையே அகப்பட்ட நரி போல கதியிழந்து தோற்றழிவார்கள். என்ற உவமை நயம் உணரத்தக்கது.

(3ஆம் பாடல் கருத்து) பாகவதர்களின் எதிரிகளை ஒழிக்க வென்றே சக்கரத்தைக் கையில் ஏந்திய

எம்பெருமான், தன் அடியார்களைக் காக்கும் பொறுப்பை ஏற்றுள்ளான். அவர்கள் பாவம் செய்யாதவாறு ஆசார்யன் உபதேசிக்கிறான். ஆதலின், அவன் தந்தை போன்றவனாவான்: அவர்களின் உபதேசமான ரஹஸ்யப் பொருட்களே சேமித்தற்குரிய அரிய செல்வம். இவ்வர்த்தங்களை ஏற்றுக்கொண்டே எண்குணங்களை யுடைய புத்தியே அவ்வடியார்களுக்கு உரிய மனைவி போன்றது. உடலையே ஆன்மாவாக எண்ணுதல், ஆன்மாவை சுதந்திரமென எண்ணுதல் முதலிய- திரிபான அறிவே தீங்கை விளைவிக்கும் பகைவர் போன்றது. அவர்கள் வசப்படுத்தும் இந்திரியங்களே அப்பகைவனை-யொழிக்கும் கருவியாகும் என்றவாறு; புத்தியின் எண்குணங்களாவன:- மனத்தில் வாங்குகை; தரிக்கை, நினைக்கை, பிறருக்குக் கூறுகை, பிறர் கூறுதலையும் அறிகை, வேண்டாதவற்றை யொதுக்குகை, தெளிந்தறிகை; உண்மைப் பொருளையறிகை என்பனவாகும்.

### 3.3.15 தத்வத்ரய சுளகம்:

சுளகம்: உள்ளங்கை; மெய்ப்பொருள் மூன்றையும் உள்ளங்கையில் வைத்துக் காட்டுவதாக இப்பிரபந்தத்திற்குப் பெயர். ஸ்ரீமந் நாராயணன் திருவடிகளையே உபாயமாகவும் பற்றுபவன், முதலில் ப்ரக்ருதியை ஆத்மாவென்று தவறாக எண்ணுதல், போன்ற கருத்துக்கள் நீங்குமாறு மூன்று தத்துவங்களையும் உள்ளவாறு உணர வேண்டும். அவையாவன, அசேதனம், ஜீவாத்மா, எம்பெருமான் என்பவையாம். அசேதனமாவது அறிவற்ற பொருள். இதன் செயல்கள்

தன்னறிவாலேற்படுவனவல்ல: அத்தகைய பயனை அனுபவிக்கும் தன்மையதுமல்ல. இதை முக்குணப் பொருளென்றும், காலமென்றும், சுத்தசத்துவமென்றும் மூன்று வகையாகக் கூறலாம்.

1. முக்குணப்பொருளையறிவது-சீவனைப் பற்றிய அறிவுக்கு சிறப்பாகும்.
2. காலத்தையறிவது-அழியும் பொருளையுணர்ந்து வெறுத்து, அழியாத பரமபதத்தை விரும்பியும், தக்க காலத்தில் தக்க கடமைகளைச் செய்யவும் பயன்படுவதாம்.
3. சுத்த சத்துவம் பற்றிய அறிவு - பலனும் உபாயமுமான எம்பெருமானின் திருவாபரணம், திருவாயுதங்கள் முதலியவற்றுடன் மிளிரும் திருமேனி, ஸ்ரீவைகுண்டம் முதலியவற்றை அறியப் பயன்படுவதாம். முக்குணம் என்பது ஸத்வம், ரஜஸ், தமஸ் என்ற குணங்களைக் கொண்ட பொருள். இது கர்மவச்யரான ஸம்சாரிகளுக்கு எம்பெருமானின் ஸ்வரூபத்தை யறியமுடியாது மறைப்பதாகும். ஸத்வம் என்பது - ப்ரகாசம், ஸுகம் முதலிவற்றிற்குக் காரணமான குணம். ரஜஸ் என்பது - ஆசை, துன்பம் முதலியவற்றிற்குக் காரணமான குணம். தமஸ் என்பது - கவனக்குறை, சோம்பல் உறக்கங்களை ஏற்படுத்தும் குணம்.

இவை மூன்றும் ஸமமாகில் மஹாப்பிரளயமேற்படும். உடலில் வாதம், பித்தம், கபங்களின் ஏற்றத்தாழ்வு போல், இவை; இக்குணங்கள் அளவில் வேறுபட்டால் மஹான்,

அஹங்காரம் முதலிய மாறுபாடுகள் தோன்றும். ஸமமான முக்குணங்களையும் கொண்ட பொருளே மூலப்ரக்ருதி எனப்படும். இந்தப் ப்ரக்ருதி, ஸமமற்ற மாறுபாட்டைப் பெற்றால், வ்யக்தம்என்னும், பெயர் பெறும். மஹான் முதல் ப்ருதிவீ வரையான 23 தத்துவங்கள் வ்யக்தம் எனப்படும். மஹான் என்பது ஆத்மாவுக்கு மனம் உறுதியான ஜ்ஞானத்தையுண்டாக்கவல்ல துணையாய் இருப்பதால் புத்தி என்றும் கூறப்படும். இதுவும் முக்குணங்களைக் கொண்டதாயிருக்கும்.

2. அஹங்காரம் என்பது உடலிலுள்ள மனமானது ஆத்மாவுக்கு அஹம் (நான்) என்ற புத்தியை ஊட்டுவதால் இப்பெயர் பெற்றது. இதுவும், முக்குணங்களைக் கொண்டது. ஸாத்விக அஹங்காரத்தை வைகாரிகம் என்றும் ராஜஸ அஹங்காரத்தை தைஜஸம் என்றும் தாமஸ அஹங்காரத்தை பூதாதி என்றும் கூறுவர். பஞ்சபூதங்களுக்குச் காரணமாக ராஜஸ அஹங்காரத்தைக் குறிப்பிடுவர். ஸாத்விக அஹங்காரத்திலிருந்தே வெளியிந்திரியங்கள் தோன்றுகின்றன. உள் இந்திரியம் என்பது மனம் ஒவ்வோர் நிலையில், புத்தி, அஹங்காரம், சித்தம் என்றெல்லாம் கூறப்படும். இம்மனம், சப்தம் போன்ற விஷயங்களில் ஈடுபட்டால் பந்தத்திற்கு (ஸம்ஸாரத்திற்கு) காரணமாகும். நல்ல விஷயங்களில் ஈடுபட்டால் மோட்சத்திற்கும் காரணமாகும். வாய், கை, கால், கண், காது முதலியவை கர்மேந்த்ரியங்கள் ஐந்து; கண், காது, முதலியவை ஜ்ஞானேந்திரியங்கள் ஐந்து ஆக இந்த்ரியங்கள் பத்து காரணமாகும்.

தாமஸ அஹங்காரத்திலிருந்து சப்த தன்மாத்திரம், அதிலிருந்து ஆகாசம், அதிலிருந்து ஸ்பர்ச தன்மாத்ரம், அதிலிருந்து வாயு இவ்வாறு தன்மாத்திரம் ஐந்தும் இடையிட்டு ஐந்து பூதங்கள் தோன்றும். தன்மாத்திரம் என்பது பால் தயிராகும்போது இடையில் ஏற்படும் மாறுபாடு போல் தோன்றும் சூக்ஷ்மமான பூதங்களின் நிலை. குணங்களின் வேறுபாடு கருதி தன் மாத்ரங்களை அவிசேஷம் (விசேஷமில்லாதவை) என்றும் பூதங்களை விசேஷங்களென்றும் கூறலாம். ஆகாசம், வாயு, அக்னி, நீர், ப்ருதிவீ, என்ற பூதங்களுக்கு முறையே 1,2,3,4,5 குணங்கள் (சப்தம், ஸ்பர்சம், ரூபம், ரசம், கந்தம், என்பன) உண்டு.

(திருச்சந்த விருத்தம்)

பூநிலாய ஐந்துமாய் புனற்கண் நின்ற நான்குமாய்த்
தீநிலாய மூன்றுமாய்ச் சிறந்த காலிரண்டுமாய்
மீநிலாய தொன்றுமாகி வேறு வேறு தன்மையாய்
நீநிலாய வண்ண நின்னை யார் நினைக்க வல்லரே

தன்மாத்ரங்கள் வேறு, குணங்கள் வேறு ஆயினும், அவற்றை குணங்களாவே உபசார வழக்காகக் கூறுவதுண்டு. இவ்வாறு மஹான் என்ற தத்துவம் முதல் ப்ருதிவி வரையான தத்வங்களைப் படைப்பது ஸமஷ்டி ஸ்ருஷ்டியென்றும் அவற்றின் ஒவ்வோர் பகுதியைக்கொண்டு படைப்பதை வ்யஷ்டி ஸ்ருஷ்டியென்றும் கூறுவது மரபு.

அண்டங்கள் - அவற்றின் மேலே மூடியிருக்கும் தத்வங்கள், அண்டங்களுக்குள் உள்ள விசித்ர நிலைகள்,

பஞ்ச பூதங்களின் கலவை வேறுபாடு (பஞ்சீகரணப்ரக்ரியை) கள். இவை புராணங்களில் விரிந்துள்ளன. சரீரம் தோன்ற ப்ரக்ருதி, மஹத், அஹங்காரங்கள் - பூதங்கள் முதற் காரணமாகும். இந்திரியங்களும் ஒவ்வோர் உடலிலும் வெவ்வேறாய் எண்ணற்று நகையிலிழைத்த வைரங்கள் போல் மிளிர்கின்றன. சரீரமென்பது சேதனனுக்கு ஆதேயமாய், கீழ்ப்படிந்தது. அடிமைத் தன்மையுடன் - விட்டுப் பிரியாமல் அவனுக்கு உதவுவது. காலம் என்பது முக்குணங்களுமற்று எதிர், நிகழ், கழிவு என்ற பேச்சுக்குக் காரணமாய், எப்போதும் எங்கும் பரந்துள்ள தொருபொருள் க்ஷணம் முதல் பரார்த்தம் வரை குறிக்கப்படுவது இது. சுழன்றுவரும் சக்கரம் போன்றது. லீலா விபூதியாம் இவ்வுலகிலுள்ளவையாவும் இக்காலத்திற்குக் கட்டுப்பட்டவை. த்ரிபாத் விபூதி யெனும் பரமபதத்திலோ ஈச்வரனின் திருவுள்ளப்படியே யாவும் நடப்பதால் காலத்திற்கு ஒரு மதிப்பும் இல்லை.

சுத்த ஸத்வம் என்பது ரஜஸ்ஸும், தமஸ்ஸும் கலவாமல் விசித்ரமானதொரு ஸத்வ குணமே சார்ந்திருக்கும் பொருள். இதனைச் சிலர் சடம் (தானே ப்ரகாசியாதது) என்றும், சிலர் தானே ப்ரகாசிப்பதென்றும் கூறுவர். முக்குணப் பொருள் ஜீவன்களுக்கு பந்தத்திற்குக் காரணமாவது போல், சுத்த ஸத்வம் மோக்ஷத்திற்குக் காரணமாய் அளவற்று பரந்திருக்கும்.

சுத்த ஸத்வமான பரமபதத்துடன் ஒப்பிட்டால், ப்ரஹ்மாவின் இருப்பிடம் முதலியன மிகவும் கீழாய்த் தோன்றும். பேரின்பம் மிகுந்திருப்பதால் பரமபதம் என்றும்,

ஆனந்த மயம் என்றும், எம்பெருமானின் ஜ்ஞானம், பலம் முதலிய ஆறு குணங்களையும் ஜீவனுக்கு விளக்க வல்லதாதலின், ஷாட்குண்ய மயம் என்றும், பஞ்சோபநிஷன் மயமென்றும், பஞ்ச சக்திமயமென்றும், நித்ய விபூதியென்றும், வழங்கப்படும். இதனையடைந்த முக்தர்கள் விரும்பியபோது, சரீராதிகளைப் பெறலாம். அவர்கள் தாய், தந்தையரையும் விரும்பினுல் பெறலாம். இவை எம்பெருமானின் திருவுள்ளம் உகக்க ஜீவன் ஏற்கும் கைங்கர்யர்கள் தாம்.

ஜீவஸ்வரூபம்: என்னுடையது. இப்பொருள் என்னும் மமகாரமும், உடலையே ஆத்மாவாக நினைக்கும் அஹங்காரமும், தன்னையே ஸ்வதந்த்ரன் எனக் கருதும் ஸ்வதந்த்ராத்ம ப்ரமமும் ஒழிய வேண்டும். தன்ஸ்வரூபம், தன்னைக் காக்கும் பொறுப்பு, அதனுல் வரும் பயன் யாவும் எம்பெருமானின் பொறுப்பேயென நினைத்து அவற்றில் தன் சம்பந்தத்தை அடியோடு அறுத்து அவற்றை எம்பெருமானிடமே ஒப்படைக்கவேண்டும். இவ்வாறின்றி வஞ்சனை செய்பவன், உய்யவேயியலாது.

ஜீவன் அணுவாய், பரமாத்மாவின் அடிமையாய் ஜ்ஞானமென்னும் ஸ்வரூபம் உள்ளவன். செயலாற்றலாலும், பயனையனுபவித்தலாலும், இவன் அசேதனத்தின் வேருனவன். ஆதேயத்வம், கீழ்ப்படிதல், அடிமைத் தன்மைகளால் எம்பெருமானின் வேருனவன். அசேதனங்கள் - மஹத் - அஹங்காரம் முதலிய வடிவில் பரிணமம் பெறுகின்றன. ஜீவன்கள் தம் தர்மபூதமான ஞானத்தின் சுருக்கம் பெருக்கங்களால் பரிணமம் (மாறுபாடுகளைப்) பெறுவர். எம்பெருமானும், நித்யர்களும்,

முக்தர்களும், தத்தம் ஸங்கல்பங்களால் வேண்டிய பரிணமங்களை சுயேச்சையாய்ப் பெறுவர். அசேதனங்களின் செயல்கள் எப்போதும் சேதனுதிகளின் புத்தியைச் சார்ந்தவை. எம்பெருமானின் செயல்கள் எப்போதும் சுயேச்சையானவை. ஆனல், ஜீவன்களின் செயல்களில் சில, தன் புத்தியாலும் சில பர புத்தியாலும் நிகழ்பவை: மூன்று விதமான அசேதனப் பொருளும் அவனுக்குச் சரீரமே ஆகும். எம்பெருமான் சரீரமே. ஜீவன் சரீரமாயும் சரீரியுமாயிருப்பான். ஜீவன், உடல், இந்த்ரியங்கள், மனம், ப்ராணன் (உயிர்), புத்தி, எல்லாவற்றையும்விட வேருனவன். தானே பிரகாசிப்பவன். அழிவற்றவன், அணு வடிவினனுதாலால், எங்கும் பிரவேசிக்க வல்லவன். ஒவ்வொரு உடலிலும் வெவ்வேருனவன். ஆனந்த வடிவினன். மோக்ஷானந்தத்திற்கு இயற்கையான தகுதியுடையவன் என்று ஆளவந்தார் இலக்கணம் வகுத்திட்டார்.

இந்த ஜீவன், பத்தன் (சம்சாரி), முக்தன் (முக்தி பெற்றவன்), நித்யன் (அனந்தன், கருடன் முதலியவர்) என மூவகைப் படுவான். பத்தர் என்பவர் - அவித்யை, கர்ம வாஸனை, ப்ரக்ருதி ஸம்பந்தங்களாலே தன் உண்மை வடிவத்தை மறந்து, சரீரத் தன்மையை ஆன்மாவில் கொண்டு, கர்ப்பம், பிறவி, இளமை, யௌவனம், விழிப்பு, உறக்கம், ஸுஷுப்தி, கனவு, மயக்கம், முதுமை, மரணம், ஸ்வர்க்கம் சேரல், நரகம் சேரல், மறுபிறவி, பிரளயம் முதலிய நிலைகளையடைந்து, மூவகைத் தாபங்களால் தவித்து, இயற்கையாகக் கிட்டும் பகவதனுபவம் முதலியவற்றையும் இழந்து நிற்பவரான

சேதனர். புலன்களுக்கு அடிமையான இவர்கள் சாஸ்த்ரங்களுக்குக் கட்டுப்பட்டு நடக்கவேண்டியவர்.

முக்தர் என்பவர் எம்பெருமானின் பரம க்ருபையால் தக்க காலம் பார்த்து, பகையற்று, ஈடுபாடு கொண்டு பக்தியென்னும் மையினால் (அஞ்ஜனம்) சாஸ்த்ரம் என்ற கண் கொண்டு தன் சேஷத்வம் எனும் நிதியைக் கண்டு கொண்டு தன் தகுதிக்கேற்ற உபாயத்தாலே எம்பெருமானை உவக்கச் செய்து அவன் ஸங்கல்பத்தால் ஸம்ஸாரத்தை அடியோடு தொலைத்து - கௌஸ்துபரத்னம் போல் மிகுந்த ஒளி கொண்டு அவன் இதயத்தைக் கவர்பவனாய் நித்யஸூரிகளுடன் சேர்ந்து பெரும் இன்பமான கைங்கர்யத்தை ஸ்ரீவைகுண்டத்தில் பெறலாம்.

அழுக்கடைந்த ரத்தினத்தைக் கழுவினால் இயற்கையொளி மிளிர்வது போலவும், புதிதாய் வெட்டப்படும் கிணற்றில் முன் உள்ளிருந்த நீரே வெளித் தோன்றுவது போலவும், இவ்வாத்மாவின் சுருங்கி இருந்த ஜ்ஞானம், கெட்ட குணங்கள் நீங்கியதும் தாமே வெளிப்படுகின்றன. புதிதாய் உண்டாவதில்லை. நித்யர் - என்பவர் - எக்காலத்திலும் எம்பெருமானுக்கு உகவாதவைகளைச் செய்யாமையால் ஞானச் சுருக்கம் இன்றியே அவரை எப்போதும் கண்டு கொண்டு மிகத் தொன்மைப் பரம்பொருளான ஸ்ரீமன் நாராயணனை வானிளவரசனாய்ப் பெற்றும் வழுவிலா வடிமை செய்தும், வாழ்கிற சுத்த ஸத்துவமான சரீரத்தை உடையவருமான அனந்த கருட விஷ்வக்ஸேனாதியர்: இவர்களின் அதிகாரங்கள், எம்பெருமானின் நித்யமான இச்சையால் தொன்று தொட்டு வரையறுக்கப்பட்டவை. முக்தர்கட்கும்,

நித்தியர்கட்கும், எம்பெருமானுக்கும் செயல்கள் வேறுபட்டாலும், சேதன அசேதனங்களைச் சரீரமாகக் கொண்ட எம்பெருமானே - போக்யன் (அனுபவிக்கத் தக்கவன்) ஆதலால், ஆனந்தானுபவம் என்பது இவ்விருவருக்கும் சமமே. இதனையே,

பல்வினை வன்கயிற்ருல் பந்தமுற் றுழல்கின்றவரும்
நல்வினை மூட்டிய நாரணஞர் பதம் பெற்றவரும்
தொல்வினை யென்று மில்லாச் சோதி வானவரும் சுருதி
செல்வினை யோர்ந்தவர் சீவரென்ருேதச் சிறந்தனமே.

என்றருளினுர்:

எம்பெருமான் (இறைவன்) வேதங்களால் போற்றப்படும் திருவடிகளையுடைய எம்பெருமான் எல்லோரினும் உயர்ந்தவன், யாவற்றிற்கும் காரணமானவன். ஆயினும், காரியங்களில் உள்ள குற்றங்கள் அவனிடம் ஒட்டா. நம் வளரும் கர்மங்களை ஒழிக்க அவன் திருவடிகளில் சரணுகதியைச் செய்துவிட்டால் செயற்கரிய பக்தியின் இடத்தை அவனேயேற்று மோட்சத்தைத் தருகின்ருன்.

இவன் சூக்ஷ்மமான சேதனு சேதனங்களோடு கூடிய தன்மையால், உலகிற்கு ஸமவாயி (குடத்திற்கு மண்போல) காரணம், தன் ஸங்கல்பத்தாலே நிமித்த காரணம்; மஹாந் முதலிய ஸமவாயி காரணங்களுக்கும், ஹிரண்ய கர்ப்பம் போன்ற நிமித்த காரணங்களுக்கும் இவனே அந்தராத்மாவாக நின்று அவற்ருல் செய்யப்படும் கார்யப் பொருட்களுக்கு ஸமவாயி காரணமாகவும், நிமித்த காரணமுமாய் நிற்பான். அந்தர்யாமியாய் நின்று,

ஸஹகாரியாகவும் நிற்பான். ஆதலின், மூவகைக் காரணமும் அவனேயென்பது வேதங்களின் கருத்து. ஸமவாயி என்பதை உபாதான காரணமென்பர் வேதாந்திகள்.

**எம்பெருமானின் இலக்கணம்:**

இவன் எங்கும், பரந்து நிற்கும் சேதனன்; பிறருக்கு அடிமையாகாதவன்; தனக்கென ஓர் ஆதாரமும் வேண்டாதவன்; உலகின் முழு முதற் காரணமானவன்; மோட்சம் அளிப்பவன்; அனைத்திற்கும் ஆதாரமானவன்; அனைத்தையும் இயக்குபவன்; அனைத்திற்கும் தலைவன்; அனைத்தையும் உடலாகக் கொண்டவன்; அனைத்துச் சொற்களுக்கும் பொருளானவன்; அனைத்து வேதாந்தங்களாலும் விளக்கப்படும் பரம்பொருள்; அனைத்துலகிற்கும் அடைக்கலமானவன்; மோக்ஷம் விரும்புவோர் அனைவராலும் உபாஸனை செய்யப்படுபவன்; அனைத்துப் பயன்களையும் நல்குபவன்; எங்கும் பரவிய ஜ்ஞான ஆனந்த வடிவானவன்; திருமகள் துணைவன்; என்பன. எம்பெருமானை விளக்கும் இலக்கணங்களாகும். அவன் ஸ்வரூபத்தை அறிய - அவசியம் தெரிந்து கொள்ள வேண்டிய தன்மைகள் - ஸத்யத்வம், ஜ்ஞானத்வம், அனந்தத்வம், ஆனந்தத்வம், அமலத்வம் முதலியவை, ஜ்ஞானம், பலம், இவற்றின் உட்பிரிவுகளான ஸௌசீல்யம் (நற்குணம்) முதலியனவும், அவன் ஸ்வரூபத்தை அறிந்தபின், அவனைச் சிறப்பிக்கும் தன்மைகள் எனப்படும். இவன் செயல்கள் அனைத்துலகையும்

படைத்தல், காத்தல், அழித்தல், உட்புகுந்து நியமித்தல் (கட்டளையிடுதல்) தண்டித்தல், அருளல் என்பன. தன் ஞானத்தாலும், சக்தி முதலியவற்றாலும் எல்லாவற்றின் அந்தர்யாமியாயிருப்பதுடன், 24 தத்துவங்களையும் தன் திருமேனியில் திருவாபரணமாயும், திருவாயுதங்களாயும் கொண்டு 5 உருவங்களுடன் மிளிர்வான்.

## 3.4 ஐந்து (உருவங்களாவன) வ்யூஹ ரூபங்கள்

1. பரம் என்பது - முக்தரும், நித்யரும் ஸேவிக்கக்கூடிய நித்யமான திருமேனி (திவ்ய மங்கள விக்ரஹம்) சாந்தோதிதம், நித்யோதிதம் என இரு வகைப்படும். நித்யோதிதம் என்பது நித்தியரும், முக்தரும் அனுபவிக்குமாறு, ஸ்ரீவைகுண்டத்திலே நிற்கும் பரவாஸுதேவன் நிலை (அல்லது) நித்ய விபூதி, லீலாவிபூதி இரண்டையும் எம்பெருமான் தான் அனுபவிக்கும் நிலை (அல்லது) நித்ய விபூதியை மட்டும் தான் நடத்தவல்ல ஸங்கல்பத்தோடு நிற்கும் நிலை என்பர். சாந்தோதிதம் என்பது பரவாஸுதேவனிடம் தோன்றி - ஸங்கர்ஷணன், ப்ரத்யும்னன் அநிருத்தன் எனும் மூன்று வ்யூஹ வடிவங்களுக்கும், காரணமாய் வ்யூஹ வாஸுதேவன் என்ற திருநாமத்துடன் நிற்கும் நிலையென்றும் (அல்லது) இரண்டு விபூதிகளையும் விட்டு தன் ஸ்வரூபத்தை மட்டும் அவன் அனுபவிக்கும் நிலையென்றும், (அல்லது) லீலா விபூதியை மட்டும் நடத்தும் ஸங்கல்பத்துடன் கூடிய நிலையென்றும் மூன்று வகையில் விளக்குவது உண்டு.

2. வ்யூஹம்: என்பது பரவாஸுதேவன் திருவுருவத்திலிருந்து தோன்றிய 4 உருவங்கள். அவை -

வாஸுதேவன், ஸங்கர்ஷணன், ப்ரத்யும்னன், அநிருத்தன் என்பன. யுகங்கள் மாற மாற இவர்களின் நிறமும் மாறும்.

| | க்ருதயுகம் | த்ரேதாயுகம் | த்வாபரயுகம் | கலியுகம் |
|---|---|---|---|---|
| 1. வாஸுதேவன் | வெண்மை | செம்மை | மஞ்சள் | கருப்பு |
| 2. ஸங்கர்ஷணன் | செம்மை | மஞ்சள் | கருப்பு | வெண்மை |
| 3. ப்ரத்யும்னன் | மஞ்சள் | கருப்பு | வெண்மை | செம்மை |
| 4. அநிருத்தன் | கருப்பு | வெண்மை | செம்மை | மஞ்சள் |

இந்த வ்யூஹங்கள் வாஸுதேவனிடம் தோன்றுவதால் மூன்றேயென்றும் கொள்வாருண்டு. வாஸுதேவன், ஜ்ஞானம், சக்தி, பலம், ஐச்வர்யம், வீர்யம், தேஜஸ் என 6 குணங்களையும் கொண்டவன். பரவாஸுதேவனுக்கும் இவை பொதுவானதால் வேறுபாடு இன்றியே கொள்வர். மற்ற மூன்று வ்யூஹங்களும் ஆறில் இரண்டு குணங்களையே வெளிப்படுத்துவனவாம்.

செயல்கள்:

ஸங்கர்ஷணன் - உலகையழித்தலுடன் - சாஸ்திரங்களை வெளியிடுபவர்
ப்ரத்யும்னன் - உலகைப் படைத்து, தர்மங்களை நடத்துபவர்
அநிருத்தன் - உலகைக் காத்து, தத்துவ ஜ்ஞானத்தை யுண்டாக்குபவர்

**விசாகயூபம்**

ஸ்ரீவைகுண்டத்தில் விசாகயூபம் எனும் ஒரு தூண் உண்டு. அது ஜ்ஞான வடிவானது. அதில் கீழும் மேலுமாக நான்கு இடங்களுண்டு. அவற்றில் கோரை முளைத்தாற் போல நான்கு திசைகளிலும் நான்கு கிளைகளுள்ளன. எம்பெருமானே அந்தக் கிளை வடிவினன். அவற்றில் கிழக்கே வாஸுதேவன், தெற்கில் ஸங்கர்ஷணன், மேற்கில் ப்ரத்யும்னன், வடக்கே அநிருத்தன் என்ற நிலையில்

எம்பெருமான் எழுந்தருளியுள்ளார். அடிப் பாகத்திலுள்ள நான்கு மூர்த்திகளும், வெளியிந்த்ரியங்களின் செயல்களுடன், கண் விழித்தவை போலுள்ளன. அடுத்து மேலே இரண்டாவது அடுக்கிலுள்ள மூர்த்திகள், மனத்தின் செயலுடன் மட்டும் ஸ்வப்ன நிலையில் உள்ளன. மூன்றும் அடுக்கின் மூர்த்திகள் செயலற்று உறங்கும் நிலையிலுள்ளன. நான்காம் அடுக்கின் மூர்த்திகள் மூச்சும் விடுதலன்றி மயக்க நிலையிலிருக்கின்றன. இம்மூர்த்திகளை உபாஸிக்கும் முறை ஸ்ரீபாஞ்சராத்ர சாஸ்திரத்தில் விளக்கப்படுகின்றது. உபாஸகன் தன் இதயத்திற்குள் மேற்கூறிய விசாகயூபத்தையும் அதன் நான்கு இடங்களையும் அவற்றின் நாற்புறம் கோரை போன்ற நான்கு கிளைகளையும் அவற்றில் நான்கு மூர்த்திகளையும் அந்தந்த மூர்த்திக்குரிய விழித்தல், கனவு, உறக்கம், மயக்கம் என்ற நிலைகளில் இருந்தே தியானிக்க வேண்டும்.

மேற்கூறிய 4 வ்யூஹங்களிலிருந்தும், மும்மூன்று உருவங்கள் தோன்றும். வாசுதேவனிடம் - கேசவன், நாராயணன், மாதவன் என்று 3 உருவங்களும் ஸங்கர்ஷணனிடம் - கோவிந்தன், விஷ்ணு, மதுஸூதனன் என்று 3 உருவங்களும் ப்ரத்யும்னனிடம் - த்ரிவிக்ரமன், வாமனன், ஸ்ரீதரன் என்று 3 உருவங்களும் அநிருத்தனிடம் - ஹ்ருஷீகேசன், பத்மநாபன், தாமோதரன் என்று 3 உருவங்களும் தோன்றுகின்றன. இப்பன்னிரண்டு திருவுருவங்கட்கும் தொழில், பன்னிரண்டு மாதங்களில் தோன்றும் 12 சூர்யர்களுக்குள் புகுந்து, அவர்களின் செயலைச் செம்மைப்படுத்தலாம்.

பன்னிரண்டு திருமண் காப்புக்களுக்கும் இவர் திருநாமமே முக்கியத்துவம் வாய்ந்த மந்திரமாகும். இவர்கட்கு ஆயுதம், நிறம், இருப்பிடம், திசை யாவும் வெவ்வேறானவை.

3. விபவம்: மேற்கூறிய வ்யூஹ ரூபங்களிலிருந்து 36 (அல்லது) 38 - பத்மநாபன் முதலிய உருவங்கள் தோன்றுகின்றனவாம். அவையாவன:- (மத்ஸ்யம்-கூர்மம் முதலிய அவதாரங்கள் 10உம் இதிலடங்கும்) பாஞ்சராத்ர ஸம்ஹிதைப்படி: 1. பத்மநாபன், 2. ஸநத்குமாரன், 3. த்ருவன், 4. அநந்தன், 5. சக்த்யாத்மா, 6. மதுஸூதநன், 7. கபிலன், 8. விச்வரூபன், 9. விஹங்கமன், 10. க்ரோடாத்மா, 11. படாவக்த்ரன் 12. தர்மன், 13. ஹயக்ரீவன், 14. ஹம்ஸன், 15. மத்ஸ்யம், 16. கூர்மம், 17. அம்ருதாஹரணன், 18. வராஹன், 19. ந்ருஸிம்ஹன், 20. ராஹூஜித் 21. காலநேமிக்னன் 22. பாரிஜாதஹரன் 23. தத்தாத்ரேயன் 24. வடபத்ரசாயீ 25. வாமனன் 26. த்ரிவிக்ரமன் 27. நரநாராயணர் 28. ஹரி 29. நாரதர் 30. ப்ருது 31. வ்ருஷபன் 32. தன்வந்தரி 33. வ்யாஸன் 34. பாதாளசயனன் 35. பரசுராமன் 36. ராமன் 37. பலராமன் 38. க்ருஷ்ணன் 39. கல்கி என்பனவாம்.

உலகுக்குப் பற்பல நன்மைகளை அருளியமையால் இவற்றுள் பத்தை மட்டுமே தசாவதாரங்கள் என்று மிகவும் போற்றுகின்றோம். இந்த விபவாவதாரங்களில் ஒன்றே மற்றொன்றாய் மாறுவதுமுண்டு. வாமனனே த்ரிவிக்ரமனாய் மாவலியிடம் தானம் வாங்கியதும் மாறவில்லையோ? கபிலர், பரசுராமர் முதலியவை எம்பெருமானின் நேரான அவதாரங்களில்லை. அவர்கள் ஜீவர்களே. பெரும் புண்ணியத்தால் மிக்க புகழைப் பெற்றவர்களே, அவர்கள்.

அவர்களுடலில் எம்பெருமான் புகுந்து சில சிறப்பான செயல்களைச் செய்திட்டான். அதனால், அவர்கள் பெருமை பெற்றனர். பரமை காந்திகளெனும், பெரும் பக்தர்கள் - இவ்வடிவங்களை வழிபடுவதில்லை. இத்தகைய உருவத்திலிருந்தும் பல எண்ணற்ற அவதாரங்கள் தோன்றலாம் என சாத்திரங்கள் கூறும்.

4. அந்தர்யாமீ என்பது எம்பெருமான் ஒவ்வோர் ஜீவனின் இதயத்திற்குள்ளும் நுட்பமான வடிவத்துடன் அமர்வதேயாகும். யோகிகள் இவ்வடிவைத் தவவலிமையினால் காணத் தக்கவர்.

5. அர்ச்சாரூபம். ஞானம் குறைந்து ஊனக்கண்ணுடையாரும் கண்டுகளிக்கும்படி திருகோயில்களில் மந்திரங்களின் துணையுடன் அமைக்கப்படும் திருவுருவங்கள், அர்ச்சாருபம் எனப்படும்.

முற்கூறிய 4 வடிவங்களைவிட எந்தப் பெருமையும் குன்றாமல், இறைவன் இவ்வுருவங்களில் காட்சியும் பயனும் நல்குகிறான்.

ஐவகைத் தலங்கள்

அர்ச்சையுருவங் கொண்ட கோயில்களை ஸ்வயம் வ்யக்தம் - தான் தோன்றி; ஸைத்தம்: (சித்தர்களால் அமைக்கப்பட்டது;) ஆர்ஷம் - (ரிஷிகளால் நிறுவப்பட்டது.) திவ்யம்-(தேவர்களால் அமைக்கப்பட்டது;) மானுஷம் - (மனிதரால் அமைக்கப்பட்ட)தென 5 வகையாகக் கூறுவர். பரம், வ்யூஹம் என்பவை நமக்கு எட்டாத ஸ்ரீவைகுண்டத்திலுள்ளவை. விபவரூபமோ நம் காலத்திலில்லாமையால் நாம் காணமுடியாதவை.

அந்தர்யாமி ரூபம் யோகிகளால் மட்டுமே அனுபவிக்கத் தக்கது. இந்தத் தடையேதும் இன்றி யாவரும் ஊனக்கண்ணாலேயே ஸேவித்து மகிழ்வதற்குரிய பெருமை அர்ச்சாவதாரங்கட்கே சிறப்பான அம்சமாகும். இம்மூர்த்தியிடம் ஞானம், பலம் முதலிய ஆறு குணங்களும் மிகப் பிரகாசிப்பதாகச் சாத்திரங்கள் கூறுகின்றன. நவீன விஞ்ஞானிகளும், மந்திரங்களால் தூய்மை பெற்றுள்ள ஆலயங்களினருகே மிகுந்ததோர் சக்தி புலப்படுவதாகக் கண்டெழுதி வருகின்றனர். நாம் எளிதில் வழிபாடு செய்யத் தக்கது அர்ச்சை வடிவமே. இவ்வெம்பெருமான் நம் பிழைகளையெல்லாம் பொறுத்து, வழிபடுவோர்க்கு வசமாகிவிடுபவன் என்றும் சான்றோர் கூறுவர். சாத்திரப்படி அமைக்கப்படும் இத்திருமேனியிலேயே எம்பெருமானுக்கு உகப்பு மிகுதியாம். இவ்வடிவத்திற்கேற்பத் தன் ஸ்வரூபத்தையமைத்துக் கொள்கிறான். சுத்த ஸத்துவ மயமாய் உள்ளே புகுந்திருக்கின்றான். எப்போதும் தங்கியிருக்கிறான் என்பது போன்ற காரணங்களாலேயே ஆழ்வார்களும் ஆசார்யர்களும் இவ்வர்ச்சாவதாரத்திலேயே மிகமிக ஈடுபட்டு சரணாகதி செய்து உய்ந்தனர்.

## பிராட்டியைப் பிரியாமை தத்துவம்

மேற்கூறிய ஐந்து நிலைகளிலும் எம்பெருமான் பெரிய பிராட்டியை (திருமகளை) எப்போதும் பிரியாது கூடியே நிற்பான். அவனைச் சரணடைந்தோரைக் காப்பதற்கு அவள் என்றும் துணையாய் நிற்பாள். அவனது

திருவுள்ளத்திற்கும், திருமேனிகட்கும் ஏற்றவாறு வடிவுகொண்டு அவனுடனேயே தங்குவாள்.

எம்பெருமானின் திருமேனி பாபத்தை நீக்கி, தியானிப்பதற்கு எளிதாயும் இருப்பது பற்றி சுபாச்ரயம் என்றவாறு குறிக்கப்படும். சுபமாயும் ஆச்ரயமாயும் இருப்பது எனக் காரணப் பெயர் இது. அவன் திருமேனியை வைணவர்கள் திவ்ய மங்கள விக்ரஹம் என்றும், அவன் ஸ்வரூபத்தை திவ்யாத்ம ஸ்வரூபம் என்றும் கூறுவர்.

பிற தெய்வங்கள்

பிரமன் உலகைப் படைப்பவன், சிவன் அழிப்பவன். இவ்வாறே இந்திராதி தேவர்களும் சிலசில செயல்களைப் புரிகின்றனர். இவர்கள் யாரும் தம் செயல்களைச் சுதந்திரமாய்ச் செய்ய வல்லவர் அல்லர். இவர்களினுட் புகுந்து எம்பெருமானே செயலாற்றுகிறான். புண்ணிய வசத்தால் அந்தந்த ஸ்தானத்தை வகிப்பர் இவர்கள். கர்மங்களுக்கு இவர்கள் வசப்பட்டவர். மோட்சத்தை விரும்பும் ஜ்ஞானிகள் பிற தேவர்களை வழிபடலாகாதென்று மஹாபாரதம், பௌஷ்கர ஸம்ஹிதை முதலிய ப்ரமாண நூல்கள் சாற்றுகின்றன.

கர்மங்களும் எம்பெருமானும்

மோக்ஷத்தையடையச் சாதனமான வித்யைகள் - பக்தி மார்க்கங்கள் 32. அவற்றுள் ப்ரதர்த்தன வித்யையும் ஒன்று. இதில் தன்னை வந்தடைந்த ப்ரதர்த்தனன் - என்பவனுக்கு இந்திரன் இவ்வித்யையை உபதேசிக்கிறான். இதில் என்னைச் சரீரமாகவுடைய பரமாத்மாவை நீ உபாஸனம் செய் என்கிறான். நாம் அன்றாடம் செய்யும்

பற்பல கர்மங்களிலும், இந்திரன், அக்னி, சூர்யன், சந்திரன், வருணன் போன்றோரை வழிபடுகிறோமே. இவையெல்லாம் பிற தெய்வங்களைத் தொழுவதாகாதா? என்று ஐயமேற்படலாம். உண்மையப்படியன்று. இந்த எல்லாக் கர்மாக்களாலும் உபாஸிக்கப்படுபவன் சாக்ஷாத் ஸ்ரீமந் நாராயணனே அன்றி பிற தேவர்கள் அல்லர்; அவர்கள் முக்கியத்துவமின்றி அவனுக்குச் சரீரமாகக் கொண்ட எம்பெருமானை உபாஸிப்பது போலவே இந்திராதிகளை சரீரமாகக் கொண்ட எம்பெருமானையே உபாஸிக்குமாறு விதிக்கப்படுகிறது. சட்டைக்கு மதிப்பில்லை. சட்டை யணிந்தவனுக்கே மதிப்பு என்பது போலவேயிஃதும். ஆதலின், ஸர்வத்துக்கும் அந்தர்யாமியான எம்பெருமானே இந்தக் கர்மாக்களால் மகிழ்ந்து, வேண்டிய பயன்களையருளுகிறான்; பிற தெய்வங்களின் பெயரே கலவாமல் எம்பெருமானையே உபாஸிப்பவர்கள் சுத்தயாஜிகள் என்பவர். இவர் ச்வேத த்வீபத்தில் வாழ்பவராம். நாமனைவரும் பிற தெய்வங்களின் பெயர்களை வெறுக்காமல் கூறி எம்பெருமானை உபாஸிப்பதால் மிச்ரயாஜிகள் என்றழைக்கப்படுவோம். இரு சாராருக்கும் எம்பெருமானே ஆராதிக்கப்படும் பரம்பொருள்.

அவதாரங்கள்

எம்பெருமான் - இராமன் - கிருஷ்ணன் போன்ற அவதாரம் எடுக்கையில் கர்மவசமானவர் போலவே சுகத்தையும் அனுபவிப்பது - அஸுரத் தன்மை வாய்ந்த பொல்லாத மக்களை மயக்குவதற்காகவும். அவர்களை

நரகில் வீழ்த்தவும் அவனது வெறும் அபிநயமேயாகும். நம்மைப் போல் கர்மவச்யனாக அவன் நடிக்காவிடில் பொல்லாதவர்கள் இவனிடம் அபசாரப் படாமல் (தவறிழைக்காமல்) தப்பிப் பிழைத்து விடக்கூடும். அந்தக் களைகளைக் களைந்தாலே நல்லோரெனும் பயிரை வாழ்விக்க முடியும் என்பது அவன் திருவுள்ளம்.

படைப்பு (ச்ருஷ்டி) இரு விதமாகும்; சுத்த ச்ருஷ்டி என்பது ஸத்வ குணம் மட்டும் உள்ள பொருளாலே படைப்பது. அசுத்த ச்ருஷ்டி என்பது மூன்று குணங்களையும் கொண்ட பொருட்களால் படைப்பது. எம்பெருமானின் அவதாரங்கள் சுத்த ச்ருஷ்டி எனப்படுபவை. மற்ற படைப்புகள் அசுத்த ச்ருஷ்டிகள் எனப்படும்.

எம்பெருமானின் அவதாரங்களைப் பற்றிய ரஹஸ்யங்கள் **6. தத்துவம்.**

1. அவதாரங்கள் இந்திர ஜாலங்கள் போலன்றி உண்மையானவை.
2. அவதார நிலையிலும் தனக்குரிய தன்மைகளை விட்டுப் பிரிவதில்லை.
3. அவதார நிலையிலும் அவன் திருமேனி ரஜஸ்ஸும் தமஸ்ஸும் கலவாமல் சுத்த ஸத்வமயமாயிருப்பது.
4. அவதாரத்திற்குக் கர்மம் காரணமல்ல; அவன் சங்கல்பமே காரணம்.
5. பூமியில் தர்மம் வாடி, அதர்மம் தலைதூக்குகையில் தர்மத்தைக் காக்க அவதரித்தல்.

6. துஷ்டர்களையழித்து சாதுக்களைக் காப்பதே அவதார நோக்கம்.

இந்த ரஹஸ்யங்களை அறிதல், விரைவில் ஒருபாயத்தைச் செய்து மறு பிறவியன்றி மோட்சம் பெறக் காரணமாகும்.

நித்தியமான பல பொருட்களும்- நித்தியமாய் அவ்வப்போது தோன்றும் பகவானின் ஸங்கல்பங்களுமே படைப்பின் காரணங்கள். எம்பெருமானே முக்கிய காரணம். பொருட்களும், ஸங்கல்பங்களும் முக்கியமற்ற காரணங்கள். அவை அவன் வசமானவை.

எம்பெருமானின் எட்டு நிலைகள் (தத்துவம்)

1. கர்த்தா-பொருட்களின் உட்புகுந்து படைப்பு முதலியவற்றைச் செய்பவன்.
2. ப்ரேரகன்-ஜீவனுக்கு அறிவு தந்து செயல் செய்ய ஏவுபவன்.
3. அனுமந்தா-ஜீவன் செய்யும் செயலை அனுமதிப்பவன்.
4. ஸஹகாரீ-ஜீவனின் செயலில் பெருமளவு துணை புரிபவன்.
5. ஸாக்ஷீ -ஜீவனின் செயலைப் பார்த்துக் கொண்டிருப்பவன்.
6. பலப்ரதன் - ஜீவனின் செயல்களுக்குப் பலன் தருபவன்.
7. பலீ - ஜீவனது செயலின் பயனை முக்கியமாப் பெறுபவன்.
8. உதாஸீனன் - ஜீவனின் செயலில் சிறந்த தொடர்பு கொள்ளாமல் பொதுக் காரணமாய் இருப்பவன்.

ஒவ்வோர் செயலுக்கு மேற்றவாறு, எம்பெருமானின் மேற்படி நிலைகள் அமையக் காணலாம்.

**அறியத் தக்க முக்கிய அம்சங்கள்:**

1. அனைத்தையும் சரீரமாய்க் கொண்டு ச்ரியப்பதியாய் நிற்கும் ஸ்ரீமந் நாராயணனே பரதத்துவம்.
2. அவனுக்கும், நமக்கும் இடையேயுள்ள பல்வகை சம்பந்தங்களுள் - எம்பெருமான் நம் ஆத்மா - நாம் அவனுக்கு சரீரம் என்ற சம்பந்தம் சிறந்தது.
3. மோட்சத்தையடைய அவனே உபாயம். அவனேயடைய வேண்டும் பலன் என்ற உண்மை.
4. அவனே உபாயமும் உபேயமும் (பலமும்) என்ற கருத்தைத் தரும் நாராயணன் எனும் திருநாமமே மிகச் சிறந்தது.
5. அவனை வேண்டி நம்மைக் காக்கும் பொறுப்பை அவனிடமே ஒப்படைத்தல் என்னும் ப்ரபத்தியே (சரணாகதியே) மோட்சத்திற்குச் சிறந்த உபாயம்.
6. அவன் திருவுள்ளம் உகக்கும் கைங்கர்யங்களைச் செய்வதே சிறந்த பலன்.
7. சேதனன் - தத்துவம், உபாயம், புருஷார்த்தம் இவற்றைத் தெளிந்து உறுதியும் விரைவும் கொண்டு ப்ரபத்தியைச் செய்ய, நல்லாசிரியன் அவனுக்குத் திருமந்திரம், த்வயம், சரமச்லோகம் என்னும் ரஹஸ்யங்களின் பொருளை நன்கு உபதேசிக்க வேண்டும். இவ்வாறு உபதேசிப்பவனே முக்கிய ஆசார்யனாவான்.
8. இவ்வாறு ஆசார்ய உபதேசம் பெற்ற சிஷ்யன், சாத்திரங்கள் மறுத்தவற்றை விலக்கி, ஆசையை நீக்கி, பக்தியுடன், எம்பெருமான், பாகவதர்கள்,

ஆசார்யர்களை வழிபடவேண்டும். மூன்று தத்துவங்களையுமறிதலே மோட்சம் பெறக் காரணமாய் அசேதனமான சரீரங்கள் பசுக்கள் போல் பல நிறமுள்ளவை. சேதனர்கள் பசுவின்பால் போல் ஒரே ஸ்வரூபம் உடையவர். அந்தப் பாலில் மறைந்து நிற்கும் நெய்யே போல் எம்பெருமான் சேதனர்களுள் அந்தர்யாமியாய் நிற்கும் நிலை விளக்கப்படுகிறது.

இவ்வாறு தத்துவங்களை நன்குணர்ந்து ப்ரபத்தி செய்பவன் கழிவிரக்கம் இன்றி எல்லாப் பாவங்களும் நீங்கி மோக்ஷம் பெறுவது திண்ணம். தத்துவங்களையுணராமலே ப்ரபத்தி செய்தாலும், காலம் தாழ்த்தாமல் இவன் விரும்பும் காலத்தில் ஜ்ஞானம் என்ற கண்ணைக் கொடுத்து பூர்ணபலத்தைக் கொடுத்துவிடுகிறான். எத்தகைய பாவியாயினும் , அடியார்களிடமும் பரம கருணை கொண்டவன் எம்பெருமான்.

## தத்துவம்

### 16 ரஹஸ்யத்ரய சுளகம்:

இவ்வதிகாரக் கருத்துக்கள் முன்னரே திருமந்திரச் சுருக்கு, துவயச் சுருக்கு, சரமச்லோகச் சுருக்கு என்ற தலைப்புகளில் கூறப்பட்டன. ஆயினும், இங்கு அவை சுருக்கமான மூன்று தலைப்புக்களில் தரப்படும்.

திருமந்திரம்: இது எட்டெழுத்தும் மூன்று பதங்களும் கொண்ட மாமந்திரம். இதன் அருமை பெருமை அளவிடற்கரியது. இதன் உட்பொருள்,

1. அ காரத்தின் பொருளான ஸ்ரீமந் நாராயணனுக்கே நான் சேஷன் (அடிமை) எனக்கு நானுரியனல்லன். தன் ஸ்வரூபம், பாதுகாப்பு, செயல்கள் யாவும் அவன் அடிமையாயிருப்பதிலேயே நோக்கமுடைமையால், அவனுக்கே வசமாய் இருக்கும்.
2. ப்ரணவம் (ஓங்காரம்) நம: என்ற சொற்கள். நாராயணனுக்கே நான் அடிமையாவேன் என்று பலனைப் பிரார்த்திப்பதாகப் பொருள்படும்.
3. ப்ரணவம் - விரும்பாதவற்றை ஒழித்து, விரும்பியவற்றையே பெறுவதான பலனை வேண்டுவது.
4. அகாரத்தின் பொருளான நாராயணனுக்கே - பிறருக்கில்லாத அடிமையை நானுடையேன்; அவனையே சரணமாகப் பற்றினேன். அவன் திருவடிகளிலேயே எக்காலமும் அடிமை செய்ய வேண்டும் என்றும் தன் ஸ்வரூபம் (அடிமைத் தன்மை) உபாயம் புருஷார்த்தம் (மோட்சம்) இவற்றைப் பெற்ற ப்ரபன்னனுனை சேதனன் முக்தர்களுக்கு நிகராவான்.

இப்படி உறுதி பெற்றவன் முந்தைய பிந்தைய பாவங்கள் அனைத்தும்

"போய பிழையும் புகுதருவான் நின்றனவும்
தீயினில் தூசாகும் என்றபடி ஒழிந்துபோம்."

**த்வயம்:**

இம்மந்த்ரமே சரணாகதி மந்திரமெனப் பெருமை பெற்றது. இதில் முக்கியமாகப் பத்து பொருட்கள் நினைக்கத் தக்கவை.

1. நம்மை எம்பெருமான் திருவடிகளில் சேர்ப்பிப்பவள் - பிராட்டி
2. அவளோடு சேர்வதால் உறுதியான தன்மை.
3. எம்பெருமானின் சீர்மையும் - சிறந்த குணங்களும்
4. சேதனர்களுக்குப்பிரதானமான உபாயம் ஸ்ரீமந் நாராயணனே.
5. உபாயமான எம்பெருமானிடம் மஹாவிச்வாசத்துடன் பரந்யாஸம் (ப்ரபத்தி) செய்தல்
6. வேறு உபாயமேதுமற்ற நம்நிலைமை
7. ப்ரதானமாய் நாம் அடையும் பலனை ஸ்ரீமந்நாராயணன்
8. சேதனன் ஏற்க வேண்டிய பகவத் பாகவத கைங்கர்யங்கள்.
9. அகங்காரம், மமகாரம் முதலிய குறைகள் யாவும் நீங்கப்பெறுதல்.
10. இந்தப் பத்து பொருட்களையும் த்வயத்திலே சிந்தித்து உணர்தல்.

**சரமச்லோகம்:**

தேர்த்தட்டிலே அர்ச்சுனனுக்குக் கண்ணன் அருளிய மாமந்திரம். திருமந்திரத்திலும், த்வயத்திலும், வெளியாகும் உபாயத்தையும், அதை அனுஷ்டிக்க வல்ல அதிகாரிகளையும், செய் என்று கட்டளைவாயிலாக விளக்குவது இம்மந்திரம், அவன் திருவடிகளையே உபாயமாகவும், பலனாகவும் கொண்ட நம் ஆசார்யர்கள் நம்மை உய்விக்கச் செய்யும் த்வயத்தை நல்லதோர் காலம் வாய்க்கையில் நமக்கு உபதேசிக்க,அதை பொருளுடன் அனுஸந்தானம் (சிந்தித்தல்) செய்யும் நாம், அஹங்காரமும்,

மமகாரமும் நில்லா நல்வாழ்வைப் பெறுவோம். பக்தியோகம் முதலிய மற்ற உபாயங்களை நிறைவேற்ற இயலாத என்னை அவை கைவிட்டு நீங்கின; எனப்பிரபத்தியால் மகிழ்ந்த எம்பெருமான் தானே அந்தந்த உபாயங்களின் இடத்திலே நின்று பலனருள முற்பட்டுள்ளான். இவன் என் எல்லாப் பாவங்களையும் ஒழித்துவிடுவதாய்க் கூறிய உறுதியை நம்பி எக்காலமும் வருந்தாத தைர்யத்தை யடைகின்றோம். இவ்வாறு ஞானம் நல்லொழுக்கம் (அனுஷ்டானம்) வைராக்யம் எனும் பற்றின்மை,இவை நிரம்பிய நம் ஆசார்யர்கள் அருளால் எம்பெருமானின் அளவற்ற அருளையும் பெற்று ஸம்ஸார பந்தத்தை வேரறுத்தார் ஆகிறோம். இம்மூன்று ரஹஸ்யங்களில் ஸாரத்தை மட்டும் இங்கு கூறி விளக்கங்களை ஸ்ரீமத் ரஹஸ்யத்ரயஸாரத்திலே ஸ்வாமிதேசிகனுர் பரக்க விளக்கியருளியுள்ளார்.

17வது ரஹஸ்ய நூல் சாரசாரம். இதில் முன்கூறிய திருமந்திரம், த்வயம்,சரமச்லோகம் என்னும் மூன்று ரஹஸ்யங்களின் பொருள் விரிவாக விளக்கப்படுகிறது.

18வது ரஹஸ்ய நூல் அபயப்ரதானசாரம். இது சரணாகதி சாஸ்திரம் எனப்படும் ஸ்ரீமந் ராமாயணத்தின் சாரமான பகுதியாகும். பத்து அதிகாரங்களில் விபீஷணனின் சரணாகதியை மையமாகக் கொண்டு இதில் பற்பலரின் சரணாகதி பற்றியும் விரித்துரைக்கப்படுகிறது. சரணாகதி தொடர்பான பல ராமாயண. ச்லோகங்களுக்கு ஸ்ரீதேசிகனால் உரையருளப்படுவது மிகவும் அழகியதாகும்.

19வது ரஹஸ்யசிகாமணி இவ்வற்புத நூலில் பூமிப்பிராட்டியார் மக்களின் நல்வாழ்வுக்கு வழி எது? என்று கேள்விக்கு ஸ்ரீவராஹப்பெருமாள் விடையாக அருளிய இரண்டு ச்லோகங்களுக்குப் பொருள் விளக்கப்படுகிறது.

20வது அஞ்ஜலிவைபவம், முதலாசார்யரான ஆளவந்தார் தமது ஸ்தோத்ர ரத்னத்தில் அஞ்ஜலியின் வைபவத்தை விளக்கிய ஓர் ச்லோகத்தின் விளக்கமாக இந்நூல் அமைந்துள்ளது. அஞ்ஜலி =கை குவித்து வணங்குதல்.



# இயல் 4

# வைணவ சமயக் கோட்பாடு

## வீடு பேற்றிற்கான வழிகள்

## உபாஸனைக்குரிய உபாயங்கள் நான்கு

பகவத்கீதை, அதன் பாஷ்யம், அதனுரையான தாத்பர்யசந்திரிகை முதலியவற்றின் அடிப்படையில் தேசிகன் பிரபத்தங்களிலுள்ள கருத்துக்கள் இனிவரும் 4 யோகங்களில் காட்டப்படுகின்றன.

1. கர்மயோகம், ஜ்ஞானயோகம், பக்தியோகம், ப்ரபத்தி என்ற நான்கு உபாயங்களும், ஒன்றையொன்று சார்ந்தே நிற்பவை. தனித்து எதுவும், நிறைவு பெறுவதில்லை. ஒன்று ப்ரதானமாகவும், மற்றவை அதற்கு அங்கமாகவுமே செயல்படும். கர்மயோகம் செய்பவன், மற்றவற்றையும் நாடியே பயன் பெறுவான். பக்தி நிஷ்டனுக்கும் அது நிறைவேற ப்ரபத்தி தேவை. அதுபோல் ப்ரபத்தி செய்பவனுக்கும் அங்கமாக பக்தி தேவைப்படுகிறது. பகவத் கீதை( 2-41)

கீதார்த்த சங்க்ரஹரக்ஷை, யாமுனாசார்யர். இதனைக் கண்ணன் கீதையில், மூன்று யோகங்களுக்கும் ஒன்றோடொன்று சேர்க்கையுண்டென்றருளினர்.

### 4.1 கர்மயோகம்:

கர்ம யோகம் வேறு, கர்மங்கள் வேறு. கர்மங்கள் மனிதனைப் பிணிப்பில் ஆழ்த்தும், கர்மயோகம் என்பது பிணிப்பறுக்கும். கர்மம் ஆதியற்றது, பலவகையானது. அநாதியான அஜ்ஞானத்தாலே யது வளர்வது. அது

காமத்தையும், கோபத்தையும் வளர்த்து அதன்மூலம் தானும் வளர்கிறது. ஒவ்வோர் கர்மமும், ஜீவனின் உடலிலும், புத்தியிலும் தன் வாசனையைப் பதிய வைக்கிறது. இந்த வாசனையின் தன்மைக்கேற்ப சேதனன் புலன்களின் இன்பத்தினை நாடித் திரிகின்ருன்.

ஆனுல் கர்மயோகம் இத்தகைய தொல்லைகளுக்கப் பாற்பட்டது. அது காமம், வெகுளிகள் கலவாதது. சிறந்ததோர் நோக்கத்தினையடையத் தீவிரமாகச் செயல்படும் கர்ம வகையினை யிது சார்ந்தது. ஆத்மா சுதந்திரமடைவதற்கான ஓர் உபாயம் இது. இந்தக் கர்மயோகத்தின் ஈடுபட்டவன் அதன்பயன்பற்றிச் சிறிதும் பற்றுக்கொள்ள மாட்டான். இந்தயோகம் புத்தியில் ஓர் சிறந்த கட்டுப்பாட்டையுண்டாக்குவதாகும். எவையேனும் சில பயன்களைக் கருதிச் செய்யும் கர்மங்களில் திரும்பத் திரும்ப பந்தம் வளரும். ஒரு பயனும் கருதாத யோகத்தை நிஷ்காம்ய கர்மயோகம் என்பர். இதுவே மிகவும் சிறந்த உபாயம், இதனையே ஸ்ரீராமானுஜாசார்யர், ஜ்ஞானயோகத்துடன் கூடிய கர்மயோகம், ஸம்ஸார துக்கங்களையெல்லாம் மாற்றி பரமபுருஷார்த்த மெனப்படும் மோட்சத்தையே கொடுக்கும் என்று கீதாபாஷ்யத்திலே அருளிச் செய்துள்ளார். 3 ஷெ(மேற்படி) ஜ்ஞான யோகத்தில் ஈடுபட்டு கர்மாக்களைச் செய்பவர் அவற்றின் பலனைவிட்டு விடுவதால் பிறவிப்பிணியை நீத்தவர்களாய், துயரற்ற உயர்பதவியை அடைகின்றனர் என்றும் அருளியுள்ளார். பகவத் கீதை முற்றிலும் நிஷ்காம்யமாகவே கர்மயோகம் செய்வதன் சிறப்பை வலியுறுத்துகிறது. ஆகவே, சிறந்த உபாஸனுமார்க்கம்

ஆகும். இத்தகைய உபாஸகனை சுகமோ, துக்கமோ ஒன்றும் செய்யமாட்டா. வெப்பம், தட்பம், மானம், அவமானம், புகழ்ச்சி, இகழ்ச்சி முதலிய இரட்டையு-ணர்வுகள் ஒன்றும் செய்வதில்லை. எல்லாவற்றையும் சமமாகவே மதிப்பான், கடமையுணர்வுடன் செயல்களைச் செய்வான். பயனுக்காகவென்று எதையும் அவன் செய்வதில்லை.

வேதங்களில் பல காம்யகர்மாக்கள் விதிக்கப்பட்டிருப்பினும், அவை அனைவருக்காகவும் விதித்தவையல்ல. சில போக போக்யங்களை விரும்புபவர்க்கே விதிக்கப்பட்டவை, கர்ம யோகீ, வெற்றி தோல்விகளைப் பொருட்படுத்தாமல் சமமாய் செயலாற்றுவான். இந்த ஸமத்வ மனப்பான்மையே யோகமெனப்படும்.

இத்தகைய ஸமத்வம் பற்றிய சித்தத்தின் (உள்ளத்தின்) சமாதானம் என்பதே யோகம் என்று பாஷ்யத்திலும் விளக்கப்டுகிறது. அந்தக் கர்மாக்களைச் செய்கையில் இந்த ஜ்ஞானயோகம் மிக்க சாமர்த்தியத்தால் தான் நிறைவேற்றத் தக்கதென்கிறுர்.

யாரும் இவ்வுலகில் கர்மாவைச் செய்யாதிருக்கமுடியாது. அப்படி செய்தே தீரவேண்டிய கர்மாவை பலனில் ஈடுபாடின்றிச் செய்வது பிறவாமைக்கு உபாயமாகவும், பலன் கருதிச் செயலாற்றுதல் ஸம்ஸார பந்தத்திற்கு உபாயமாகவும் இருப்பதால் பகுத்தறிவால் சேதனன் நிஷ்காம்யமாகக் கர்மயோகத்தில் ஈடுபடுவதே நலன் தருவதாகும். செய்யும் செயல்களையெல்லாம் தான் செய்பவன் என்ற அபிமானமும் இன்றி எம்பெருமானே,

தன்னுகப்பிற்காக இதனைச் செய்து கொள்கிறன் என்றபடி ஸாத்விகத்யாகத்துடன், ஆசையும் மமகாரமும் அற்றவனுய் செய்யவேண்டுமென்று கீதாசார்யன், பார்த்தனுக்கு உபதேசிக்கிறன். இத்தகைய கர்மயோகியானவன்,

1. தான் செயல்புரிபவன் என்ற எண்ணத்தைத் தியாகம் செய்கிறன்.
2. செய்யும் செயலின் பலனையும் எண்ணுமலே தியாகம் செய்கிறன்.
3. நம்மைச் சேர்ந்தது என்ற மமகாரத்தையும் தியாகம் செய்கிறன்.

### கர்மயோகமும் ஜ்ஞானயோகமும்

இவ்விரண்டிலும் ஒன்றேடொன்று கலவாமல், யாருக்கு எது உரியதென்பதைக் கண்ணன் கீதையில் விளக்குகின்றன். ஸாங்க்யர் எனப்படும் ஜ்ஞானிகளுக்கு ஜ்ஞானயோகமும், கர்ம நிஷ்டர்களான யோகிகளுக்குக் கர்மயோகமும், ஆத்மாவைக் காணுதல் என்ற லக்ஷ்யத்தையடைவதற்கான இருபெரும் வழிகளெனப்படும். வெவ்வேறு மனேநிலைபெற்றும், திறமையில் வேறுபட்டுள்ள மனிதர்கள் யாவரும் ஜ்ஞானயோகத்திலேயே இறங்க முடியாது. தனித்த ஆத்மாவைப் பற்றியே தியானித்து அறியும் புத்தி படைத்தவர் ஸாங்க்யர் எனப்படுவர்.இத்தகைய தகுதி பெறுதவராய் கர்மயோகத்திற்கே யுரியவர் யோகிகள் எனப்படுவர். சக்தியுள்ளவர் ஜ்ஞான யோகத்திலும் சக்தியற்றவர் கர்மயோகத்திலும் இறங்கவேண்டுமென்று

வகுக்கப்படுகிறது. இங்கு ஓர் கேள்வி எழும்புகிறது. ஸம்ஸாரத்திலிருந்து விடுதலையடைய விரும்புபவன், நேரிட ஜ்ஞானயோகத்தில் இறங்குவதைவிட்டு, ஆத்ம ஜ்ஞானத்திற்கு மறைமுகக் காரணமாக கர்மயோகத்தில் ஏன் வீணே இறங்கவேண்டும்? என்பதே அக்கேள்வி. இதற்கு இவ்வாறு விடை தரப்படுகிறது.

கர்மயோகமின்றி ஜ்ஞானயோகம் செய்வதற்கரியது. உபாசகன் கர்மாக்களையெல்லாம் விட்டுவிட்டு, ஜ்ஞானயோக நிலையையடையலாமென்று நம்பிக்கை கொள்ளல் இயலாது. கர்மாக்களை விடுதல் மட்டும், ஜ்ஞானயோக நிஷ்டையை அடைவிக்காது. கர்ம யோகத்தினாலேயே ஒருவன் ஜ்ஞானயோகத்தை யடையமுடியும். முதல் படியை விட்டு திடீரென்று மூன்றாம்படிக்கு ஏற முயல்வதுபோல், நேரிட ஜ்ஞானயோகத்தில் இறங்குவது இயலாத காரியம் என்பதே விடையாகும். யாவரும் மோக்ஷம் பெறும் ஆசை தோன்றியதால் மட்டும் திடீரென்று ஜ்ஞானயோகம் செய்வது எளியதன்று. ஆதலின் கர்மயோகத்தினைத் தொடங்காவிடில், ஜ்ஞானயோகம் சித்திக்காதென்பது பொருள். பலனை எதிர்பாராமல், பகவானை மகிழ்விப்பதாகிய கர்மயோகத்தைச் செய்தாலே அநாதி காலமாக நாம் செய்துவந்த பாவங்களின் குவியல் ஒழியும். இந்திரியங்களின் காரியம் நீங்கும். அதன்மூலம் ஜ்ஞானயோகம் ஆத்மாவலோகனத்திற்குச் சாதனமாகும். இருயோகங்களுக்கும் ஆத்மாவலோகனமே இறுதிப் பயனாயிருப்பதென்றும் உண்மைநிலையை

உணர்ந்தவனே அறிஞன் என்று பின்னர் விளக்கப்படுகிறது.

4. இந்த இருயோகங்களையும் செய்யத் திறனுள்ளவர் கர்மயோகத்தைச் செய்வது எளிதாதலாலும், அதில் கவனக்குறையேற்பட வழியில்லாமையாலும், வேறொன்றையும் எதிர்பார்க்க வேண்டாமையாலும், அதுவே யாவராலும் செய்யத்தக்கது. ஜ்ஞானயோகம் அப்படியன்று. இந்தக் கர்மயோகத்தை ஒவ்வொருவருக்கும் ஸ்வதர்மம் என்றும் கூறுவர். இது செவ்வனே செய்யப்படாவிட்டாலும், அரைகுறையாய் நின்றுவிட்டாலும் கூடக்கேடு பயப்பதில்லை. இது ஜ்ஞானயோகத்தை விடச் சிறந்ததென்பர். ஒரு பிறவியில் ஸ்வதர்மம், குறைபட்டதாயினும் ஒழுங்காக அனுஷ்டிக்கப்படும் பரதர்மத்தை (ஜ்ஞானயோகத்தை) விடச் சிறந்ததே. ஸ்வதர்மத்தினுல் ஒருவன் இறக்கநேரிடும் என்ருலும் அதுவே சிறந்தது. அது மறுபிறவியிலேனும் இடையூறின்றி கர்மயோகம் செய்யக் காரணமாய் அமையும். ப்ரக்ருதியுடன் கலந்திருக்கும் நிலையில் கவனக் குறைவு முதலியவையேற்படக் கூடுமாதலால் ஜ்ஞானயோகம் அச்சம் விளைவிப்பது.

புத்தியையும் கலக்கவல்ல பெரும் எதிரி காமம் என்பது. இது ஜ்ஞானயோகத்திற்கு விரோதியாகும். ஆதலின் மனதை புத்தியின் உதவிகொண்டு, திடப்படுத்தி கர்மயோகத்தை நிலைநாட்டி வெல்வதற்கரிய காமம் என்னும் எதிரியை அழித்திடு என்று அர்ஜுனனுக்கு உபதேசிக்கின்ருன் கண்ணன். கர்மயோக நிஷ்டன், தாஞகவே மனனம் (தியானம்) செய்யும் தன்மையனுய்,

எளிதில் கர்மயோகத்தை நிறைவேற்றி விரைவிலேயே ஆத்மாவையறிகிறான். ஜ்ஞானயோக நிஷ்டனோ மிக்க சிரமத்துடனேயே ஜ்ஞானயோகத்தை நிறைவேற்றுகிறான். அது துயரம் மிகுந்ததாதலின், தாமதித்தே ஆத்ம தர்சனம் பெறமுடிகிறது.

கர்மயோகம், ஜ்ஞானயோகத்தைவிடச் சிறந்ததாதலின், கர்மயோகீ விரைவில் ஆத்மாவலோகனத்தைப் பெறுகிறான் என்பதற்கு நான்கு காரணங்கள் விளக்கப்படுகின்றன.

1. இந்தக் கர்மயோகம் செய்பவன் சுத்தாத்மாவாகிறான். பாவங்கள் நீங்கப் பெறுகிறான். அவன் புத்தி தூய்மை பெறுகிறது. எம்பெருமானின் உகப்பிற்கான பணிகளிலேயே அவன் ஈடுபடுகிறான். இச்செயல்கள் இன்ப துன்பங்களுக்குக் காரணமாவதில்லை. இத்தகைய பலனையெதிர்பாராத (நிஷ்காம்ய) கர்மாக்கள், எம்பெருமானின் உகப்பிற்கே பெரிதும் காரணமாயமைவதால் மிகவும் உயர்ந்த மதிப்புள்ளவையாகின்றன. எல்லாம் எம்பெருமானுக்கே அர்ப்பணம் செய்யப்படுகின்றன.
2. கர்மயோகீ புலனடக்கம் உள்ளவனாதலின், விஜிதாத்மா எனப்படுகிறான். ஒரு பலனிலும் ஈடுபடாமல் கர்ம யோகத்திலே ஈடுபடுவதால், புத்தியை வென்று தன் வசத்தில் வைத்திருப்பவன். சிறிது சிறிதாகத் தன் புத்தியைச் சிறிதும் சலிக்காமல் தம்வசமே நிற்குமாறு பழக்கிவிடுகிறான்.
3. அவன் ஜிதேந்த்ரியன் என்று கூறப்படுகின்றான். புத்தியைக் கட்டுப் படுத்துவதன் வாயிலாகத் தன்

உணர்ச்சியையும், புலன்களையும் அடக்கும் ஆற்றல் பெற்றுவிடுகிறுன். புலன்களின் கேடுகளால் மயங்கி அவன் கேடுறுவதில்லை. இந்த உண்மை யோகியானவன் உலகையே வென்றுவிடுவான்.

4. அந்த யோகியை சர்வ பூதாத்மா என்றழைப்பர். அவன் உண்மையான ஆத்மாவை அனுஸந்தானம் செய்து அதன் ஜ்ஞானஸ்வரூபத்தை யுணர்ந்தவனுய், எல்லாப் பிராணிகளிடமுள்ள ஜீவாத்மாக்கள் ஒரே ஜ்ஞானவடிவமானதால் சமமானவை என்று உணர்கின்றவன். அந்தந்த ஜீவன்களும், தத்தம் கர்மாக்களுக்கேற்றவாறு வெவ்வேறு உடல்களைப் பெற்றும் திண்டாடுகின்றன என்ற உண்மையையும் உணர்கிறுன். ஆதலின், இக்காரணங்களால், ஜ்ஞானயோக நிஷ்டனை விடக் கர்மயோகியே சிறந்தவனுகிறுன்.

யஜ்ஞம் (வேள்வி) முதலிய தேவபூஜைக்கான கர்மாக்களை விட்டுத் தம் பயன் கருதிச் செய்யப்படும் கர்மாக்கள் உலகைக் கர்மாவில் ஆழ்த்தி கட்டுப்படுத்துவன. ஆதலின், யஜ்ஞம் முதலியவற்றிற்காகப் பொருளீட்டுவது போன்ற செயல்களையே நீ செய். சுயநலம்கருதும் சேர்க்கையிலிருந்து விடுபட்டு கர்மயோகத்தைச் செய்வாயாக என்று கண்ணன் அருளுகிறுன். ஜ்ஞானயோகம் செய்யும் திறனுள்ளவர்கட்கும், கர்மயோகமே மிக்க லாபகரமானதும் எளியதுமாகும். புராணப் புகழ் வாய்ந்த ஜனகர் போன்ற மஹான்கள் கூட இத்துறையிலேயே ஈடுபட்டவர்களாய், ஆத்ம தர்சனம் என்னும் நோக்கத்திலே வெற்றி கண்டனர்.

ஜ்ஞானயோகத்தில் வெற்றிகரமாக முன்னேற்றம் காணும் பெரியோர்கூட, உலகிலுள்ள பாமர மக்களுக்கு வழிகாட்டுவதற்கேனும் கர்மயோகத்தில் ஈடுபடவேண்டும். இவ்வுலக மக்கள் சான்றோர் செல்லும் வழியையே பின்பற்றவது கண்கூடு. அதனால்தான் சிறந்த சக்தியுள்ள ஜனகர் போன்றோரும், மக்களுக்கு வழிகாட்டவென்றே, எளிய கர்மயோகத்தில் ஈடுபட்டனர். பாமர மக்கள் பொதுவாகக் கர்ம ஸங்கிகளே யாவர். கர்மாவில் ஈடுபாடுடையவர் என்பதால் அவ்வாறு கூறப்படுகின்றனர். அவர்கள் பயன்கருதாமல் கர்மயோகத்தில், ஈடுபடப் பெரியோர்களே வழிகாட்டவேண்டும். இதுவே லோக சங்க்ரஹம் (உலகத்தாரை வசப்படுத்தி நல்வழிப்படுத்தல்) எனப்படும். இதுவரை கர்மயோகத்திற்கான அதிகாரிகள் பற்றிக் கவனித்தோம். உண்மையான கர்த்தா - இறைவனே.

அடுத்து தன்னைச் செயலாற்றுபவன் - என்று எண்ணுமல் தான் கர்த்தா அல்லன், ப்ரக்ருதி என்னும் எம்பெருமானின் மாயை,தனக்கு உரிய ஸத்வம், ரஜஸ், தமஸ் என்ற மூன்று குணங்கள் மூலமே நம்மைச் செயலாற்ற வைக்கிறது. ஆதலின், நாம் செயலாற்றும் வாயிலாக இருக்கிறோமேயன்றி உண்மையில் ப்ரக்ருதியின் குணங்கள் மூலம் எம்பெருமானே எல்லாச் செயல்களையும் செய்யும் கர்த்தா என்று உணர்ந்த நாம் அகர்த்தா (செய்பவரல்லர்) என்று எண்ணிப் பழகுதல் வேண்டும். இதனை அகர்த்ருத்வ அனுஸந்தானம் என்பர். கர்த்ருத்வம் நமக்குண்டென்ற அபிமானத்தை (கர்வத்தை) விட்டொழிக்கவேண்டும் என்பது கீதாசார்யன் வற்புறுத்தும்

வழி. இவ்வாறு குணங்களே, கர்த்தாக்கள் - நானல்லன் என்று உணர்வதால், உண்மையான ஆத்மஞானம் ஏற்படுகிறது. இதனுல் ஆத்மாவிற்கும் ப்ரக்ருதிக்குமுள்ள வேறுபாடு தெளிவாகும். இதனுல் தேகம் வேறு; ஆத்மா வேறு என்ற விவேகமும் உண்டாகிறது. பின்னர், எல்லாக் கர்மாக்களையும் எம்பெருமானிடம் அர்ப்பணம் செய்வதும் எளிதாகும். முக்குண வடிவமான ப்ரக்ருதியின் தொடர்பாலேயே இடைக்காலத்தில் ஜீவாத்மாவிற்கு இந்த கர்த்ருவம் வந்தது. பழைய வினைகளான புண்ய பாப கர்மாக்களால், ப்ரக்ருதி சம்பந்தம் நமக்கு இந்நிலையை விளைவித்து வருகிறது. இது நீடித்து நிற்கும் கர்த்ருத்வம் இல்லை. புண்ய பாபங்களாலான கர்த்ருத்வத்தை விட்டொழித்து, எம்பெருமான் அருளால் கிட்டும் கர்த்ருத்வத்தை, முக்தியில் தொண்டு செய்து நிற்கும் நிலையை நாடவேண்டும். அந்த கர்த்ருத்வம் நிலையானது. குற்றமற்ற. இவ்வகையில் சாங்கியர்கள் ப்ரக்ருதிக்கே கர்த்ருத்வம் உண்டு என்று கூறுவதை நாம் ஏற்றதாகாது. கர்மத்தால் ஏற்படும் கர்த்ருத்வம் கை விலங்கு போன்றதென்று உபாஸகன் உணரவேண்டும். இவ்வுணர்ச்சியால் பலனில் ஆசையைத் துறந்து கர்மயோகத்தில் ஈடுபடுவான். ஆத்மா இயற்கையில் கர்த்தாவில்லை, குணச் சேர்க்கையாலேயே கர்த்தாவாகத் தன்னை நினைக்கிறுன் என்கிறுர் ஸ்ரீவேதாந்த தேசிகனும். ப்ரக்ருதி ஸம்பந்தத்தால் ஏற்பட்ட தேஹ இந்திரியாதி சம்பந்தத்தாலேயே இந்த கர்த்ருத்வம் தோன்றுகிறதேயன்றி, இது ஆத்மாவிற்கு இயற்கையாக வந்ததில்லை என்பதை கர்மயோகீ கட்டாயம்

உணரவேண்டும் என்கிறோம். இவ்வாறு உணர்ந்தவன், ப்ரக்ருதி தொடர்பைப் பெற்றிருந்தாலும் ப்ரக்ருதியும் (சரீரமும்) ஆத்மாவும் ஒன்று என்பது போன்ற தவறான எண்ணங்களால் பாவத்தையும், அதனால் பந்தத்தையும் (ஸம்ஸாரத்தை) அடைவதில்லை. பயனில் பற்று வைக்காதவனாய், சரீர இந்திரியங்களாக மாறியுள்ள ப்ரக்ருதியில் கர்மாக்களை ஒப்புவித்து, ஆத்மாவின் விடுதலைக்காகவே கர்மாக்களைப் புரிதல் வேண்டும் என்று ஏற்படுகிறது.

எல்லா ஆத்மாக்களும் எம்பெருமானின் சரீரமானவையென்று ஒத்துக் கொண்டுள்ளபடி, அவனுக்கு சரீரங்கள் (ஆத்மாக்கள்) கட்டுப்பட்டவையாதலின், குணங்களால் ஏற்படும் கர்த்ருத்வத்தை அவன் மீதேயேற்றி, கர்மாக்கள் செய்யப்படவேண்டுமென்பதை ஸ்ரீயாமுனாசார்யர் கீழ்க்கண்டவாறு விளக்குகிறார்.

1. பற்பல கர்மாக்களின் பலன்களிலே பற்றின்றி கர்மயோகம் செய்யப்படவேண்டும்.
2. இவ்வுலகை நன்கு தலைமை தாங்கி நடத்த வல்லவர்களும் கடினமான உபாயங்களைத் தாம் செய்யவல்லாரேனும், அவற்றை விட்டு கர்மயோகத்தையே செய்து காட்டவேண்டும்.
3. ப்ரக்ருதியின் குணங்களது கர்த்ருத்வத்தை நன்குணர்ந்து நாம் இயற்கையில் கர்த்தா அல்லோம் என்றுணர்ந்து செயலாற்றவேண்டும்.

4. எம்பெருமானுக்கே இதற்கு மாறுன கர்த்ருத்வம் உண்டு என்று உணர்தல் மிகவும் கர்மயோகிகட்கு நலம் பயப்பதாம். கர்மயோகத்திலே ஜ்ஞானம் உள்ளடங்கியிருக்கும் மூலப்பொருளாகும் என்று கீதாபாஷ்யம் விளக்குகிறது.
5. கண்ணன், கர்மங்களின் அறிவு பெறல் கடினமென்றுர். மோக்ஷத்திற்கு சாதனமான கர்மாக்களை அறியவேண்டும்; நித்தியம், நைமித்திகம், காம்யம் என்று பிரிவுள்ளவையான பற்பல கர்மாக்களும் அவற்றிற்குச் சாதனமான பொருளையீட்டுதல் போன்றும் உள்ளவை விகர்ம எனப்படும். அகர்மா எனப்படும் ஜ்ஞானத்தைப் பற்றியும் அறிவது கடினமாகும், என்கிறுர்.

அகர்மா என்னும் ஆத்ம ஜ்ஞானத்தில் இருந்துகொண்டே கர்மாவையும், செய்யப்படும் கர்மாவில் ஆத்மஞானத்தையும் எவன் காண்கிறுனே, அவனே உலகில் பேரறிஞன். அவனே முக்திக்குரியவன். செய்யும் செயலையே ஆத்மஸ்வரூபமாக அனுஸந்திப்பதன் மூலம் ஜ்ஞான ஸ்வரூபமாகக் காண்பவனும், அந்த ஆத்ம ஜ்ஞானத்தை கர்மயோகத்தினுள் அடங்கியுள்ளமையால் கர்மாவின் ஸ்வரூபமாகவும் எவன் பார்க்கிறுனே அவன்தான் பேரறிஞன்; யாரும் எதிர்பார்க்கும் எச்செயலையும் நிறைவேற்றி முக்தியடைய வல்லவனும் அவனே என்று ஸ்ரீராமானுசர் தம் பாஷ்யத்திலே விளக்கம் தருகிறுர்.

ஜ்ஞானத்துடன் கூடிய கர்மாவே உபாயமென்று விதிக்கப்பட்டுள்ளபடியால், ஒன்றேடொன்று பொருந்து-

வனவாதலின், சாஸ்திரத்தில் அர்த்தங்கள் முரண்படுவதில்லை. கர்மாவைச் செய்யும்போதே கர்த்தாவான ஆத்மாவின் ஸ்வரூபத்தை அனுஸந்தானம் செய்வதால் இரண்டும் (கர்மமும்,ஞானமும்) சித்திக்கின்றன.

ஸ்திரத் தன்மையற்ற ப்ரக்ருதியில் தனக்கு இது துணையென்ற எண்ணமில்லாதவன், பலன் கருதாதவன். மனத்தை ஒருமித்த ஒரே பொருளில் ஈடுபடுத்துபவன், ப்ரக்ருதியிலும் ப்ரக்ருதி சம்பந்தமுள்ள பொருட்களிலும் என்னுடையது என்ற (மமகாரம்) புத்தியற்றவன், யதேச்சையாகக் கிட்டும் பொருளால் மகிழ்பவன், சுகதுக்காதிகளான இரட்டைகளில் வேறுபாடு கொள்ளாத சமநிலையுடையவன், வெற்றியையும் தோல்வியையும் ஒரேவிதமாகக் காண்பவன்தான் இங்கு குறிக்கப்படும் கர்மயோகி. அவன் ப்ரக்ருதியை விட்டு விலகிய ஆத்மாவின் ஸ்வரூபத்தையே அனுஸந்தானம் செய்துவருவதுடன், பரப்ரஹ்மமான பரமபுருஷனின் சரீரமாக அனைத்தையும் அனுஸந்தானம் செய்வதால் சித்தியைப் பெறுகிறுன்.

எல்லாக் கர்மாக்களையும் ப்ரஹ்ம ஸ்வரூபமாகவே வாஸுதேவனென்றே நினைத்துச் செய்பவன், ப்ரஹ்ம கர்ம ஸமாதி எனப்படுவான். அவன் ப்ரஹ்ம ஸ்வரூபமான ஆத்மஸ்வரூபத்தையே யடைகிறுன். மோக்ஷமடைய விரும்புபவன் செய்யும்கர்மாப்ரஹ்ம ஸ்வரூபமே யென்றெண்ணுவதால், அவனது கர்மா, ஜ்ஞானமே வடிவமானது. சாக்ஷாத்தாக ஆத்மாவைக் காணச்

சாதனமானது. ஆதலின், இடையில், ஜ்ஞானயோகம் அவனுக்குத் தடையாய் நிற்பதில்லை.

கர்மயோகம், தனக்குள் ஆத்ம ஸ்வரூபத்தின் அனுஸந்தானந்தையும் உட்கொண்டதேயாகும். ஆதலின், ஆத்ம ஜ்ஞானமும் இதில் ஒரு முக்கியமான பகுதியாகிறது. இத்தகைய ஜ்ஞானத்தின் விளைவாகவே கர்மயோகமும் ஜ்ஞான வடிவங் கொண்டதாகப் பேசப்படுகிறது. பக்தியோகத்தைத் துவங்கும் உபாஸகன் முதன்முதலாக ஆத்மானுபவத்தைப் பெற்றிடல் இன்றியமையாதது, இது எம்பெருமானிடம் தன்னை அர்ப்பணிக்க முதல்படியாகும். தஹரவித்யை என்னும் பரப்ரஹ்மவித்யை - தன் ஆத்மானுபவம் மிகத் தேவையாகிறது என்று வற்புறுத்துகிறது. உபாஸனத்திற்கு ப்ரத்யகாத்ம (ஜீவாத்ம) தர்சனம் ஓரங்கம். ஒவ்வொருவனும் ஆத்மீயமான யோகத்திற்கு முன்னதாக கர்ம யோகத்தைத் துவக்க வேண்டுமென்று விதிக்கப்படுகிறது. கர்மயோகம், ஆத்மாவலோகனத்தைப் பலனாகக் கொண்டது. அது நேராகவோ அன்றி ஜ்ஞானயோகத்தின் வாயிலாகவோ சித்திக்கும். ஆத்மானுபவத்தால் ஜ்ஞானம் பயனாகக் கிட்டுகிறது. இக்கருத்தை தேசிகனார் தம் தாத்பர்ய சந்த்ரிகையில் ஸாத்யஸாதனபாவம் (கார்யகாரணபாவம்) என்ற முறையில் விளக்குகிறார்.

இந்த ஸாத்ய ஸாதனபாவம் என்பது அவஸ்தாபேதத்தைத் தழுவியது என்பது கருத்து. இதனால் கர்மாவிற்குத் தன்னுள் அடங்கிய ஜ்ஞானத்திலே நிறைவு என்பது ஆத்மஸாக்ஷாத்காரம் என்னும் ஸாத்ய (கார்ய) தசையைக் கருதியே யென்றதாகிறது.

இப்படி ஆத்மானுபவம் உள்ள உபாஸகன் முதலில் கடைப் பிடிக்கவேண்டிய மூன்று அம்சங்கள் வருமாறு:-

1. ஆத்ம ஜ்ஞானம் உள்ள உபாஸகன் தேஹாத்மாபி மானத்தையும் மமதையையும் விட்டொதுக்குவான். உடலையே ஆத்மா என்று எண்ணுவதும், எல்லாம் என்னுடையவை என்றும் எண்ணங்கள் அவனிடம் வருவதில்லை.

2. வெவ்வேறு பிராணிகளிடமும் உள்ள ஜீவாத்மாக்கள் ஜ்ஞானத்தையே தம் வடிவமாகக் கொண்டமையால் சமம் என்று உணர்வான்.

3. ப்ரக்ருதியை விட்டு விலகிய எல்லா ஆத்மாக்களும் ஒன்றோடொன்று சமம். அதேபோல் எம்பெருமானுடன் சமமானவை என்று உணர்வான்.

இவ்வாறு ஜ்ஞான வடிவான கர்மயோகத்தைச் செய்து சித்தி பெற்றவன் அத்தகைய ஜ்ஞானத்தை காலக்ரமத்தில் தனக்குத் தானே பெறுகிறான் என்றும், இவ்வாறு உபதேசத்தால் ஜ்ஞானத்தைப் பெற்று அந்த ஜ்ஞானம் வளர்வதில் ச்ரத்தையுள்ளவனாய் ஈடுபட்டு, அதிலேயே உள்ளத்தைச் செலுத்தியவனாய், பிற செய்திகளில் மனத்தைச் செலுத்தாமல் கட்டுப்படுத்தி, விரைவில் குறிப்பிட்டவாறு ஜ்ஞானத்தைப் பெறுகிறான். பின் மிக்க சாந்தியை விரைவில் பெற்று, ஆனந்த வடிவமான ப்ரஹ்மத்தை அடைகிறான் என்று கீதாபாஷ்யம் விளக்குகிறது.

வித்யையும், வினயமும் நிறைந்தவனிடமும், ப்ராஹ்மணனிடமும், பசு, யானை, புலையர், யாவரிடமும்

ப்ரக்ருதி சம்பந்தத்தால் மிக்க வேறுபட்டனவாக ஆத்மாக்கள் தோன்றினாலும், ஆத்மாவின் உண்மை ஸ்வரூபத்தையறிந்த பெரியோர்கள், அவ்வாத்மாக்கள் அனைத்தும் ஜ்ஞானத்தையே வடிவாய்க் கொண்டமையால் சமமானவை; ஆனால் ப்ரக்ருதிக்கே வேறுபட்ட தோற்றங்கள்-ப்ரக்ருதியால் ஏற்பட்ட சரீரங்கட்கே வேற்றுமைகள். ஆத்மாவிற்கில்லை யென்பதை நன்கு உணர்வார்கள் என்கிறார்.

கர்மயோகத்துக்கு உரிய இடம்: எவரும் இந்த கர்மயோகத்திற்கு உரியவர் ஆகிவிட முடியாது. பல ஆசைகளையும் துறந்தவரே இதற்குரியவர் ஆவர். நாமோ செல்வம், புகழ், புலனின்பம், இதன்பின் பற்றுக் கொண்டு உழல்கின்றோம். புலன்களுக்கு அடிமைகளாய் பல்வேறு இன்பங்களை நாடுகின்றோம். பல்வேறு பயன்கருதிப் பல செயல்களிலும் ஈடுபடுகின்றோம். இத்தகைய நிலையிலுள்ள நாம் பற்றற்ற முறையில் கடமையைச் செய்வதாகிய கர்மயோகத்தில் சிறப்பாய் ஈடுபடுவது இயலாது. பற்றுடன் செய்யும் கர்மாக்கள் இம்மையில் பல பயன்களைத் தந்தாலும், அவை காமம், குரோதம் இவற்றின் மூலம் சம்சாரத்தில் பிணித்துவிடுகின்றன. ஆதலின் பயன்கருதாது, பற்றில்லாமல் (கடமைக்காக) கடமையைச் செய்தல் தெய்வீக அருளைப் பெற சிறந்ததோர் பயிற்சியாகும். பொது மக்கள் விரைவில் பயன்தரும் செயல்களிலேயே ஈடுபடுகின்றனர். அதனால், அநாதியான கர்மாவில் சிக்குண்டு தவிப்பர். சிறந்த முறையில், கர்மயோகத்தைத் துவக்க ரஜஸ் தமஸ் என்ற குணங்களை அடக்கி, புலனடக்கமாகி சமம், தமம்

என்பவற்றை நாடவேண்டும். இவற்ருல்தான் தனிப்பட்ட ஒருவன் முன்னேறவியலும். நம் வருங்காலம் தற்போதைய கர்மாவைப் பின்பற்றியே தீர்மானிக்கப்படும். தற்போதைய நிலை முற்காலத்திய கர்மாவையே சார்ந்துள்ளது. ஆதலின், ஒருவன் மனச் சோர்வின்றி நம்பிக்கையுடன் தன்னை எப்போதும் நிமிர்த்திக் கொள்ளலாம். தன் முயற்சியால் உண்மையை யுணர்ந்து எவரும் முன்னேறலாம். இதனுல் தன் அறியாமையை விலக்கி, கடமைக்காகக் கடமையைச் செய்ய வேண்டுமென கீதை வலியுறுத்துகிறது.

நித்ய கர்மாக்கள்:- நிஷ்காம்ய கர்மம் என்பது நாம்பின்பற்ற வேண்டிய தெய்வீக ஆணையாகும். வெவ்வேறு நிலையும், மனேபாவமும் கொண்ட மக்களுக்கேற்ப கர்மயோகத்திலும் பிரிவுகளுண்டு. கீதை கர்மயோகத்தில் திரவிய யஜ்ஞும், தபோ யஜ்ஞும், ஸ்வாத்யாய யஜ்ஞும், ஜ்ஞான யஜ்ஞும் என்றெல்லாம் கர்மயோகி செய்வதற்குரிய கர்மாக்களைப் பிரித்து விளக்குகிறது. இத்தகைய கர்மயோகங்கள்-நித்யம், நைமித்திகம் போன்ற கர்மாக்களுடன் சேர்த்தே பயிலத் தக்கவை. இதனைப் பற்றி கீதாபாஷ்யத்தில் ஒவ்வொரு நாளும் செய்யவேண்டிய நித்யம், நைமித்திகம் என்ற கர்மாக்களை அனுஷ்டிப்பதால் அவை ஏற்பட்டவையென்று அறிக என்று அருளிச் செய்தார். இந்த கர்மாக்களை ஒருவன் செய்யாது விடுவானேயாயின், அது இறைவனின் ஆணைக்குக் கீழ்ப்படியாமையாகும். இதனைத் தேசிகனுர் வற்புறுத்துகையில் ஒவ்வொருவரும் நித்ய நைமித்திக கர்மாக்களைக் கட்டாயம் செய்தே தீரவேண்டும்.

இவற்றுடன் முன் குறிப்பிட்டவற்றுள் ஏதேனும் ஒரு கர்மயோகத்தைத் தன் தகுதிக்கேற்பச் செய்யலாம் என்று அருளுகிறார்.

நித்யம், நைமித்திகம் என்ற இரண்டும் ஆஜ்ஞா கர்மாக்கள் (இறைவன் ஆணையால் செய்ய வேண்டியவை) எனப்படும். இதற்கு எவரும் கீழ்ப்படிந்தே ஆகவேண்டும். அடுத்து, காம்ய கர்மாக்கள் என்பவை அனுஜ்ஞா கர்மாக்கள் (அனுமதிக்கப்பட்ட செயல்கள்) எனப்படும். நாம் அவற்றை விரும்பினால் செய்யலாம். செய்யாமலும் விடலாம். அவை இம்மைப் பயன் அல்லது நிலையற்ற பயனைத் தருபவை. இவற்றையும் பயன்கருதாது எம்பெருமானின் உகப்பிற்காகவே செய்தால், அது சிறந்தவையாகப் போற்றப்படும். இந்நிலையில் உபாஸகன், நித்ய, நைமித்திகங்களை விடாமல் கர்மயோகத்தைச் செய்யவேண்டியவனாகிறான்.

நித்தியம் என்பது ஒவ்வொரு நாளும் செய்யுமாறு விதிக்கப்பட்ட சந்தியாவந்தனம் போன்றவை. இதைப் பயன் கருதாது செய்யவேண்டும். இதைவிட்டுப் பிற கர்மாக்களைச் செய்வதால் அவற்றிற்குப் பயன்கிட்டாது. அடுத்து நைமித்திகம் என்பது அமாவாஸ்யை, சூரிய கிரஹணம், சந்திரக்கிரஹணம் முதலிய நிமித்தங்களை முன்னிட்டுச் செய்யும் கர்மாக்கள். காம்யம் என்பது ஒரு விருப்பத்தை நிறைவேற்ற வேதத்தில் விதித்த வோர் செயலைச் செய்தல். எடுத்துக்காட்டாக, மழையை விரும்புபவன் காரீரி என்ற யாகத்தைச் செய்தல், ஸ்வர்க்கத்தை வேண்டுபவன் ஜ்யோதிஷ்டோமம் என்ற

யாகத்தைச் செய்தல், புதல்வரை விரும்புபவர் புத்திர காமேஷ்டியைச் செய்தல் போல்வன.

நற்கர்மாக்களால் எம்பெருமானை அடைவதற்குத் தடையான தீய கர்மாக்களைக் கடந்து, நல்ல ஜ்ஞானத்தைப் பெற்று, நல்லதோர் தியானத்தைச் செய்து, இறுதியில் அவனையடைகின்ருன், என்பது உபநிடதங்களின் கருத்து. உபாசகன் இந்த் கர்மயோகத்தில் ஈடுபட்டுப் பாதியில் அதனைக் கைவிட்டாலும், அது வீணுவதில்லை. வேறு தீய விளைகளையும் ஆக்குவதில்லை. சிறிது தொடங்கிய கர்மயோகமும் அவனைப் பேராபத்துக்களிலிருந்து காக்கின்றது. இடையில் விட்டதால் பிற யோகங்களைப் போல எந்த அழிவையும் தருவதில்லை. ஆத்ம அனுபவத்தைத் தந்துப் பல நன்மைகளையும் பயக்கிறது. இவ்வாறு கர்மயோகம் பக்தி யோகத்துக்கும், ஆத்ம அனுபவத்திற்கும் ஜ்ஞான யோகத்திற்கும் சாதனமாய் அமைகின்றது. கர்ம யோகத்தால் தன்னையே துறந்து ஜ்ஞான யோக நிலையில் ஆத்ம சாக்ஷாத்காரம் பெறுகிருன்.

இதுவரை கூறிய கர்மயோகத்தின் சிறப்பியல்கள்

1. எம்பெருமானை யறிந்து அனுபவிக்கக் காரணமான பக்தி யோகத்திற்கு இன்றியமையாத ஆத்மாவலோகனத்தை இந்தக் கர்மயோகமே ஏற்படுத்தும் சாதனமாம்.
2. இந்த யோகம் தனக்குள் ஆத்மா பற்றிய ஜ்ஞானத்தையும் கொண்டிருப்பதால், ஜ்ஞானயோகத்தைவிடச் சிறந்தது.
3. கர்மயோகமின்றி ஜ்ஞான யோகத்தை யாரும் அடைய இயலாது.

4. இது ஜ்ஞான யோகத்தைவிட விரைவில் ஆத்மாவலோகனத்திற்குக் காரணமாய்ச் செய்வதற்கும் எளிதானது.
5. கர்மயோகம் என்பது ஜ்ஞாநாகாரமானது (ஜ்ஞானத்தை ஸ்வரூபமாகக் கொண்டது)
6. இது மூவகையான தியாகங்களையும் சார்ந்தது. 1. பற்றைத் துறத்தல் 2. கர்த்ருத்வத்தைத் துறத்தல். 3. பலனைத் துறத்தல் என்பவை மூன்று தியாகங்கள்.
7. இது ஸ்திதப்ரஜ்ஞன் என்ற நிலையை ஏற்படுத்தும்.
8. அவரவர் தகுதிக்கும், உணர்ச்சிக்குமேற்ப, யஜ்ஞம், தானம், தபஸ், ஸ்வாத்யாயம் முதலிய எந்தக் கர்மாவையும் பற்றுள்ளமின்றி பிற தம் கடமைகளுடன் தேர்ந்தெடுத்துச் செய்யலாம்.
9. இந்தக் கர்மயோகம் செய்யும் திறனுள்ள அதிகாரிகள் கிடைப்பதற்கரியவர்.
10. இது பாதியில் நின்றாலும் என்றேனும் ஒரு நாள் மறுபடியும் நிறைவேற்றப்பட்டு நோக்கத்தை நிறைவேற்றும் தன்மை கொண்டது. தீமையற்றது.

## 4.2 ஜ்ஞானயோகம் (தத்துவம்)

ஜ்ஞானம் என்ற சொல், தத்துவம் பற்றிய ஆராய்ச்சியில் பல்வேறு பொருட்களில் பயன்படுத்தப்படுகிறது. முதலில், ஐம்புலன்களால் ஒருவன் அறியும் உலகியல் அறிவை யுணர்த்துகிறது. அவை யுணர்த்தும் அறிவு மனத்தினால் உணரப்பட்டு ஜ்ஞானம் என்ற பெயரைப் பெறுகிறது. இந்த ஜ்ஞானம் ஐம்புலன்களின் உதவியால் ப்ரத்தியக்ஷம், அனுமானம், சப்தம் என்ற

ப்ரமாணங்களைக் கொண்டு உறுதிப்படுகிறது. பின் இந்த ஜ்ஞானம், ஆத்மாவைப் பற்றிய ஜ்ஞானத்தைக் குறிப்பதாகிறது. அவ்வாத்மா ப்ரக்ருதியை விட்டு விலகியது; வேறுபட்டது. அது அறிவே (ஜ்ஞானம்) வடிவமானது. அந்த ஜ்ஞானம் தர்மிபூதம் என்றும் தர்மபூதம் என்றும் இருவகைத்து. மேலும் ஒன்று பரமாத்ம ஜ்ஞானம், மற்றது மற்றைய பொருட்களைப் பற்றியது. இவற்றுள் மிகச் சிறந்தது பரமாத்ம ஜ்ஞானமே. அதனையடைய சாதனமானது ஜீவாத்மா பற்றிய ஜ்ஞானம். தன்னையே தான் உணர்ந்து அறிந்து அனுபவித்தலே கைவல்யம் என்ற ஆனந்த அனுபவம். இது பரமாத்மாவைப் பற்றி யறிதலுடன் ஒப்பிடுகையில் மிகச் சிறியதாய்த் தோன்றும். எல்லா ஜ்ஞானங்களும் பரமாத்ம ஜ்ஞானத்திற்கே சாதனங்களாகும்.

ஸ்ரீராமானுஜர் கீதாபாஷ்யத்திலே இரண்டு யோகங்களுக்குமுள்ள தன்மையையும், தொடர்பையும் கீழ்க்கண்டவாறு விளக்குகிறார்;

சாஸ்த்ரங்களால் உண்டாகும் ஆத்ம ஜ்ஞானத்துடன்-கூடிய கர்மயோகம் ஸ்தித ப்ரஜ்ஞதை எனப்படும் ஜ்ஞான நிஷ்டையை உண்டாக்குகிறது. அந்த ஜ்ஞான நிஷ்டை யோகம் என்னும் ஆத்மாவலோகனத்தை உண்டுபண்ணும். இதற்கு உரையருளிய தேசிகனார் ஜ்ஞான நிஷ்டை யென்பதே, ஜ்ஞான யோகத்தைத் தான் குறிக்கிறதென்று விளக்குகிறார். யோகம் என்ற சொல் பொதுவாக உபாயம் என்ற பொருள் தரும். ஆனால் ராமானுஜரோ இங்கு யோகம் என்பதை ஆத்மாவலோகனம்

என்று பொருள் கொள்கிறார். இப்பொருள் தேசிகனால் நன்கு நிறுவப்பட்டுள்ளது.

புலனடக்கமற்று, சஞ்சல புத்தியுள்ளவர் கர்ம யோகத்திற்குத் தகுதிவாய்ந்தவரென்றும், கலங்காத புத்தி படைத்தவரே ஜ்ஞான யோகத்திலிறங்கத் தக்கவரென்றும் கூறப்பட்டதால், ஒன்றுக்கொன்று முரண்பாடில்லை. ஆதலின், சக்தியுள்ளவர் ஜ்ஞான யோகத்திலும், அசக்தர் கர்மயோகத்திலும் இறங்கத் தகுதிவாய்ந்தவரெனப் பட்டதாகிறது. ஜ்ஞானயோகம், தற்சார்புடையதோர் உபாயமாய் இருந்து ஆத்மாவலோகனத்தை நிறைவேற்றவல்லதாகும். இவ்விரு யோகங்களும் ஆத்மாவையடைய சாதனமென்பதில் வேறுபாடில்லை. ஏதேனுமொன்றைப் பற்றியவனும் ஆத்மாவலோகன-மென்னும் பயனைப் பெறலாம். ஆனால் கர்மயோகத்தைவிட ஜ்ஞானயோகத்திற்கு மிக்க முயற்சி தேவை. காம, க்ரோதாதிகளால் தடைகளும் ஏற்படலாம். ஆதலின், திறன்படைத்தவர்களையும் ஜ்ஞான யோகத்தைவிட்டு, கர்ம யோகத்தையே செய்யுமாறு கீதை வலியுறுத்திச் சொல்கிறது. சிரமத்துடன் சாதிக்கக்கூடிய ஜ்ஞானயோகமோ, தாமதித்தே பயன்தரக் கூடியது. கீதையின் முதல் 6 அத்தியாயங்களும் கர்மயோகத்தையே வற்புறுத்துகின்றன.

ஜ்ஞானயோகம் என்பது மனத்தை வென்றவர்கள், சுத்தமான ஆத்மாவையே உறுதியாய்ப் பற்றி நிற்கும் நிலை என்பது, கீதார்த்த சங்க்ரஹம் கூறும்விளக்கம். இந்த யோகத்தைப் பயில மூன்று அம்சங்கள் தேவைப்படுவன-வென்று கீதை கூறும்:

1. சமத்துவம் அல்லது சம புத்தித்வம் அல்லது ஆன்மீய சமத்துவத்தை நன்கு பயில வேண்டும்.
2. உலகாயுத ஆசைகளை வெறுத்து பற்றில்லா நிலையெய்தல்.
3. எதிரேதிர் இரட்டைகளான வெற்றி தோல்விகள்.

சுகதுக்கங்கள், தட்பவெப்பநிலை, புகழ்ச்சியும் இகழ்ச்சியும், இவற்றையெல்லாம் வென்று தேஹாத்மாபிமானமின்றி நிற்றல் (உடலே ஆன்மா என்ற மயக்கமின்றி) கர்மயோகம் செய்தவன் கர்மவாஸனைகளையெல்லாம் இழந்து, ஆன்மீய சமத்தன்மையை உணர்கிறுன். இந்த ஜ்ஞானயோகத்தில் ஈடுபடுபவன் முதலில் (1) தக்க வசதிகளுள்ளதோர் இடத்தைத் தேர்ந்தெடுத்துக் கொள்ளவேண்டும். (2) மனத்தை ஒருமித்ததாக்க வேண்டும். (3) எம்பெருமானிடமே மனதை ஒருமைப் படுத்தி நிலைபெறச் செய்யவேண்டுமென்று கீதை வற்புறுத்திகிறது.

இவ்வாறு புருஷோத்தமன் எனப்படும் சுபாச்ரயனை பரமாத்மாவிடம் மனதைச் செலுத்தி, ஒருமைப்பட்டு, அவன் ஸ்பர்சத்தால் தூய்மையடைந்த மனமுடையவனுய் அவனிடம் அமைந்துள்ள சாந்தியை அடைகிறுன். தகுந்த இடம், ஆஸனங்களையமைத்தல் தொடங்கி, பரமாத்மாவைச் சிந்தித்திருத்தல்வரை எல்லாமே யோகத்தின் சாதனங்களே.

சாந்தமான மனதுடன், பரமாத்மாவிடம் சலியாத உறுதியான மனதுடன் இருப்பதாலேயே பழவினைகளெல்லாம் ஒழியப்பெற்று, ரஜோ குணமும் கழிந்து, ப்ரஹ்ம ஸ்வரூபமாய்த் திகழும் இந்த ஜ்ஞானயோக நிஷ்டனை ஆத்மானுபவம் என்ற உயர்ந்த இன்பம் தானே

வந்தடைகிறது. இந்த ஜ்ஞானியானவன், அளவிடற்கரிய ப்ரஹ்மானந்தானுபவத்தை எளிதில் முயற்சியின்றியே சுகமாய்த் துய்க்கிறான். என்றிவ்வாறு யோகமஹிமையால் ஏற்படும் இன்பம், ஆத்மானுபவ ரூபமாயும், ஆத்ம சாக்ஷாத்காரத்திற்குப் பின் தன்னிகரற்ற தன்மை பெற்றும், நீங்காததாயும், முயற்சியின்றியே கிட்டுவதாயும் கூறப்படுகிறது. எல்லா ஆத்மாக்களுக்கும் தனக்கும் வேறுபாடின்றி அவன் காண்கிறான். ஒரு ஆத்மாவைப் போலவே மற்றெல்லா ஆத்மாக்களும் ஜ்ஞானமே வடிவமாய் சமமானவையாகக் காண்கிறான் என்பது பொருள்.

இப்படி எல்லா ஆத்மாக்களையும் சமமாகக் கண்டவன், தேவர், மனிதன், விலங்கு, தாவரம் என்ற வேறுபாடுகளுக்குக் காரணமான புண்யம், பாவம் என்ற கர்மாக்களை உதறித் தள்ளுவதால், பரமாத்மாவுடன் நெருங்கிய சமநிலையை (பரம சாம்யம்) உணர்வான். அவ்வாறு எல்லா ஆத்மாக்களும் கர்மசம்பந்தத்தை உதறியவுடன் பரமாத்மாவிற்கு நிகராகவே அவனுக்குத் தோன்றும். இவ்விதம் எல்லா ஆத்மாக்களிலும் என்னையும் கண்டு, உபாஸிப்பவன் என்னிடமே நிலை பெற்றவனாகிறான் என்று கண்ணன் அருளிச் செய்கிறான். எல்லா ஆத்மாக்களுமே ப்ரஹ்மத்தை விட்டால் இல்லை என்ற நிலை பற்றி ஒன்று என்று கூறப்படுகின்றன இந்த ஜீவாத்ம யோக நிஷ்டையிலுள்ளவன் தன்னைப் போலவே எல்லா ஆத்மாக்களுமே ஒரே ஜ்ஞானவடிவம் பெற்றவையாதலின் சிறிதும் வேறுபாடு அற்றவையென்று உணர்கிறான்.

அதனால் ஆத்ம ஜ்ஞானத்தின் நுட்பத்தைப் பெற்றவனாகிறான். அதன்மூலம் ப்ரக்ருதியால் ஏற்படும் விளைவுகளைத் தனக்குரியனவல்லவென்று ஒதுக்கித் தள்ளுகிறான். ஆத்மா என்பது ஜ்ஞானமும், ஆனந்தமுமே வடிவமாய்க் கொண்டது. ஜ்ஞானானந்தமயஸ்து ஆத்மா என உறுதி பூண்டவனாகிறான். தனக்கோ, பிறர்க்கோ புதல்வர்ப் பேறு போன்ற இன்பங்களையும், உறவினரின் மரணம் போன்ற துயரத்தையும் பற்றற்ற தன்மையால் சமமாகவே அவன் நோக்குவான். மகிழ்வதோ வருந்துவதோ இல்லை; எல்லாவற்றையும் சமமாகவே பாவிப்பான்.

இத்தகைய ஜ்ஞானயோகத்தின் நிலைகள் கீழே தொகுத்துத் தரப்படுகின்றன.

1. ஜ்ஞானயோகம், கர்மயோகத்தை அடிப்படையாகக் கொண்டது.
2. இது ஆத்மாவின் தன்மைபற்றி எல்லையற்ற- முடிவற்ற - தியானத்தைச் சிறப்பாகக் கொண்டது.
3. இது பற்றற்ற கர்மானுஷ்டானங்களுடன் நெருங்கிய நிலையான தொடர்புற்றது.
4. இது யோக சம்பந்தமான உள் திருப்பங்களை அடிப்படையாகக் கொள்வது.
5. ஜ்ஞானயோகீ, தன் ஆத்மாவினது தன்மையை உணர்ந்தவாறே, எல்லா ஆத்மாக்களும் ஒன்றோடொன்று சமம் என்றும், அவை பரமாத்மாவுடன் சமம் என்றும் உணர்வான்.
6. ஆத்மானுபவத்தால் மட்டும் திருப்திப்படும் உபாஸகன் கேவலீ எனப்படுவான்.

7. பெறும் ஆத்மானுபவம் மட்டும் போதிய சிறந்த பயனாகாது. பரமாத்மானுபவத்தோடு ஒப்பிடுகின்ற வேளையில் இந்தக் கைவல்யம் என்பது மிகச் சிறிய அணு போன்றதாம்.
8. இந்த ஆத்மஜ்ஞானி தான் எம்பெருமானின் அடிமை செய்தே, எக்காலத்தும் பேரின்பம் பெற நினைப்பவன். தன் ஸ்வரூபமே அவனுக்கு சேஷமாய் (அடிமை) நிற்றல் தான் என்பதை எண்ணி அவனுடன் ஒழிவில் காலமெல்லாம் உடனுறைந்து பணி செய்தே கிடக்கப் பரிவு கொண்டு அதற்கான முயற்சிகளிலே ஈடுபடுவான்.

## 4.3 பக்தியோகம் (தத்துவம்)

விசிஷ்டாத்வைத சித்தாந்தப்படி ஸம்ஸாரத்திலிருந்து விடுதலை பெற கர்மயோகமும் ஜ்ஞானயோகமும் எவ்வாறு உபாயமாகின்றன என்பது பற்றி முன் கூறப்பட்டது. அவை ஆத்மானுபவம், ஆத்ம தர்சனம் இவற்றிற்கும் சாதனமானவை யென்றும் காட்டப்பட்டது. இவற்றை யடிப்படையாகக் கொண்டே பக்தியோகம் நிலைபெறுகின்றது. ஆன்மீய நிறைவுக்கு பக்தியோகமும், தியானம் அல்லது உபாஸனமும் வழிகளாகும். பரமாத்மாவை உபாஸிப்பதே அவனையடைய நேரான உபாயமாகும். ஆத்மா பற்றிய அறிவும், கர்மானுஷ்டானமும் அவனையடைய மறைமுகமாக உபாயமாகின்றன.

பக்தி என்பது பழைய வேத நூல்கள் காட்டும் உயர்ந்ததோர் உபாயமாகும். அன்பு என்பது இருவரையும் இணைக்கும் ஓர் பாலம். அவ்வகையில், பக்தி என்னும்

அன்பும் எம்பெருமானையும், அவனடியாரையும் ஒருங்கிணைக்கிறது. வேத மந்திரங்கள் எம்பெருமானை ஆழ்ந்த பக்தியுடன் வழிபடவும், பெருமதிப்பைப் போற்றவும் போதிக்கின்றன. ரிக்வேதம் இந்திரனைப் புகழுமிடத்தில் இவ்வாறு பல கருத்துக்களை விளக்கக் காணலாம். எம்பெருமானை மனிதனுக்குத் தந்தையாகவும், தாயாகவும், சகோதரனுகவும், மற்றுமெல்லாமாகவும் வேதமும் புகழ்ந்து பாடுகிறது. ரிக்வேத ஸம்ஹிதை முழுவதும் எம்பெருமானைப் பக்தியினுல் பாடியும், புகழ்ந்தும் வழிபடும் முறையை உபாஸகனுக்குரிய சிறந்த தினசரிக் கடமையாகவே சிறப்பாக வர்ணிக்கிறது.

வேதத்திற்குப் பிறகு உபநிஷத்துகள் எம்பெருமானைத் தியானித்து பக்தியை கைக்கொள்வது பற்றிச் சிறப்பித்து வர்ணிக்கின்றன. ப்ராஹ்மணங்கள் என்ற பகுதிகளும், கர்ம மார்க்கங்களைக் காட்டி அவற்றுல் பரப்ரஹ்மத்தை வழிபடும் வகைகளைக் காட்டுகின்றன. இவ்விதம் பக்தி மார்க்கம் துவங்கியது. இது இறைவனிடம் இடையருத ஆழ்ந்த அன்பை, நெருங்கிய தொடர்பை ஏற்படுத்துகிறது. இது முக்திக்குச் சிறந்த சாதனமாகிறது. இதிஹாஸங்களும், புராணங்களும் பக்தி தத்துவத்தைச் சிறப்பாகப் பரப்பத் தொடங்கின.

ஆழ்வார்கள் தம் தெய்வீகமான பிரபந்தங்களின் ஸம்ஸாரப்பற்றை ஒழிக்கச் சிறந்த பக்தி மார்க்கத்தை மிக அழகாகக்காட்டி நிறுவினர். அவர்கள் எம்பெருமானின் ஆழமான பக்தியில் ஆழங்கால்பட்டுத் திளைத்தனர். அதனுல்தான் அன்னவர் ஆழ்வார்கள் எனப்பட்டனர். அவர்களின் பக்திப் பனுவல்களில் ஒவ்வொரு சொல்லுமே

அவர்களின் உள்ளக் கிடக்கையை வெளிப்படுத்துவதுடன் தெய்வீக உணர்ச்சியைத் தட்டியெழுப்புகின்றது. யாராலும் கட்டுப்படுத்த முடியாத தனிப்பெரும் சக்தியும், அபாரமான கருணையும், வாத்ஸல்யமும் இந்த அமரத்வம் வாய்ந்த ஈரச் சொற்களாலே விளக்கப்படுகின்றன, இந்த ஆழ்வார்களின் பிரபந்தங்களால் பக்தியின் பல நிலைகளும் பற்றி மிக இனிமையாக நம்மால் அறியவும் துய்க்கவும் இயலுகிறது. யாமுனாசார்யர் போன்ற மஹான்கள், எம்பெருமானிடம் சலனமற்ற நிரந்தரமான பக்தியையே பெரும்பயனாகவும் வேண்டுகின்றார். அவர் தம் கீதார்த்த சங்க்ரஹம் என்ற நூலில் எம்பெருமானைப் பற்றி.

ஸ்வதர்மம், ஜ்ஞானம், வைராக்யம் இவற்றால் நிறைவேறும் பக்தியால் மட்டும் புலப்படக்கூடிய பரப்ரஹ்மமான நாராயணனே. இந்த கீதையில் சிறப்பாக விளக்கப்படுகிறான் என்று முதல் ச்லோகத்திலே விளக்குகிறார். இவரைப் பின்பற்றிய இராமானுஜர் போன்ற எல்லா ஆசார்யர்களும், வடநாட்டிலும், தென்நாட்டிலும் தன் நிகரில்லாத பக்தி முறையைச் சிறப்பித்துத் தம் நூல்களில் விளக்கியுள்ளனர். அந்த பக்தி நிலை, ராமானுஜசார்யருக்குப் பிற்பாடும் மிகவும் சிறப்பான இடத்தை யடைந்தது. பிறகு அவரைப் பின்பற்றியவர்களுள் பிரதானமான வேதாந்த தேசிகனார் அவர்தம் கருத்துக்களை நன்குணர்ந்து சிறப்பாக விளக்கியருளினார். இவர் நூல்களில் சிறப்பாக கீதாபாஷ்யத்தின் உரையான தாத்பர்ய சந்த்ரிகையில் மிகவும் விளக்கமாக பக்தியோகம் காட்டப்படுகிறது. தேசிகனார் நிறுவிய ப்ரபத்தி

மார்க்கத்தைவிட பக்தி மார்க்கத்திற்கும் அவர் குறைவான மதிப்பைத் தரவில்லை. இந்திய தத்துவங்களில் பக்தி மார்க்கத்திற்குள்ள நெறி சிறப்பாக விசிஷ்டாத்வைத சித்தாந்தத்தில் பரிமளித்ததை நன்கு காண்கிறோம். அத்வைதத்திலோ பக்திக்கு இடமில்லை. வாக்ய ஜ்ஞானத்தாலே முக்தி என்பதே யவர்களின் கோட்பாடு. குணமும், உருவமும் அற்ற ப்ரஹ்மத்திடம் பக்தி செய்ய அந்த சித்தாந்தத்தில் இடமே யில்லையென்பது குறிப்பிடத்தக்கது. எல்லாம் ப்ரஹ்ம மயம் தானே அத்வைதத்தில். அதில் யாரை வணங்குவது? யாரிடம் யார் பக்தி செய்வது?

சர்வேச்வரனுய், புருஷோத்தமனுய் அனைத்து உலகிற்கும் வேறுபாடு கருதாத முறையில் சரண்யனுயுள்ள என்னிடம் எண்ணெய் ஊற்றுப்போல (தைலதாரை) இடைவிடாமல் உள்ளத்தைச் செலுத்தி நிற்பாயாக என்று அர்ஜுனனிடம் கண்ணன் பக்தியை வற்புறுத்துகின்றுன். (வே) ப்ருஹதாரண்யகோபநிஷத் - எம்பெருமான் எப்போதும் த்யானம் செய்யத்தக்கவன் என்றும், முண்டகோபநிஷத் அதே ஆத்மாவை த்யானியுங்கள் என்றும், சாந்தோக்ய உபநிஷத் அசஞ்சலமான ஸ்மரணம் வேண்டுமென்றும், ப்ரஹ்மஸூத்ரத்தில் நான்காமத்தியா-யத்தில், முதல் பாதம், முதல் சூத்திரத்தில் அடிக்கடி த்யானம் செய்யவேண்டும் என்றும், எம்பெருமானின் ஸ்வரூபம், ரூபம் குணங்கள் அடிக்கடி தியானிக்கத் தக்கவையாக வற்புறுத்தப்படுகிறது. உபாஸகன், எம்பெருமானிடம் தன் மனத்தை இடையீடின்றி நிறுவி பக்தி செலுத்தவேண்டும்

என்று கீதை கூறும் கருத்தினையொட்டியே, பக்தியின் சிறப்பம்சத்தை இராமானுஜர் கூறும்போது.

மிகவும் எனக்குப் பிரியமான பக்தன் என்ற தன்மையுடன் என்னையே நினைத்திரு; எல்லையற்ற ப்ரியம் கொண்ட எனது அனுபவத்தால் செய்விக்கப்படும் என் பூஜையாகிற யாகத்தில் ஈடுபடு; யாகமாவது பரிபூர்ணமான பகவத் கைங்கர்யம்: இவ்வாறு உடலைக் காப்பதற்கான லௌகிகச் செயல்களையும், வேதத்தில் விதிக்கப்பட்ட நித்திய நைமித்திக கர்மாக்களையும், என் பிரியத்திற்காக, என் கைங்கர்யத்திலேயே (பணியில்) சுவைகொண்ட நீ, என்னுலேயே அவை செய்விக்கப்படுகின்றன என்று எண்ணி, எப்போதும் என்னையே பாடுவதும், வணங்குவதும் எனக்காகவே முயல்வதுமாகச் செயல்களை அன்புடன் செய்பவனுய், எனக்குக் கீழ்ப்படிந்துள்ள உலகம் முழுவதுமே என் பணியையே மிக விரும்புவது என்று எண்ணி, மிக மிகப் பிரியமான என் கல்யாண குணங்களையே தியானிப்பவனுய், ஒவ்வோர் நாளும் நான் குறிப்பிட்ட வகையிலான உபாஸனத்தைச் செய்து இறுதியில் என்னையே அடைவாய் என்று கீதையில் கருத்தை விளக்குகிறுர்.

இவ்வாறு பக்தியோகத்தில் அனுஷ்டான முறை, வளர்ச்சி, அதன் பயன்யாவும் சுருக்கி விளக்கப்பட்டன. இந்த பக்தியோகம், கர்மயோகத்தையும், ஜ்ஞானயோகத்தையும்விட மேலானது. அவ்விரண்டும், ஆத்மாவலோகனத்தைப் பயனுகக் கொண்டவை. பக்தியோகம் தெய்வீகமான கருணையைப் பெறவைப்பது.

இந்த பக்தியோகம், நேருக்கு நேரான எம்பெருமானைப் பிரத்யக்ஷமாகக் காட்டவல்லதாதலின், செய்வதற்கு எளியதும், இன்பம் பயப்பதும், அழிவற்றதுமாகும் என்று கண்ணனே யருளுகிறான்.

பக்தி என்பது பெரியோர்கள்பால் நட்புடன் தியானித்தல் என்று நாரத சூத்திரம், சாண்டில்ய சூத்ரம் முதலியன விளக்குகின்றன. இராமானுஜரோ இதனை விளக்குகையில் நினைவின் பரம்பரையாய் (தொடர்ச்சியாய்) நேரில் காண்பதற்கு சமமான தோற்றமுள்ளதாய், த்யானம், உபாஸனம் என்ற சொற்களால் குறிப்பிடப்படுவதே பக்தி என்று குறிப்பிடுகிறார்.

அந்த எம்பெருமானை ஒருமித்த பக்தி ஒன்றால்தான் அடையமுடியும், அவனையடைய வேறுவழியில்லையென்று புருஷஸூக்தத்திலும், (வே) நான் வேதங்களாலோ (ஜ்ஞானத்தாலே) தபஸ்ஸாலோ தானத்தாலோ,யாகத்தாலோ (பூஜையாலோ) அடையக்கூடியவனல்லன்; அர்ஜுனு மற்றவிடங்களில் மனத்தைச் செலுத்தாமல் என்னிடமே செய்யும் பக்தியொன்றாலேயே உன்னைப் போல், மற்றவர்களாலும் அடையத்தக்கவன் என்று கீதையிலும் விளக்கக் காண்கிறோம். ஆகவே, கர்மயோகத்தையும், ஜ்ஞானயோகத்தையும் விட பக்தியோகமே சாலவும் சிறந்ததெனப்பட்டது. பக்தியென்ற ரூபத்தைப் பெற்ற உபாஸனம், ஞானம், த்யானம் முதலிய சொற்களால் வழங்கப்படுவதாய் மரணம்வரை தினமும் தொடர்ந்து செய்யப்படும் ஓர் ஜ்ஞான விசேஷம் என்று தேசிகனால் விளக்கப்படுகிறது. பக்தி என்பது ஓர் செயலா, ஜ்ஞானமா

என்று விவாதிக்கப்பட்டு, செயல் என்றால் பல குறைகள் வருவதனால், ஜ்ஞான ரூபமே யென்று முடிவு செய்யப்பட்டது. இந்த பக்தியை-வாக்யகாரர் என்பவரின் சொற்றொடரை மேற்கோள்காட்டி ஸ்ரீபாஷ்யத்திலே எவ்வெவற்றால் தோன்றுவதென்று விளக்குகிறார். ஸாதன ஸப்தகம் எனப்படும் ஏழு சாதனங்களைக் கொண்டே பக்தி தோன்றும் என விளக்கப்படுகிறது. அவையாவன:- விவேகம், விமோகம், அப்யாஸம், க்ரியை, கல்யாணம், அனவஸாதம், அனுத்தர்ஷம் என்பன.

1. விவேகம் என்ற பகுத்தறிவு முதற்காரணம். அது தோன்ற உடலின் தூய்மை எனப்படும் காய சுத்தி வேண்டும். இதுவே மனத்தூய்மைக்குக் காரணமாகும். ஒருவன் உட்கொள்ளும் உணவு முதலில் தூய்மையுடையதாயிருக்க வேண்டும். அது மூன்று வகை தோஷங்களும் அற்றதாக இருக்கவேண்டும். ஜாதி, ஆச்ரயம், நிமித்தம் என்ற மூன்றாலும் தோஷம் அற்றதாய் வேண்டும். 1. பூண்டு, வெங்காயம், போன்றவை ஜாதியால் (இனத்தால்) தோஷமுள்ளவை
2. ஆச்ரயதோஷம், என்பது நாஸ்திகர், சபிக்கப்பட்ட தீய மக்களால் அளிக்கப்பட்டவை. 3. நிமித்ததோஷம் என்பது புழு, கேசம், ரோமம், நகம் முதலிய பட்டதால் அசுத்தமான உணவு. நாம் உட்கொள்ளும் உணவே மனத்தின் தூய்மைக்கும், தீமைக்கும் காரணமாதலின், பக்தியோகத்தில் ஈடுபடுபவர், தூய உணவையேயுட் கொள்ளவேண்டு மென்று விதிக்கப்படுகிறது. இதுவே விவேகம் எனப்படும். 2. விமோகம் என்பது, காம க்ரோதங்களிலிருந்து விடுபட்ட நிலை. தெய்வீக

அனுபவத்தைப் பெற இதுவும் இன்றியமையாதது. பரப்ரஹ்மத்தைத் தியானிப்பதற்கு ஐம்புலன் அடக்கம் மிகவும் வேண்டற்பாலது. காம க்ரோதங்களை வென்ற உபாஸகனே மனதில் சாந்தியைப் பெறவும் இயலும்.

3. அப்யாஸம் என்பது எம்பெருமானிடமே மனத்தை ஒருமித்து நிலைநாட்ட மறுபடியும், மறுபடியும் பயிற்சி செய்தலான த்ருவானுஸ்ம்ருதி எனப்படும் தியானயோகம். இது வேதங்களில் விதிக்கப்பட்டவாறு குறிப்பிட்ட காலத்திலும், இடத்திலும் தினமும், விடாமல் பயிலத் தக்கது. இது தியானத்தின்போது உறுதியான நிலையை எய்வதற்கு ஓர் முன்னேற்பாடான பயிற்சியேயாகும். ஆதலின், வேத விதிப்படி ஒருவன் எப்போதும் தியானித்துக்கொண்டே யிருப்பதால் ப்ரஹ்மத்திடம் ஸ்தித ப்ரஜ்ஞையப் பயன் பெறலாம்.

4. க்ரியா என்பது பஞ்சமஹாயஜ்ஞம் எனப்படுவதாம். இது மனதைத் தூயதாக்கவல்லது. (வே) ப்ருஹதாரண்யகம் அந்தப் ப்ரஹ்மத்தை ப்ராஹ்மணர்கள் வேதமோதுவதாலும், யஜ்ஞத்தாலும், தானத்தாலும், தீங்கற்ற தபஸ்ஸாலும் அறியமுற்படுகிறார்கள் என்று சாற்றுகிறது. இதேபோல் பஞ்சமஹாயஜ்ஞங்களின் அவசியத்தன்மையைப் பற்றி ஸ்ரீபாஷ்யம் வற்புறுத்துகிறது.

5. கல்யாணம் என்பது நற்குணங்களையே பயில்வது. வெளித் தூய்மையை விட அகத்தூய்மையே மிகவும் முக்கியமானது. அகத் தூய்மையின்றி உடல் தூய்மை மட்டும் பயன்தராது. இராமானுச முனிவர் கல்யாண குணங்களை வளர்த்துக் கொள்ள ஆறு தகுதிகளைக்

காட்டுகிறார். 1. ஸத்யம், 2. நேர்மை, 3. இரக்கம், 4. கொடை, 5. அஹிம்சை, 6. பிறர்பொருளைத் தனதாக எண்ணுதல் அல்லது வீணான சிந்தனை, அல்லது பிறர் செய்த தீமையைச் சிந்தித்தல் என்ற இவையில்லாமை அநபித்யை என்பது.

6. அனவஸாதம் என்பது இடமும் காலமும் மாறுபாடுவதால், துயரங்களை நினைத்து ஏற்படும் மனவேதனையும், சோர்வும் இல்லாமை, உபநிஷத்துக்கள் பலவீனமான இதயம் படைத்தவன் எம்பெருமானையடைய முடியாதென்று கூறுகின்றன.(வே)

7. அனுத்தர்ஷம் என்பது பெரும் மகிழ்ச்சியை - கோலாஹலத்தைத் தவிர்ப்பது. இதுவும் பக்தியின் சாதனமாகும். அளவு கடந்த துயரத்திலாழ்வதோ, மகிழ்ச்சியிலாழ்வதோ ஓர் வீழ்ச்சிக்கே காரணமாகும். உபாஸகன் இந்நிலையிலிருந்து தப்பிக்கவேண்டும். ஆக இந்த ஸாதனங்கள் ஏழையும் கொண்டே பக்தியோகத்தை வளர்க்க முடியும் என்றார்.

இங்கு தேசிகனார் பக்திக்கு நான்கு செய்திகளைச் சாதனமாக காட்டுகிறார். விவேகம், நிர்வேதம், விரக்தி, பீதி என்பவையேயவை.அவற்றில் விவேகம் உபாசகனை அஹங்காரம் முதலிய அபாயங்களிலிருந்து காக்கிறது. நிர்வேதம் என்பது அவன் தீய பாவச் செயல்கள் செய்ய நேரிட்டால், அவற்றிற்காக மனம் வருந்துவதன் மூலம் மறுபடி அச்செயல்களில் ஈடுபடாமல் தூய்மைப் படுத்துகிறது. பழைய தீவினைகள், பாவச் செயல்களுக்குக் கழிவிரக்கம் கொள்வது ஒவ்வொரு உபாஸகனையும்

அனுபவத்தைப் பெற இதுவும் இன்றியமையாதது. பரப்ரஹ்மத்தைத் தியானிப்பதற்கு ஐம்புலன் அடக்கம் மிகவும் வேண்டற்பாலது. காம க்ரோதங்களை வென்ற உபாஸகனே மனதில் சாந்தியைப் பெறவும் இயலும்.

3. அப்யாஸம் என்பது எம்பெருமானிடமே மனத்தை ஒருமித்து நிலைநாட்ட மறுபடியும், மறுபடியும் பயிற்சி செய்தலான த்ருவானுஸ்ம்ருதி எனப்படும் தியானயோகம். இது வேதங்களில் விதிக்கப்பட்டவாறு குறிப்பிட்ட காலத்திலும், இடத்திலும் தினமும், விடாமல் பயிலத் தக்கது. இது தியானத்தின்போது உறுதியான நிலையை எய்வதற்கு ஓர் முன்னேற்பாடான பயிற்சியேயாகும். ஆதலின், வேத விதிப்படி ஒருவன் எப்போதும் தியானித்துக்கொண்டே யிருப்பதால் ப்ரஹ்மத்திடம் ஸ்தித ப்ரஜ்ஞுயைப் பயன் பெறலாம்.

4. க்ரியா என்பது பஞ்சமஹாயஜ்ஞம் எனப்படுவதாம். இது மனதைத் தூயதாக்கவல்லது. (வே) ப்ருஹதாரண்யகம் அந்தப் ப்ரஹ்மத்தை ப்ராஹ்மணர்கள் வேதமோதுவதாலும், யஜ்ஞத்தாலும், தானத்தாலும், தீங்கற்ற தபஸ்ஸாலும் அறியமுற்படுகிறுர்கள் என்று சாற்றுகிறது. இதேபோல் பஞ்சமஹாயஜ்ஞங்களின் அவசியத்தன்மையைப் பற்றி ஸ்ரீபாஷ்யம் வற்புறுத்துகிறது.

5. கல்யாணம் என்பது நற்குணங்களையே பயில்வது. வெளித் தூய்மையை விட அகத்தூய்மையே மிகவும் முக்கியமானது. அகத் தூய்மையின்றி உடல் தூய்மை மட்டும் பயன்தராது. இராமானுச முனிவர் கல்யாண குணங்களை வளர்த்துக் கொள்ள ஆறு தகுதிகளைக்

காட்டுகிறார். 1. ஸத்யம், 2. நேர்மை, 3 இரக்கம், 4. கொடை, 5. அஹிம்சை, 6. பிறர்பொருளைத் தனதாக எண்ணுதல் அல்லது வீணான சிந்தனை, அல்லது பிறர் செய்த தீமையைச் சிந்தித்தல் என்ற இவையில்லாமை அநபித்யை என்பது.

6. அனவஸாதம் என்பது இடமும் காலமும் மாறுபாடுவதால், துயரங்களை நினைத்து ஏற்படும் மனவேதனையும், சோர்வும் இல்லாமை, உபநிஷத்துக்கள் பலவீனமான இதயம் படைத்தவன் எம்பெருமானையடைய முடியாதென்று கூறுகின்றன.(வே)

7. அனுத்தர்ஷம் என்பது பெரும் மகிழ்ச்சியை - கோலாஹலத்தைத் தவிர்ப்பது. இதுவும் பக்தியின் சாதனமாகும். அளவு கடந்த துயரத்திலாழ்வதோ, மகிழ்ச்சியிலாழ்வதோ ஓர் வீழ்ச்சிக்கே காரணமாகும். உபாஸகன் இந்நிலையிலிருந்து தப்பிக்கவேண்டும். ஆக இந்த ஸாதனங்கள் ஏழையும் கொண்டே பக்தியோகத்தை வளர்க்க முடியும் என்றார்.

இங்கு தேசிகனார் பக்திக்கு நான்கு செய்திகளைச் சாதனமாக காட்டுகிறார். விவேகம், நிர்வேதம், விரக்தி, பீதி என்பவையேயவை.அவற்றில் விவேகம் உபாசகனை அஹங்காரம் முதலிய அபாயங்களிலிருந்து காக்கிறது. நிர்வேதம் என்பது அவன் தீய பாவச் செயல்கள் செய்ய நேரிட்டால், அவற்றிற்காக மனம் வருந்துவதன் மூலம் மறுபடி அச்செயல்களில் ஈடுபடாமல் தூய்மைப் படுத்துகிறது. பழைய தீவினைகள், பாவச் செயல்களுக்குக் கழிவிரக்கம் கொள்வது ஒவ்வொரு உபாஸகனையும்

தூயவனுக்கவல்லது. அடுத்து, விரக்தி என்ற பற்றின்மையால் உபாஸகன், தன்னைக் கட்டுப்படுத்தும் காம்ய கர்மாக்களில் ஈடுபடாமல் விலக்கிக் காக்கப்படுகிறான். இந்த மூன்று கட்டுப்பாடுகளைத் தவிர உபாஸகனுக்கு பயம் என்ற நான்காவது சாதனமும் மிகவும் பயன் தருவதாகும். பயமாவது அவன் எதிர்காலம் பற்றி அஞ்சுவது. ஆன்மாவிற்கே கேடு விளைவிக்கக்கூடிய பாவச் செயல்களில் வருங்காலத்தில் சிக்காமல் தப்ப வேண்டுமேயென்று அச்சம் ஒருவனைக் கவனத்துடன் நேர்வழிச் செலுத்துவதால், அவ்வச்சமும் பக்திக்குச் சிறந்த சாதனமாகக் கருதப்படுகிறது.

பக்தியோகத்தை வளர்க்க மூன்றுஅடிப்படை அங்கங்கள் தேவை:

1. எம்பெருமானின் உண்மையான ஸ்வரூபத்தையுள்ளபடி அறிவதுடன், தனித்தனி ஆத்மாக்களின் ஸ்வரூபத்தையும், கருணைமிக்க ஆசார்யர்கள் வாயிலாகவும், புனிதமான வேதம் முதலிய நூல்கள் வாயிலாகவும் அறிந்து கொள்ளல்.
2. மனத்தைத் தூய்மைப்படுத்தி ஆத்ம குணங்களையும் வளர்த்துக் கொள்ளல் மூலம் எப்போதும் இடைவிடாமல் மனத்தை எம்பெருமானிடமே செலுத்த முயற்சி மேற்கொள்ளல்.
3. நம்மைக் காக்கும் எம்பெருமானின் கருணைமீது ஆழ்ந்த நம்பிக்கை கொள்ளல். இதன்மூலம் ஒருவரது பக்தி வாழ்க்கையை நிறைவுற்றதாக்கி வளர்த்துக் கொள்ளக்கூடும்.

**விசிஷ்டாத்வைத தத்வப்படி பரபக்தியை வளர்க்கும் வழிவகைகள்:**

1. ஸாத்விகர்களான பெரியோர்களுடன் பழகுதலாலும் வேதாதிகளை ஓதுவதாலும் எம்பெருமானிடம் ஓர் ஸாமான்ய பக்தி தோன்றும்.
2. பற்றற்ற முறையில் செயல்களையாற்றல், அவற்றின் பயன்களையன்புடன் எம்பெருமானிடம் சமர்ப்பித்தல், இவ்வாறு கர்மயோகத்தை யனுட்டித்தல்.
3. அவனருளால் தன் ஆத்மாவைத் தானறிதல் எனும் ஆத்மாவலோகனம்.
4. தன் ஸ்வரூபம் எம்பெருமானுக்கு எக்காலத்தும் சேஷமாய் அடிமையாகவேயுள்ளது என்று உணர்தல்.
5. வாழ்க்கையின் சிறந்த குறிக்கோள் நிறைவேறுவதென்பது எம்பெருமானுடன் நெருக்கமாகச் சேர்தல் என்ற உண்மையைப் புரிந்து கொள்ளல்.
6. எம்பெருமானை (சேஷியை) நேரில் கண்டுகளிக்க வேண்டுமென்ற பேரவாக்கொள்ளல். இம்மாதிரி ஸாமான்ய பக்தி வளர்ச்சி பெற்று பரபக்தி ஆகின்றது. இதுவே முக்திக்கு நேரான காரணமாகும். இந்நிலையறியாமல் எம்பெருமானிடம் மனதை வைக்காமல், அவனை ப்ராபகம் (சாதனமானவன்) என்றும், அக்ஷரம் எனப்படும் பரமாத்ம ஸ்வரூபமே ப்ராப்யம் (அடையப்பட வேண்டியது) என்றும் எண்ணி உபாஸிப்பவர்கள் மிக்க கிலேசத்தைப்பெறுவர் என்று கீதாசார்யன் அருளுகிறுர். ஜீவாத்மாவை

சாக்ஷாத்கரித்தால் என்மீது பரபக்தி தோன்றும் என்றும் குறிப்பிடுகிறார்.

## நால்வகை பக்தர்கள்

கண்ணன் அருளுகிறான் ஏ பார்த்தா! நால்வகை பக்தர்கள் என்னை வந்தடைகின்றனர். ஆர்த்தர், ஜிஜ்ஞாஸு, அர்த்தார்த்தீ, ஜ்ஞானீ என்பவரே அந்த நால்வர். ஆர்த்தர் என்பவர் இழந்த செல்வத்தைத் திரும்பவும் அடைய விரும்புபவர். அர்த்தார்த்தீ என்பவர் புதிய செல்வத்தை அடைய விரும்புபவர். ஜிஜ்ஞாஸு என்பவர் ப்ரக்ருதி ஸம்பந்தமற்ற தனித்த தன் ஆத்மாவைப் பற்றியறிய விரும்புபவர். ஜ்ஞானீ என்பவர் எம்பெருமானை யுணர்ந்து அவரையடையவே விரும்பி நிற்பவர். ஜ்ஞானமே ஆத்மாவின் ஸ்வரூபம் என்று ப்ரக்ருதியை விட்டுத் தனியே யுணர முயல்பவனை ஜிஜ்ஞாஸு என்றார். சுத்தமான ஆத்ம ஸ்வரூபத்தை யறிய விரும்புபவன் என்றதாகிறது.இந்நால்வருமேஎன்னை உபாஸிப்பவர்களாதலால் சிறந்த கொடைவள்ளல்கள். எவர் என்னிடம் சிறிதேனும் அன்பைச்செய்கிறார்களோ அவர்கள் எனக்கு எல்லாவற்றையும் அளிப்பவர்கள். ஆயினும், இந்த நால்வருள்ளும் ஜ்ஞானியே, மிகச் சிறப்புடையவர். ஏனெனில், என்னையே யடைய விரும்பும் ஜ்ஞானிக்கு என்னுடன் தொடர்பு நித்தியமானது. ஆர்த்தனுக்கும், ஜிஜ்ஞாஸுக்கும் தத்தம் விருப்பம் நிறைவேறும் வரையே என்னுடன் தொடர்பு. ஜ்ஞானி என் ஒருவனிடம் மட்டுமே பக்தி செலுத்தவான். மற்ற இருவருக்கும் என்னிடமும் தாம் விரும்பும் பொருளிடமும்,

பக்தி (ப்ரியம்) உண்டு. அந்த விருப்பத்தை நிறைவேற்றுபவன் என்பதாலேயே என்மீது அவர்கட்கு ப்ரியம். அதனுல்தான் ஜ்ஞானிக்கு நான்தான் மிகவும் ப்ரியமானவன். எனக்கும் அவன் அது காரணம் பற்றியே ப்ரியமானவன். அந்த ஜ்ஞானியின் அதீனமானவன் நான். அவன் சிறிதும் என்னைப் பிரிவாற்றகில்லான். என்னையே தலைசிறந்த அடைக்கலமாய் எண்ணுபவன். அதனுல் அவனின்றி நானும் பிரிந்து தரிக்க மாட்டேன். ஆதலின், ஜ்ஞானியே என் ஆத்மா-உயிர்-எல்லாம் என்று கண்ணன் அர்ஜுனனுக்கு அருளினுன்.

**கர்மயோகத்திற்கு அதிகாரிகள் : -**

வேத சாஸ்திரங்கள் பக்தியோகத்திற்குச் சில தகுதிகளை விதித்துள்ளன. இதனை யாரும் அனுஷ்டிக்குமாறு வேதாதிகள் இடம் தரவில்லை. யார் வேண்டுமாலுைம் பக்தியை இறைவன்பால் செய்யத் தகுதியுள்ளவரே. ஆனுல் பக்தியோகத்திற்கு அவ்வாறல்ல. அதற்குச் சில பூர்வாங்கங்கள் உண்டு. வேதமோதும் தகுதி படைத்த மூன்று வர்ணத்தவரே இதற்குத் தகுதிபெற்றவர். ஸாமான்யமான பக்தியைப் செய்ய பரபக்தி வளரும். பெண்கள், மனைவியை யிழந்தவர்கள் என்போரும் ஜபம், உபவாஸம் போன்ற கர்மாக்களுக்குத் தகுதி பெற்றிருப்பதால், ப்ரஹ்ம வித்யையிலும் தகுதியுள்ளவரே யாவர். ஆச்ரமம் அற்றவர்களைவிட ஆச்ரமம் உள்ளவர் சிறந்தவர். நைஷ்டிகர் போன்றவர் ஆச்ரம தர்மத்திலிருந்து வழுவினுல் ப்ரஹ்மத்தை உபாஸிப்பதற்குத் தகுதியில்லை. ஸ்ம்ருதி நூல்களும், சிஷ்டர்களின் அனுஷ்டானமும்

(ஒழுக்கமும்) அவ்வாறே காட்டுகின்றன. அவர்கள் பிராயச்சித்தங்களை (கழுவாய்) செய்துகொண்டாலும் கூட உபாஸனத்தில் - பக்தியோகத்தில் அதிகாரமில்லை என்று பிரஹ்ம சூத்ரத்திலே வ்யாஸர் கூறியுள்ளார்.

இங்கு ஸூத்ரகாரர் ஆச்ரமமில்லாத மக்களுக்கும் உபாஸனத்தில் அதிகாரம் உண்டு. ரைக்வர், பீஷ்மர், ஸம்வர்த்தர் முதலியோர் ப்ரஹ்மவித்யா நிஷ்டர்களாய் இருந்ததை நாம் காண்பதால், ஆச்ரமதர்மங்களாலேயே உபாஸனம் செய்யத் தகுதியுண்டென்பதை ஏற்கவியலாது. ஆர்த்தன், ஜிஜ்ஞாஸு, அர்த்தார்த்தீ என்ற இம்மூவரும் உபாஸனம் செய்வது தத்தம் நோக்கம் நிறைவேறவேயாகும். ஆனால், ஜ்ஞானியோ முதலிலேயே எம்பெருமானையடைவதையே குறிக்கோளாகக் கொண்டு உபாஸனை புரிகிறான். ஆதலின், கீதை அவனை நித்யயுக்தனென்றும், எம்பெருமானுக்கு மிகவும் ப்ரியமானவன் என்றும் குறிப்பிடுவதை முன் கண்டோம். அவன் அநன்ய சேதஸ் (பிறவற்றில் மனத்தைச் செலுத்தாதவன்) என்று அழைக்கப்படுகின்றான்.

அத்தகைய ஜ்ஞானிகள், எம்பெருமானுக்கு மிக ப்ரியமாயிருப்பதால் அவனையே பாடுவதும் வணங்குவதும், முயல்வதுமாய் சிறிது நேரமும் இவையின்றி உயிர்வாழ இயலாதவராய் அவன் கல்யாண குணங்களைக் குறிக்கும் திருநாமங்களை வாஸுதேவ! என்றே எப்போதும் பாடுபவர்களாய் அவன் அர்ச்சனை முதலியவற்றில் ஈடுபட்டவர்களாய் உறுதிகொண்டிருப்பர் என்று கண்ணனின் கருத்தினை ஸ்ரீராமானுஜர் விளக்குகிறார்.

எம்பெருமான்-அனன்ய பக்தியுடன், உள்ளன்புடன் அர்ப்பணிக்கும், இலை (துளஸி) மலர், பழம், நீர் இவற்றைக்கூடப் பெரும் பொருளாக உகந்தேற்கிறான். பக்தியின்றி பெரும்பொருள் கொடுத்தாலும் அதனை அவன் ஏற்பதில்லை யென்று பக்தியின் பெருமை காட்டப்படுகிறது.

லௌகிக, வைதிக கர்மாக்கள் அனைத்தின் கர்த்தாவாகவும், பயனைத் துய்ப்பவனாகவும், பூஜிக்கப்படுபவனாகவும் என்னையே யெண்ணி என்னிடம் அனைத்தையும் ஸமர்ப்பணம் செய் என்கிறார் கண்ணன். இதையே ஸாத்விக த்யாகம் என்ற பெயரில் வைணவர்கள் சிறப்பாக அனுஷ்டிக்கின்றனர். இவ்வாறு அசைக்கமுடியாத பக்தியுடையவன் பக்தியையே முக்கிய நோக்கமாகக் கொண்டு செய்வானேயானால், ஆசாரங்களில் சிறிது அவன் குறையுள்ளவனாயிலும் முன் கூறப்பட்ட பக்தர்களைப் போலவே சிறந்த வைணவத் தலைவனாய் மதிக்கத் தக்கவன். தங்கச் சுரங்கத்திலும் கல்லுக்கு மதிப்பில்லை. குப்பையில் கிடந்தாலும் மாணிக்கம் போற்றத்தக்கதே. அவன் பக்தியால் பாவமெல்லாம் நீங்கிவிட்டபின் உபாஸனத்திற்குத் தடையில்லை. உபாஸனைக்கு அஷ்டாங்க யோகங்கள் உதவிகரமானவை. அவ்வுபாஸனை அடிக்கடி திரும்பத் திரும்ப செய்யப்பட வேண்டுவதாம்.

பக்தியைத் தொடங்குவதே அதற்கு ஏற்படும் தடைகளான பாவங்களை நீக்கி பரிபூர்ணமான பக்தியை நிறைவேற்றவல்லது. ஆதலின், பக்தியே தனக்கேற்படும்

தடைகளை எவ்வாறு விலக்கும் என்று கேட்கக்கூடாது என்று தாத்பர்ய சந்த்ரிகையில் தேசிகள் குறிப்பிடுகிறுர்.

தேவதைகளும் எம்பெருமானிடம் பக்தி செலுத்துகின்றனர் என்பதை வ்யாஸசூத்திரம் விளக்குகிறது. விலங்குகளும்பக்தி- செய்வதை கஜேந்திரன், சுக்ரீவன் முதலியவர் வரலாறுகளால் அறிகிறேம். மிகுந்த புண்யத்திஞல் அவையும் பக்தி செய்து பெரும் பயன் பெற்றன. சாபங்களால் தாவரங்களாய்த் தோன்றிய சிலவும் ஞானம் பெற்றிருந்தமையை மாமுனிவர்கள் குறிப்பிடுகிறுர்கள். ஆகவே மஞே தர்மமான பக்தியென்பது எங்கும் பொருந்துவதேயாம்.

எம்பெருமானைத் தவிர அனைத்தையும் துறந்தவன், அவனிடமே அனுராகத்தை வைத்து பரபக்தியை வளர்த்துக் கொள்கிறுன். வேறு எதனையும் அவன் விரும்புவதில்லை. எப்போதுமே இடைவிடாமல் அவனிடமே அவ்வுபாஸகனின் உள்ளம் பதிந்திருக்கும். அந்தப் பரபக்தியே ஆத்மீய ஞானத்திற்கும் முக்திக்கும் காரணமாகிறது.

## உபாஸனத்தின் வெவ்வேறு வகைகள்

வேதனம் (ஞானம்) உபாஸனம், பரபக்தி என்பவை ஒன்றையே குறிப்பிடுவன. உபநிஷத்துக்ள் 32 வித்யைகள் அல்லது உபாஸன வழிகளை விளக்கும். இவ்வனைத்துக்கும் லக்ஷ்யமான பயன் ஒன்றேயென்று ப்ரஹ்ம ஸூத்ரங்கள் விளக்குகின்றன. இந்த உபாஸஞ வழிகள் வெவ்வேருயினும் இவற்ருல் அடையப்படுவது பரப்ரஹ்மமே. உபாஸகர்களின் சக்திக்கும், உணர்ச்சிக்கும்

ஏற்ப இந்த உபாஸனங்களும் வெவ்வேருக அமைந்துள்ளன. ஒவ்வொரு உபாஸகனும் தனக்கேற்ற ஓர் வித்யையைப் பலன் கிட்டுமளவும் உபாஸிக்க வேண்டும்.

இந்த வித்யைகள் வெவ்வேறு உபநிஷத்துக்களின் காணப்படுபவை. ஒரே வித்யை ஒன்றுக்கு மேற்பட்ட உபநிஷத்துக்களிலும் விளக்கப்பட்டிருக்கலாம். அதனுல், ஒரு வித்யைக்கும் மற்ருென்றிற்கும், இரு உபநிஷத்துக்களில் காணும் ஒரே வித வித்யைகளுக்கும் பயனில் வேறுபாடு உண்டோ என்று ஐயம் ஏற்படலாம். வைச்வாநர வித்யை, ப்ராண வித்யை முதலியவை வெவ்வேறு உபநிஷத்துக்களிலும் காணப்படுகின்றன. பெயர் ஒன்ருயினும், ஒன்றுக்கொன்று சில குணங்கள் போன்றவை மாறுபடுகின்றன. அவை ஒன்ருய்க் கருதத் தக்கவையா? அல்லது வேருகக் கருதக் தக்கவையா? குணோபஸம்ஸறார பாதத்தில் இதுபற்றி ஆராய்ந்து, வெவ்வேறு உபநிஷத்துக்களில் காணப்படும் ஒரே விதப் பெயருள்ள வித்யையை ஒன்ருகவே கொள்ளவேண்டும். அந்த வித்யைக்குரிய முக்கிய குணங்கள் ஒரேவிதமாக எடுத்துக் கொள்ளத்தக்கவையே. ஸம்யோகம் ரூபம், சோதனு, ஆக்யா என்ற காரணங்களைக் கொண்டு அவ்வித்யைகளை ஒன்றுபட்டவையாகக் கொள்ள-வேண்டும் சாந்தோக்யத்திலும், வாஜஸனேயத்திலும் வைச்வாநரவித்யை விளக்கப்படுகிறது. சோதனை (விதி) யால், ஒரே பெயரால், இவ்வித்யை ஒன்றேயென்று தீர்மானிக்கப்படுகிறது. இந்த எல்லா வித்யைகளிலும் எம்பெருமானுக்குக் கூறப்படும் குணங்கள் - சத்யத்வம்,

ஞானத்வம், அனந்தத்வம், ஆனந்தத்வம், அமலத்வம் முதலியன உபாஸ்யமான ப்ரஹ்மத்தின் ஸ்வரூபத்தையறிய எல்லா வித்யைகளிலும் தொடருகின்றன. காருண்யம் முதலிய குணங்கள் குணியான ப்ரஹ்மத்தை விட்டுப் பிரியாதிருந்தாலும், அவை குறிப்பிடப்பட்ட வித்யையிலேயே தியானிக்கத் தக்கவை. பிறவற்றில் இல்லை என்பதாம்.

**நித்ய நைமித்தின கர்மாக்கள்:**

அவரவர் வர்ண ஆச்ரமங்கட்குரிய கர்மாக்களையும் பக்தியோகம் செய்பவர் அவசியம் செய்து தீரவேண்டும் என்பது ப்ரஹ்ம சூத்ரத்தின் கருத்துமாகும். ஒவ்வோர் ப்ரஹ்ம உபாஸகனும், யஜ்ஞும், தானம், தவம் முதலிய கர்மாக்களை தன் பக்தியோகத்திற்கு அங்கமாகச் செய்யவே வேண்டும்; வேத முறைப்படி, ப்ரஹ்ம உபாஸனம் செய்யாதவன்கூட யஜ்ஞும் முதலிய கர்மாக்களைச் செய்யவே வேண்டும். ஓர் ஆச்ரமத்தின் கடமையாகவும், ப்ரஹ்ம வித்யையை உபாஸிப்பதன் அங்கமாகவும் ஒருவன் உயிருள்ளளவும் அக்னிஹோத்ரம் முதலியவற்றைச் செய்யவேண்டுமென்று விதிக்கப்படுகிறது. ஆகவே, இந்த கர்மாக்கள் ஆச்ரம தர்மமாகவும், உபாஸன தர்மமாகவும் கருதப்படுகின்றன.

இங்கு மற்றொரு ஸ்யாஸ ஸூத்ரம். ஒருவன் செய்யும் உபாசனையை நித்திய நைமித்திக கர்மாக்கள் அனைத்துமே வலுவுடையதாக்குகின்றன. இதற்கு ஓர் எடுத்துக்காட்டும் இங்கு கூறப்படுகிறது. குதிரையைப் போல என்று: ஒரு மனிதன் குதிரைமீது ஓரிடத்திலிருந்து மற்றொரிடத்திற்கு ஏறிச் செல்ல சேணம், கடிவாளம்

முதலிய சாதனங்களை அவசியமாக எதிர்பார்க்கிறுன். அதுபோல, உபாஸனையும் நித்திய நைமித்திக கர்மாக்களை அவசியமாக வேண்டி நிற்குமாம். வர்ணுச்ரம தர்மங்களை உபாஸகன் விட்டுவிட எந்த ஆதாரமும் அனுகூலமாயில்லை. கீதை, இவ்வாறு ஒருவன் தன் தர்மங்களை விடுவதை தாமஸ த்யாகம் என்று இழித்துரைக்கிறது. ஆதலின், ஒவ்வொரு ஆச்ரமியும் நித்திய கர்மாக்களை ஆச்ரம தர்மமாகவோ, உபாஸனைக்குரிய அங்கமாகவோ செய்தே தீரவேண்டும்.

இங்கு, மீமாம்சா சாஸ்திர நிபுணர்கள் கூறும் கருத்து கவனிக்கத் தக்கது.

1. வேதாந்த ஞானம் பெற்றுலும், பெரிய ஞானிகள்கூட கர்மாக்களைச் செய்தவர்களாகியே, சித்தியைப் பெற்றுள்ளனர் என்று ஜனகர் போன்ற ப்ரஹ்ம ஞானிகளை எடுத்துக் காட்டி கீதை முதலியன வற்புத்தியுள்ளன.
2. வித்யை (உபாஸனை) என்பது எப்போதும் கர்மாக்களுடன் இணைந்தேயுள்ளது.
3. சாந்தோக்ய உபநிஷத் போன்றவை எந்தக் கர்மாவும் வித்யை மூலமே பயன்தருவது என்று கூறுகின்றன.
4. சாந்தோக்ய முதலியன, ஆசார்யனிடமிருந்து ஜ்ஞானத்தைப் பெற்ற பின்னர், கர்மாக்களை அனுஷ்டிக்க வேண்டுமென்று கூறுகின்றன. ஆதலின், ப்ரஹ்ம வித்யையும் கர்மானுஷ்டானத்தைச் சார்ந்ததே.
5. வேத நூல்கள், ஒவ்வொருவனும் உயிர் உள்ளளவும் கர்மாவில் ஈடுபட்டே யிருக்கவேண்டும். அதனுல்தான்

மிகப் பெரும் இன்பம் அடையப்படும் என்று வற்புறுத்துகின்றன.

இந்த மாதிரி மீமாம்ஸகர்கள் கர்மாக்களுக்குக் குறிப்பிடும் முக்கியத்துவத்தை ஸூத்ரகாரர் (வ்யாஸர்) அலசி, இறுதியில் முக்தி - பரமானந்தம் - வித்யையின் உபாஸனையால் தான் கிட்டும் என்று முடிவு செய்து விடுகிறார். அவர் காட்டும் விளக்கங்களாவன:-

1. வித்யை என்பது கர்மாக்களை அங்கமாகக் கொண்டவையுமல்ல; சில ப்ரஹ்ம ஞானிகள் எல்லா கர்மாக்களையும் விட்டமையைக் காண்கிறோம். வித்யை கர்மாங்கம் என்றால், அவர்கள் அவ்வாறு கர்மாக்களை விட்டிருக்க முடியாது.
2. வித்யை என்பதுடன் சேர்த்துச் செய்வதாலே கர்மா சிறந்த பயனைத் தரும் என்ற அவர்களின் வாதமும் சரியல்ல; இந்த விதி உத்கீத வித்யை ஒன்றுக்கே விதிக்கப்பட்டது. ஆதலின், அதற்கே பொருந்துவதாகும். மற்ற ப்ரஹ்ம வித்யைகள் அவ்வாறு கர்மாங்கமல்ல. ஆகவே, எதனைச் செய்தாலும் வித்யையுடனேயே செய்யவேண்டும் என்று கூறியதாகாது.
3. வித்யையும், கர்மாவும் வெவ்வேறு பலனுக்கு இட்டுச் செல்பவை. ஆதலின், இரண்டையும் சேர்த்துப் பல இடங்களிலும் குறிப்பிடுவதால் மட்டும், வித்யை, கர்மாவுக்கு அங்கம் என்று கூறுவது சரியல்ல.
4. ப்ரஹ்ம வித்யை என்பது கர்மாவிற்கு அங்கமன்று; வேதத்தின் பொருளையுணர்வது வேறு; வித்யை என்பது த்யானம் அல்லது உபாஸனம். வெறும்

ப்ரஹ்மத்தின் ஸ்வரூபத்தை அறிந்து கொள்வது மட்டுமல்ல. அது வேதத்தினுல் அறியத் தக்கது.

5. வாழ்நாள் முழுவதும் கர்மாக்களைச் செய்துகொண்டே முக்தியையடைய முடியும் என்று ஈசாவாஸ்ய உபநிஷத் கூறியதும், ப்ரஹ்ம ஞானியானவன், வித்யைக்கு அங்கமாகக் கர்மாக்களைச் செய்து வரவேண்டும். வித்யையின் சிறப்பையுணர்ந்திருந்தாலும் அதற்காகக் கர்மாவை விடாமல் செய்யவேண்டும் என்று அனுமதிப்பதேயாகும். ப்ரஹ்மஞானி, ஓயாமல் கர்மாக்களைச் செய்து வருவதாலும், களைப்படைவதில்லை. அதனுல், வித்யை கர்மாங்கம் என்று கூறிய தாகாது.

6. வேதங்களும், உபநிஷத்துக்களும், கூறும் புண்ய பாவங்கள் எனப்படும் கர்மாக்கள் அனைத்தும், உலகில் துயரத்தின் காரணமானவை. அவை ப்ரஹ்ம வித்யையாலேயே அழிகின்றன. அத்தகைய கர்மா ப்ரஹ்ம வித்யையைத் தன் அங்கமாக எவ்வாறு ஏற்றுக் கொள்ளும்?

7. சில ஆச்ரமங்களில், குறிப்பாக, ஸன்யாஸி போன்றவர்க்கும், ப்ரஹ்ம வித்யையில் அதிகாரம் உண்டு. ஆனுல், அக்னி ஹோத்ரம், தர்சம், பௌர்ணமாசம் போன்ற கர்மாக்களில் அதிகாரமில்லை. இதனுலும், வித்யை கர்மாவிற்கு அங்கமாக முடியாதென உணரலாம். பாதராயண முனிவர் இவ்வாறு கர்மாக்களே ப்ரஹ்ம வித்யைக்கு அங்கமானவை, கர்மாவிற்கு வித்யை அங்கமில்லையென்று நிரூபித்தருளினுர்.

இந்த உபாஸனத்திற்கு அஷ்டாங்க யோகங்கள் மிகவும் பயன்படுபவையென்பதை வியாஸ சூத்திரம் நன்கு விளக்குகிறது. தக்க இடத்தைத் தேர்ந்தெடுத்து உரிய முறையில் தியானத்திற்கு அமர வேண்டும், மனம்ஒருமித்து எம்பெருமானிடம் லயிக்குமாறு தடையில்லாத இடம், இருக்கை, (அமரும் ஆசனம்) முதலியவை அமைதல் வேண்டுமாம். ஆகவே இம்மாதிரியாக அஷ்டாங்கயோகம் உபாஸனைக்கு இன்றியமையாததாகிறது. (வே) எப்படி எப்படி எம்பெருமானைத் தியானிப்பது என்பது போன்ற செய்திகள் ப்ருஹதாரண்யகோபநிஷத் - மாத்யந்தினசாகை முதலியவற்றில் விளக்கப்பட்டுள்ளன. ஜீவாத்மாவையும், பரமாத்மாவையும் முறையே சரீரமாகவும், சரீரியாகவும் ஒன்றுபட்டிருப்பதாகத் தியானிக்குமாறு ஆங்கே விளக்கப்படுகின்றன. உபாஸகன் தன் அந்தர்யாமியாக அவனை உபாஸித்தல் வேண்டும் என்பதாம். இந்த உபாஸனத்திற்கு ஐம்புலனடக்கமும், மனதின் அடக்கமும் மிகவும் இன்றியமையாதவை என்றும் ப்ரஹ்மஸூத்ரம் குறிப்பிடுகின்றது. இவையே உபாஸனம் நன்கு நிறைவேற உதவும் காரணங்கள். இவ்வாறு சிறந்த முறையில் ப்ரஹ்மத்தை உபாசிப்பவன், அத்துறையில் பாண்டித்யம் பெற்றிருப்பினும் வெளியே ஆடம்பரமின்றி எதையும் வெளிப்படுத்தாமல் சிறுகுழந்தை போல் மௌனத்துடன், முனிவன் நிலையில் இருக்க வேண்டும் என்பது சாந்தோக்யத்தின் விதியாகும். இம்மாதிரி உபாஸனம், பழமையான கர்மாக்களை அழித்திடும் சிறந்த சாதனமாகும். ஆனல், பழம்வினைகளில், தான் அனுபவிக்கத் தொடங்கிய ப்ராரப்த கர்மா மட்டும் அது பயன்

தந்து முடிந்த பின்னரே மறையும். ஸஞ்சித கர்மா என்பது இன்னும் பலனை யனுபவிக்கத் தொடங்காமல் இனிமேல் அனுபவிக்கத் தக்கதாய் சேர்ந்து கிடக்கும் கர்மாவாகும். இது இந்தஉபாஸனையின்பெருமையால் தானே அழிந்துவிடுவதாகும்.

இந்த பக்தியோகம், செவ்வனே நிறைவேற, எம்பெருமான் திருவடிகளில் ஆத்மாவை ஸமர்ப்பணம் (ப்ரபத்தி) செய்வது இன்றியமையாதது. எல்லாவற்றையும் தன் ஆளுகைக்குள் கொண்டிருக்கும் வாஸுதேவனின் திருவருள் துணையின்றி எந்தக் கர்மாவும் செவ்வனே நிறைவேறாது. உபாஸகன், தனது உபாஸனை வெற்றிகரமாக நிறைவேறுமாறு காக்கவேண்டு மென்று அவனையே வேண்டவேண்டும். இந்த ப்ரபத்தி பக்தியோகத்திற்கு (உபாஸனத்திற்கு) அங்கமானபடியால் இதனை அங்க ப்ரபத்தி என்பர்.

1. உபாஸகன், கர்மயோகம், ஜ்ஞானயோகம், பக்தியோகம் தொடர்பான எச்செயலையும்,"எம்பெருமானே நாமடையும் பொருளும், அடைவிப்பவனும்," (ப்ராப்யமும், ப்ராபகனும்) என்று உணர்ந்தே செய்ய வேண்டும். இவ்வாறு எண்ணி உபாஸனை செய்பவனைத் தன்னை வந்தடைவதற்குத் தடையாயுள்ள எல்லா பாவங்களிலிருந்தும் விடுவிக்கின்றான்.
2. மேலும், அவ்வுபாஸகன், பக்தியோகத்தின் தடையான பாவங்கள் தொலைவதற்கென்று சாந்த்ராயணம், கூச்மாண்டம், அக்னிஷ்டோமம் முதலிய பிராயச்சித்தங்களை மேற்கொள்ளவேண்டாம்.

பக்தியோகத்தைத் துவக்க, திறமையை வேண்டி எம்பெருமானிடம் ப்ரபத்தி செய்தால் போதும். அவனே இவன் பாவங்களையெல்லாம் நீக்கி பக்தியோகத்தை நிறைவேற்றித் தருகிறன். ஆகவே, பக்தியோகம் தொடங்கும் முன்னர் - எம்பெருமானிடம் தன்னையே ஒப்படைத்து சரணாகதி செய்தல் இன்றியமையாதது என்பது தெளிவாகிறது.

இந்த பக்தியே பரபக்தி பரஜ்ஞானம், பரமபக்தி என மூன்று வகையான நிலைகளையடைந்து மிளிரும். முதல்படியிலுள்ள பக்தியை சாமான்ய பக்தி என்பார்கள். அது வளர்ந்து, மேன்மேலும் எம்பெருமானை நேரில் காணவேண்டுமென்று தீவிரமான ஆசை வடிவமான புத்தியாகையில் பரபக்தியாகிறது. மேன்மேலும் இந்த பரபக்தியால் ஏற்படும் ஸாக்ஷாத்காரம் (நேரில் தர்சனம் செய்தல்) பரஜ்ஞானமெனப்படும். இவ்வாறு சாக்ஷாத்காரம் பெற்றவன் இடைவிடாமல் மேன்மேலும் அவ்வெம்பெருமானை அனுபவித்துக்கொண்டேயிருக்க அவாவுதல் பரம பக்தி எனப்படும். இவ்வாறு பல படிகளாம்.

ஸ்ரீமத்பாகவதம் பக்தியை 9 வகையாக வர்ணிக்கிறது. திருமாலைப் பற்றிக் கேட்பதும், பாடுவதும், நினைப்பதும், திருவடிகளைத் தொழுவதும், பூசித்தலும், வணங்கலும், அடிமை செய்தலும், தோழமையும், தன்னையர்ப்பணிப்பது மென ஒன்பது வகை பக்தி என்று குறிப்பிடப்படுகிறது.

## 4.4 பக்தியோகத்தின் சாரமான அம்சங்கள்

1. பக்தியோகம் என்பது எம்பெருமானிடம் ஆழ்ந்த பக்தியின் செயலே.

2. உபநிஷத்துக்களில் கூறப்படும் வேதனம் (அறிதல்) த்யானம் உபாஸனம், பக்தியோகம் என்பவையெல்லாம் ஒன்றையே குறிப்பன. இது வேதாந்தத்தில் 32 வித்யைகளாகப் பிரித்து விளக்கப்படுகிறது.
3. கர்மயோகத்தால் சித்திக்கின்ற ஆத்ம தர்சனமும் (ஜீவாத்மாவைக் காணல்) ஜ்ஞானயோகமும் இந்த பக்தியோகத்திற்கு முதல் படிகள்.
4. போதிய ஊக்கத்துடன் ஈடுபடும் உபாஸகனுக்கே இந்த யோகம் செயற்கெளிதாகும்.
5. வர்ணங்களுக்கும், ஆச்ரமங்களுக்கும் உரிய கர்மாக்களை பக்தியோகீ கட்டாயம் செய்தே தீரவேண்டும்.
6. எம்பெருமானின் தெளிவான சாக்ஷாத்காரம் கிட்டுமளவும் உபாஸகன் த்யானத்தை விடாமல் செய்து கொண்டே வரவேண்டும்.
7. எம்பெருமானைத் தன் அந்தராத்மாவாக (அந்தர்யாமியாக) தியானித்தல் வேண்டும்.
8. பக்தியோகத்தைத் தொடங்கவும், அது நல்ல முறையில் சீராக நிறைவேறவும் எம்பெருமானின் திருவடிகளில் ப்ரபத்தி செய்திடல் வேண்டும்.

## 4.5 ப்ரபத்தியின் மேன்மை (தத்துவம்)

ப்ரபத்தி என்பது வேதங்களின் ஆழ்ந்ததோர் தத்துவமாகும். அது, மனிதனை உயர்த்திக் கொள்ள பக்தியுடன் தன்னையர்ப்பணிக்கும் வழியாக இதனை ஏற்படுத்தியுள்ளது. எம்பெருமானிடம் அசைக்கமுடியாத நம்பிக்கையை வேதங்கள் வற்புறுத்துகின்றன. மனிதன் தனது சிறுமையையும், லக்ஷ்யத்தை யடையத்தக்க

திறனின்மையையும் உணர்ந்து, எல்லாம் வல்லவனும், ஸர்வஜ்ஞனுமான எம்பெருமானைத் தான் உபாசிப்பதற்கு ஏற்ற வழியைக் காட்டுமாறு வேண்டுகின்றான். ரிக்வேதத்திலிருந்து சில தொடர்களின் பொருளை யீண்டு காட்டுவோம்.

மிக அற்பனான மனிதன் எம்பெருமானின் கருணையும், வழி காட்டுதலும் இன்றி உண்மைநிலையை யறிய மாட்டான். இவனுக்கு எம்பெருமானே எல்லாமும்; அவனருளால் தான் இவன் முன்னேறமுடியும்.

1. இந்திரனே (எம்பெருமானே) நாங்கள் உம் தோழமையை நாடுகிறோம்.
2. நீயே எங்களுக்கு எல்லாப் பொருளுமாவாய்.
3. எங்களை நல்லவழியில் அழைத்துச் சென்று செல்வத்தைத் தா.
4. செல்வத்திற்காக உன் திருவடிகளைப் பற்ற விரும்புகிறோம்.
5. என் வணக்கச் சொற்களை அன்புடன் ஏற்றிடுக.
6. மக்களுக்குப் ப்ரியமான நண்பனும் உறவினனும்நீயே.
7. பாவக் கடலிலிருந்து காப்பாற்ற வல்லவன் நீயே.
8. பாலைவனத்திடையே பருகக் கிடைத்த தண்ணீரூற்று நீயே.
9. இந்த பாவக் கடலைக் கடக்க-ஓட்டையற்ற நல்லதோர் தெப்பமான எம்பெருமானைச் சார்ந்து பத்திரமான கரையை அடைவோமாக.
10. இளைத்தும் களைத்துமுள்ள முதியவர்கள் பத்திரமாய் நடந்து செல்ல உறுதுணையான ஊன்றுகோல் நீயே.

ஈசாவாஸ்ய உபநிஷத்து அக்னே நய எனத் தொடங்கும் மந்திரத்திலே, எம்பெருமானே அடைவிப்பிவனும், அடையப்படுபவனும், ஆதலின், உபாஸகன், அவனை எல்லையற்ற நம்பிக்கையுடன் அடிகளில் விழுந்து சரணாகதி செய்து உய்ய வேண்டும் எனக் குறிப்பிடுகிறது. ச்வேதாச்வதர உபநிஷத்தும் முக்தியை விரும்பும் நான் உன்னைச் சரணடைகிறேன் என்று கூறி ப்ரபத்தி செய்ய வழி காட்டிற்று. மிகப் பழமையும் பெருமையும் வாய்ந்த சாந்தோக்ய உபநிஷத், எம்பெருமானையே சரணடைந்தவன் ப்ரஹ்ம ஸம்ஸ்தன் எனப்படுவான் என்றும், அவனே மரணமற்ற அம்ருதத்வ நிலையை யடைகிறானென்றும், எல்லாவிதத்தாலும் தன்னை எம்பெருமானிடம் சரண் அடைவிக்க வேண்டும் என்றும் குறிப்பிடுகிறது. முண்டகோபநிஷத்தோ, ப்ரணவம் வில்லாகவும், ஆத்மா அம்பாகவும், பரப்ரஹ்மமெனும் குறியை நோக்கித் தன் ஆத்மாவை (ஜீவாத்மாவை) எய்ய வேண்டும் என்றும், தான் அம்புபோலவே சென்று சேரக் கடவன் என்றும் குறிப்பிடும். இந்த ப்ரபத்தியைப் பற்றி ஸ்ம்ருதிகளும், புராணங்களும் பகவத்கீதையும் முக்திக்குத் தவறாத சிறந்த உபாயமெனப் பரக்கப் பேசியுள்ளன. எல்லா உபநிஷத்துக்களின் கருத்துக்களையும் திரட்டிக் காட்டும் கீதை சரணாகதியையே நிறைய வற்புறுத்துவதைக் காண்கிறோம். ஸ்ரீவைஷ்ணவாசார்யோத்தமர்களான நாதமுனிகளும்,யாமுனமுனிகளும், எம்பெருமானை-யடைய, இந்த ப்ரபத்தி வழியையே பின்பற்றினர். ஸ்ரீராமானுஜர் தம்நூல்களில் எங்கும் பக்தியைத் தவிர ப்ரபத்திக்கு முக்கியத்துவம் கொடுத்ததாகத்

தெரியவில்லையே யென்று சந்தேகிப்பாருண்டு. அவரருளிய ஒன்பது சிறந்த நூல்களிலே கத்யத்ரயம் என்னும் 3 கத்யங்களும், நித்தியம் என்ற அனுஷ்டான நூலும், மற்ற நூல்களின் கருத்துக்களுக்கு மாறியிருப்பதால் அவரால் இயற்றப்படவில்லை யென்றும் அன்னூர் சந்தேகிப்பது ஆதாரமற்றது. கத்யங்களிவ்தான் ப்ரபத்தி வழியைச் சிறப்பாக விளக்கினூரேயன்றி வேறல்ல. நடையாலும், கருத்துக்களாலும், கத்யநூல் அவரேயருளியதென்பதில் ஐயமில்லை. சரணுகதி கத்யத்தையும் பிற கத்யங்களையும், சிறந்த உரையாசிரியரான சுதர்சனபட்டரும், பெரியவாச்சான் பிள்ளையும், வேதாந்த தேசிகனும் தனித்தனியே தத்தம் உரைகளால் சிறப்பித்ததே அன்னூரின் நூலேயென்பதனை நிறுவப் போதுமான சான்றுகும்.

இவ்வாறு எம்பெருமானுர் தம் சரணுகதி கத்யம் முதலியவற்றில் விளக்கிய ப்ரபத்தி மார்க்கத்தையே உலகத்தோருய்ய, வர்ணுச்ரம தர்ம நியமமில்லாமல் எளியதோர் வழியென்று தேசிகனுர் தம் நூல்களிலே பரக்க விளக்கியருளினுர். அவர் நம் சமுதாயத்தில் உள்ளவர்கள் வர்ணுச்ரம தர்மங்களைக் கைவிடலாகாதென்று நிறுவிய வைணவ சமயக் கோட்பாட்டிற்கும், வேத, ஸ்ம்ருதி புராணுதி நூல்களுக்கும் இணக்கமாகவும், எந்த இனத்தவரும், பறவையோ, பசுவோ, மனிதனே, குழந்தையோ, முதியவரோ, பெண்மணியோ ஒரே ஒரு முறை எளிதாய்ச் செய்து முக்தியைப் பெறும் வழி இதுவேயென்று ப்ரபத்தியை விளக்கியதன் வாயிலாகப் பெரும் சீர்திருத்தம் செய்தருளிய பெரியோர் என்று கொள்ளவேண்டும். திருமாலைச்

சரணடைவதன் மூலம் யாரும் எளிதில் வைணவனாக முடியும்என்ற பரந்த நோக்கம் புலப்படுகின்றது.

இராமானுஜாசார்யர் தம் நூல்களில், ப்ரபத்திக்குக் கொடுத்துள்ள பெருமையை நாம் உணரவேண்டும். அவர் வெளிப்படையாகப் பல நூல்களிலும் பக்தி வழியையே விரித்துரைத்தார். ஆனால் சரணாகதி கத்யத்தில், ப்ரபத்தியின் கோட்பாட்டை விளக்கியருளினார் என்பதைத் தேசிகனார் விரித்துக் காட்டுகிறார். மூலத்திற்கு ஏற்ப பக்தி யோகத்தின் சிறப்பையும், ரகஸ்யத்தையும் கீதாபாஷ்யத்தின் முதலிலிருந்து காட்டத் தொடங்குகிறார். பக்தியோகத்தினைச் சிறந்த வழியாகக் காட்டினாலும், ப்ரபத்தியையும், சிறந்த முக்தி சாதனமாக விளக்கக் காண்கிறோம்.

பரமபுருஷனின் திருவடித் தாமரைகளில் சரணாகதி செய்ததால் தோன்றிய ஈடுபாட்டை யுடையவனுக்கு என்றும்,

பரமபுருஷன் சரணாரவிந்தங்களில் தன்னையும், தன்னைச் சேர்ந்தோரையும் ஒப்படைத்தவனுக்கு (ப்ரபத்தி செய்தவனுக்கு) கத்யத்ரயம் என்ற அரியநூலை சாஸ்வதமான சாரஸ்வதம்ஃ (சரஸ்வதியின் அருள் நிறைந்தது) என்று போற்றுவர். மற்ற நூல்கள் அனைத்தும் இந்த கத்யம், மிகவும் நுட்பமும், ரஹஸ்யமுமான, திருவஷ்டாக்ஷரம் (மூலமந்த்ரம்) த்வய மஹாமந்த்ரம், சரம ச்லோகம் என்ற ரஹஸ்யம் மூன்றில் ஒவ்வோர் சொல்லுக்கும் விளக்கமாய் அமைந்திருக்கக் காணலாம்.

இந்த சரணாகதிதத்வம் இராமானுஜ முனிவரால் முதலில் கண்டு பிடிக்கப்பட்டதன்று. முற்காலத்திலேயே

வேதங்கள், ஸ்ம்ருதி நூல்கள் போன்றவற்றில் விளக்கப்பட்டு, நாதமுனி, யாமுன முனி போன்றோரால் பின்பற்றப்பட்டு வந்தது. பிறகு இவருக்கு ரஹஸ்யம் மூன்றின் உபதேசத்தின் வாயிலாக, ஸ்ரீகோஷ்டிபூர்ணர் (திருக்கோட்டியூர் நம்பி) என்ற ஆசார்யரால் அருளப்பட்டது. அவர் அவ்வாறு தமக்குக் கிட்டிய மாபெரும் நிதிபோன்ற ரஹஸ்யமான எளிய ப்ரபத்தி யோகத்தையே பல்லாயிரக்கணக்கான தம் சீடர்களுக்கும் பகிரங்கமாகப் பரப்பி மானிட சமுதாயத்திற்கே மாண்பு மிக்கதோர் அருளைநல்கினர். இவற்றால், ப்ரபத்தியை அவர் முக்திக்கு நேர் உபாயமாகக் கைப்பற்றினர் என்பது தெளிவுபடுகிறது. இவர் தம் வைகுண்ட கத்யத்தில்,

பரம புருஷனை பகவான்-நாராயணனை ஸ்வாமியாகவும், நண்பனாகவும், குருவாகவும் பற்றி........லக்ஷ்மீநாதனை அவனது சரணாரவிந்தங்களையே, வேறுகதியற்ற தனக்கு உய்வதற்குரியதாக அவனிடமே எல்லாவித பாவனையையும் வைத்து சரணமாகப் பற்றவேண்டும் என்று கூறியருளுகிறார்.

அந்த எம்பெருமானையடைய அவன் திருவடித் தாமரையிணைகளில் ப்ரபத்தி செய்வதை விட்டு, ஆயிரங்கோடி ஊழிகாலமானாலும் வேறு உபாயம் எனக்கில்லையென்று எண்ணுக என்கிறார்.

எம்பெருமானின் திருவருளைத் தூண்டிவிட, அவனை வசப்படுத்த பக்தியும், ப்ரபத்தியு மென்றிவையே முக்கிய காரணம் என்றார் வேதாந்த தேசிகனாரும்.

எம்பெருமானின் கூற்றாக ரஹஸ்யத்ரய ஸாரத்தில் மேற்கோள் காட்டப்படும் ஓர் ச்லோகத்தில் அர்ஜுநா! என் கைங்கர்யத்தை (மோட்சத்தை) அடைய விரும்புபவர்களுக்கு நான் பரம பக்தியாலோ, ப்ரபத்தியாலோ தான் அடையக்கூடியவன் என்று கூறப்படுகிறது.

பக்தியோகம் செய்பவன், அதன் அங்கமாக ப்ரபத்தி செய்வதால் அவனும், ப்ரபத்தியை முக்யமாகச் செய்பவனும் ப்ரபந்நர்கள் என்றே கூறத் தகுவர். முக்கியமான பக்தியோகம் செய்பவனும் ப்ரபத்திக்கு அங்கமாக பக்தி செய்பவனும் பக்தனே என்று கூறவும் தடையில்லை யென்றார்.

பக்தி செய்ய முடியாத வர்களுக்கு பக்திக்குப் பதிலான உபாயமாக ப்ரபத்தியைக் கொள்வர். நமஸ்காரம் மூவகையாகக் குறிப்பிடப்பட்டிருப்பது போல ப்ரபத்தியும் பலவகைகளைக் கொண்டது. ஆத்மாவலோகனத்தின் பின்னரே, பக்தி மிகக் கவனத்துடன் நிலை நாட்டப்பட வேண்டியதாகும். கர்ம யோகமும், ஜ்ஞான யோகமும், கொண்டு அந்த ஆத்ம தர்சனத்தைப் பெற்றாக வேண்டும். இது சிரமம் மிக்கதாதலின், சாமான்ய மனிதர் இவ்வழியில் முன்னேற முடியாது. பக்தியோகத்தின் அடிப்படைகளைப் பற்றித் தனியே முன்காட்டப்பட்டுள்ளது.

**ப்ரபத்திக்குத் தேவையானவை:**

1. உபாஸகன் பக்தியோகம் முதலிய உபாயங்களைச் செய்யத் திறனற்றிருத்தல்.
2. சாஸ்திரங்கள், உபாஸனைக் கிரமங்கள் முதலியவற்றை அறியாமை.

3. சாஸ்திரங்களில் கூறப்பட்டபடி, பிறவியால் பக்தி யோகாதிகளுக்குத் தகாத நிலை.
4. முக்தியைப் பெற ஏற்படக்கூடும் தாமதத்தைப் பொறுக்க மாட்டாமை.

என்றிக்காரணங்களில் ஒன்றோ பலவோ இருந்தால் ப்ரபத்திக்கு உரியவனாகின்றான். இந்த நான்கு காரணங்களும் தேவையென்பதில்லை. எந்தத் தகுதியற்றவனுக்கும் ப்ரபத்தி மார்க்கம் எப்போதும் திறந்துள்ள அரசபாட்டையாகும்.

**ப்ரபத்திக்குத் தேவையான அம்சங்கள் கீழ்வருமாறு:**

1. ஜீவாத்மாவிற்கும், பரமாத்மாவுக்கும் உள்ள நெருங்கிய சம்பந்தத்தை உணர்தல்.
2. எந்த உபாயத்தையும் செய்ய இயலாதவன் என்ற மனப்பாங்கு, ஆகிஞ்சன்யம் என்று இது கூறப்படும். கைம் முதலின்மையென்றுமிதனைக் கூறுவர்.
3. அடுத்து எம்பெருமானைத் தவிர வேறு கதியில்லையென்னும் அனன்ய கதித்வம். ஆகவே இந்த ப்ரபத்தி யோகமானது. ஜ்ஞானம், சக்தி முதலியவையற்று பக்தியோகம் செய்யத் திறனற்றவர்களுக்காக ஏற்பட்டது. மோட்சத்திற்கு இந்த சரீரம் முடிவடைந்த பின்னரும் தாமதம் ஏற்படுவதைப் பொறுக்காதவர், எம்பெருமானுக்கே நாமாட் செய்வோம், மற்றைக் காமங்களை விரும்ப மாட்டோமென்று எண்ணுபவர் இதற்கு உரியவர். இது பக்தியோகத்தின் இடத்தில் செயற்கெளிதாய் எம்பெருமானை உவப்பித்து விரைவில் யார்க்கும் பலன் தருவதாகும். பக்தியோகத்தின் சாரமெல்லாமிதிலுண்டு. ஆனால்,

அதன் கடினத்தன்மை மட்டும் கிடையாது. ஒரே தடவை செய்தாலே போதுமானது. உலகம் அனைத்திற்கும் பொதுவானது. நினைக்கும் எந்தப் பலனையும் தரவல்லது. ஒரு தடையுமற்றதாய், செயற்கும் எளிதாய், ஒரே முறை செய்தாலே வேண்டிய காலத்தில்விரைவில் பயன்தரத்தக்கதான ப்ரபத்தி- யைப் போன்ற உபாயம் வேறெதுவுமேயில்லை. பக்தி- யோகத்திற்கும் ப்ரபத்தி மார்க்கத்திற்குமுள்ள வேறுபாடுகளை யீண்டு குறிப்பிடுகிறோம்

| | பக்தியோகம் | ப்ரபத்தியோகம் |
|---|---|---|
| 1. | கர்மம், ஞானம், பக்தி இவற்றுக்குத் தொடர்புள்ள வேத சாஸ்திர ஜ்ஞானம் தேவை. | எம்பெருமானுக்கும், நமக்கும் உள்ள சம்பந்தத்தை அறிதல் போதும் |
| 2. | சாத்திரங்களின் விதித்துள்ள அனைத்துக் கர்மாக்களையும் செய்திடல் வேண்டும் | பக்தியோகம் முதலிய-வற்றிற்கு விதிக்கப்பட்ட செயல்களைச் செய்யும் திறனற்றவர் இதனைச் செய்தாலே போதும். |
| 3. | சாத்திரங்களில் குறிப்பிட்டவாறு மூன்று இனத்தவரே (ப்ராஹ்மணர், க்ஷத்திரியர், வைச்யர்) இதற்கு உரியவர். | சாதிசமய வேறுபாடின்றி அனைத்து மக்களும் இதற்கு உரியவர். ஒரு கட்டுப்பாடு- மில்லை. |

| பக்தியோகம் | ப்ரபத்தியோகம் |
| --- | --- |
| 4. கர்ம யோகமும், ஜ்ஞான-யோகமும் முதிர்ந்து ஆத்ம சாக்ஷாத்காரம் பெற்றவரே பக்தியோகத்தில் இழிய முடியும். | மற்றெதனையும் உறுப்பாக ப்ரபத்தி வேண்டுவதில்லை. இதுவே பரபக்தியின் இடத்தில்தானிருந்து பரஜ்ஞானத்தையும், பரம பக்தியையும் ஏற்படுத்தித் தர வல்லது. |
| 5. எம்பெருமானையடைய, தன் ப்ராரப்தகர்மம் முழுவதும் அழிவதற்காக வெகு நீண்ட காலம் காத்திருக்க வேண்டும். அனைத்துக் கர்மங்களும் அனுபவித்தே தீர்க்க வேண்டியவை. | எம்பெருமானையடைய தாமதத்தைச் சிறிதும் பொறுக்க மாட்டாதவன். பிரபத்தியால் உடன் பலன் பெறலாம். |
| 6. சாதாரணமான மக்களால் தம் சக்தியைக் கொண்டு சாதிக்க அரியது - பக்தியோகம். | யாரும் பூரண நம்பிக்-கையுடன் எளிதில் செய்ய வல்ல உபாயம் ப்ரபத்தி. |
| 7. இவ்வுலகைவிட்டுச் செல்லும்வரை பக்தியோகம் திரும்பத் திரும்பச் செய்து கொண்டேயிருக்க வேண்டுவது. | ஒரு நோக்கத்திற்கு ஒரு-முறையே ப்ரபத்தி செய்தல் போதுமானது. |

| பக்தியோகம் | ப்ரபத்தியோகம் |
|---|---|
| 8. எட்டு உறுப்புக்களைக் கொண்ட அஷ்டாங்க யோகம் இதற்கு இன்றியமையாதது. | ப்ரபத்தி வேறு எந்த உபாயத்தையும், தன்னுடன் சேர்த்தால் பொறுக்காது. பிரம்மாஸ்திரம்பிறஅத்திரங்களைப் பொறுக்காதன்றோ. |
| 9. இதனால் மோக்ஷம் எப்போது கிட்டும்என்று கூறுவதற்கில்லை. மிகநீண்ட காலமாகலாம். ப்ராரப்த கர்மாக்களை யெல்லாம் அனுபவித்துக் கழிந்த பிறகே பலன் கிட்டும். | ப்ரபத்தி செய்பவன் விருப்பப்படி சரீரத்தின் முடிவிலோ ,அன்றி உடனேயோ பலனைத் தர வல்லது. உடலை- விட்டு இவன் ஆவி பிரியும்வரை மோக்ஷம் காத்துக் கொண்டிருக்கும். வேறு தாமதமேற்படாது. |
| 10. கர்மயோகத்தின் சிறப்பால் முந்தைய பலபலபிறவிகளில் செய்த ஸஞ்சித கர்மாக்கள் தொலைந்துபோம். ப்ராரப்தம்மட்டும் அனுபவித்த பின் தொலையும். | ப்ரபந்நனின் ஸஞ்சித கர்மாக்களைப் போலவே ப்ராரப்த கர்மாவிலும், பயன் தரத் தொடங்காத ஒரு பகுதி உடனே யொழிந்துவிடும். பக்தியோக நிஷ்டன் போல் அதனையனுபவிக்க வேறு ஒரு பிறவியை இவன் எடுக்கத் தேவையில்லை. சரீரம் முடிகையில் மோக்ஷம் உறுதியானது. |

## 4.7 ப்ரபந்நனின் கடமைகள்

ஆகவே, இம்மாதிரி பற்பல சிறப்புக்களையும் ப்ரபத்தி கொண்டிருப்பதாலேயே, ஒரு நிபந்தனையின்றி உலகத்தவர் அனைவரும் உய்வதற்கு உயர்ந்ததோர் உபாயம் என்று உறுதியாய் தம் நூல்களில் உபதேசித்தவர் ஸ்வாமி வேதாந்த தேசிகனுர். ப்ரபத்தி செய்யாதவனுக்கு முக்தியை முகுந்தன் தருவதில்லை யென்று அறுதியிட்டு அருளியுள்ளார். இவ்வழியே இம்மை, மறுமைப் பயன்கள் அனைத்தையும் எளிதில் தரவல்ல சிறந்த சாதனமென்பதில் ஐயமேது?

இந்தப் ப்ரபத்தியைச் செய்வதற்கு முக்கியமானவை மூன்று சிறந்த மந்த்ரங்கள். இவற்றை ரஹஸ்யத்ரயம் என்றும் பெரியோர் அவை மறைவான ஆழமான பொருட்களைத் தம்மகத்தில் கொண்டுள்ளனவாமென்று விளக்கி வருகின்றனர்.

**1. மூலமந்த்ரம்.** இதுவே திருவஷ்டாக்ஷரம் என்றும் எட்டெழுத்து மந்த்ரம் என்றும் கூறிப் போற்றப்படும். இதன் முதலில் உள்ள ஓங்காரத்திற்கு மிகச் சிறப்பான பொருட்கள் அவர்களால் விளக்கப்பட்டுள்ளன. அவற்றின் விளக்கமாகவே நம: என்றும் நாராயணுய என்றும் பின்வரும் இரு சொற்களும் அமைந்துள்ளதாகக் கூறுவர். இம்மந்திரத்தின் மற்றொரு விளக்கமாக அமைந்ததே த்வயம் என்ற இரு வாக்கியங்களையும், ஆறு சொற்களையும் கொண்ட மந்த்ரம் என்பர். இவ்விரு மந்திரங்களின் விளக்கமாக அமைந்தது சரமச்லோகம் என்பது. இது கண்ணனுல் கீதையில் அருளப்பட்ட ச்லோகமாகும். இம்மூன்றும் வைணவர்களுக்கான பரம

ரஹஸ்யமான கருத்துக் கருவூலங்களாகும். இவற்றின் விளக்கத்தை திருமந்திரச் சுருக்கு, துவயச் சுருக்கு, சரமச்லோகச் சுருக்கு என்ற பகுதிகளில் காணலாம்.

ப்ரபத்தியை ஷடங்கயோகம் (ஆறங்கமுள்ளது) என்றும், ஐந்தங்கங்களையுடையது என்றும் இருவகையாகக் கூறுவர்.

1. ஆனுகூல்யஸங்கல்பம் - எம்பெருமானுக்கு அனுகூலனாகவே யிருப்பேன் என்ற உறுதி.
2. ப்ராதிகூல்யவர்ஜனம் - அவருக்கு எதிர்ப்பான செயல்களை விட்டு விடுதல்.
3. கார்ப்பண்யம் - ஆகிஞ்சன்யம் -ஒரு உபாயமோ சக்தியோ அற்றவனெனத் தன் எளிமையை யுணர்தல்.
4. மஹாவிச்வாசம் - எம்பெருமான் கைவிடாமல் காத்தே தீருவான் என்று முழுநம்பிகை.
5. கோப்த்ருத்வ வரணம் - நீயே காக்க வேண்டு-மென்று வேண்டுதல்.
6. ஆத்மநிக்ஷேபம் -தன்னையும், தன்னைச் சேர்ந்தோரையும் அவன் திருவடிகளில் ஒப்படைதல்.

இந்த ஆறுவது அம்சத்தை அங்கியாவும், பிற ஐந்தை-யும் அங்கங்களாகவும் கொண்டது ப்ரபத்தி. அஷ்டாங்க-யோகத்தில் சமாதி என்பதையும் அங்கமாகச் சேர்த்துக் கூறுவதுபோல், இங்கும்-அங்கியான ஆத்ம நிக்ஷேபம் என்ற ப்ரபத்தியை அங்கமாகவும் கூறுவதால் ஆறங்கமுடையதாகக் குறிப்பிடுவதுண்டு.

உலகிலுள்ள சராசரங்கள் அனைத்தும் எம்-பெருமானின் உடலாகும். ஆதலின், அவையனைத்திடமும் அனுகூலனுயிருப்பேன் என்று உறுதி கொள்ள வேண்டும். இதனுல், எந்த ஜீவனிடத்திலும் ஒரு ப்ரபந்நன் ப்ரதிகூலமாக எதிரியாக நடக்க மாட்டான். எம்பெருமானின் கருணையைப் பெற விரும்புபவன் ஒருவிதமான வேறு துணையுற்றவன் என்ற நிலையினை உணர்தல் வேண்டும். கர்மம், ஞானம், பக்தி போன்ற எதனையும் கொண்டு அவன் அருளை நம்மால் பெறவியலாது என்ற உறுதியுள்ளவனே ப்ரபத்தியில் இறங்கலாம். எந்தவிதத்திலும், ப்ரபத்தியின் பயன்பற்றியோ, எம்பெருமான் காப்பது பற்றியோ சிறிதளவும் அவநம்பிக்கையே யிருக்கக்கூடாது. உறுதியாகச் காப்பான் என்ற பெரு நம்பிக்கை தான் இதற்கு இன்றியமையாதது. இந்த நிலையில் ,செய்யப்படும் ப்ரபத்தி ஒருவனை எல்லா வகைக் கவலைகளிலிருந்தும் காக்கிறது.

உலகனைத்தையும் சர்வேச்வரன் காக்க வல்லலனு-யிருப்பினும், நீயே என்னைக் காத்தருளவேண்டும் என்ற வேண்டுகோள் இன்றி காப்பதில்லை. விண்ணப்பம் இல்லையேல் எந்த நியமனமும் உலகில் செய்வதில்லையே! அது- போல் நீயே கோப்தாவாக

(காவலனுக) இரு என்று வேண்டுதல் (கோப்த்ருத்வ வரணம்) அவசியமாகும். இந்தக் கருத்துக்களையே தேசிகனுர் ரகஸ்ய த்ரய சாரம் முதலிய பிரபந்தங்களில் மிகவும் விளக்கி நிறுவியுள்ளார். ஸ்ரீ ராமானுஜாசார்யர் மூன்று கத்யங்களிலும் காட்டிய சரணுகதி வழியை மிகவும் பரவலாக விளக்கி உலகிற்கே வழிகாட்டும் வகையில் நிறுவியமை தேசிகனுரின் பெருமையாகும். இவரது ஒவ்வோர் பிரபந்தத்திலும் நேர்முகமாகவோ, மறைமுகமாகவோ இதே கருத்து வலியுறுத்தப்பட்டு வருவதைக் காணலாம். ந்யாஸதசகம் என்ற நூலிலே இக்கருத்தையொட்டி.

நானும், என்னைக் காக்கும்பொறுப்பும், காப்பதால் கிட்டும் பயனும், எல்லாம் எம்பெருமானுக்கே யுரியவை யென்று கருதி, அறிஞன் தன்னைஅவனிடம் ஒப்படைக்கக் கடவன். எம்பெருமானே! உனக்கு அடிமையாய் உன்வசமாய், உன் பொறுப்பானபடியால் தன் பொறுப்பை யிழந்த என்னை, நீ தந்த அறிவிஞல், உனக்காகவே, உன்னிடம் சேர்த்துக் கொள்கிருய் என்று வேண்டுவதாக அமைந்துள்ள ச்லோகங்களைக் காணலாம். இவற்றுல், நாம் பரந்யாஸம் செய்தோம் என்ற இறுமாப்புக்கும் இடமில்லை. அவனே தன் பொருளைத் தானே எடுத்துக் கொண்டு விட்டான் என்று தியானிப்பதே ப்ரபந்நர்களின் மரபாகும். இந்த ப்ரபத்தி செய்பவன், 1. நான் செய்பவன் என்ற எண்ணத்தையும், 2. இது என்னுடையது என்ற மமகாரத்தையும், 3. செயலிஞல் ஏற்படும் பயனில் பற்றையும், 4. பயன் பெற ப்ரபத்தி என்ற உபாயத்தைச் செய்தேன் என்ற கர்வத்தையும் விட்டொழிக்கிருன்.

அடிக்கடி புனிதமான த்வய மஹா மந்திரத்தை தியானித்துக்கொண்டு இருப்பான். இத்தகைய நல்ல ப்ரபத்தி மார்க்கத்தைத் தனக்குக் காட்டியருளிய ஆசார்யர்களின் பரம்பரைக்கு என்றும் நன்றியும் வணக்கமுமுடையோனுவான்.

சரீரம் நீங்குங்காலை மோக்ஷம் வேண்டி ப்ரபத்தி செய்பவன் த்ருப்த ப்ரபத்தி செய்தவன் என்றும், சம்சாரத் துயரம் தாங்கவொண்ணுமல் உடனே மோக்ஷம் வேண்டி ப்ரபத்தி செய்பவனை ஆர்த்த ப்ரபந்நன் என்றும் கூறுவர். இந்த ப்ரபந்நர்களின் கடமைகள் பற்றியெல்லாம் ரஹஸ்ய த்ரய சாரத்திலே விரிவாகக் காட்டப்பட்டுள்ளது. அங்கு அவற்றைக் காணலாகும். இத்தகைய ப்ரபத்தியைத் தம் தீர்க்க தர்சனத்தால் நமக்குத் தர்சனமாக்கித் தந்த தேசிகனுர்க்கு மானிடசமுதாயமே பெரிதும் கடப்பாடுடையதாகும்.

## (வீடு பேற்றுக்கான வழிகள்) - பக்தியும் பிரபத்தியும் (தத்துவம்)

சேதனன் சம்ஸாரம் எனும் கடலைக் கடந்து முக்தியைப் பெற இரண்டு உபாயங்கள் சாத்திரங்களில் கூறப்படுவன - ஒன்று சித்தோபாயம், மற்றொன்று சாத்யோபாயம். சித்தோபாயம் என்பது புதிதாகச் செய்யப்படுவதின்றிமுன்பே நிலையாய் நிற்கும் சாதனமான எம்பெருமானேயாம். அவன் நித்யமான கல்யாணகுணங்களையும், ஸ்வரூபத்தையும் ஐச்வர்யத்தை-யுமுடையவன்; யாவர்க்கும் எது நல்லது, எது தீது என்று எல்லாம் அறிந்தவன்; எதையும் செய்யும் சக்தியுடையவன்.

எவர் துயரத்தையும் துடைக்க வல்லவன். எல்லாப் பிராணிகள் பாலும் நல்லெண்ணமே கொண்டு அவர்களின் துயரம் போக்க முன் நிற்பவன். காப்பதற்கேற்ற தருணத்தை எதிர்பார்த்து நிற்பவன். அவனிடம் சரணாகதியால் எளிதில் வசமாகும் தன்மையினன். ஓர் பயனையும் எதிர்பாராமலே தான் எண்ணுபவருக்கு முக்தி தர வல்லவன். சேதனனுக்கு அவன் உதவுவதால் தானே பயனைப் பெறுபவன். மோக்ஷம் தருவதாகத் தானே ஸங்கல்பம் (எண்ணம்) செய்பவன். இத்தனை பெருமைகளுடன், பிராட்டியுடனே பிரியாமல் நிற்கும் எம்பெருமானே சித்தோபாயமெனப்படுவான்.

அடுத்து சாத்யோபாயம் எனப்படுபவை இரண்டு. மனிதனால் செய்யத் தக்கவையாய் சாத்திரங்களில் விதிக்கப் பெற்று முக்தியைப் பெறச் சாதனமாயுள்ளவை. அவை பக்தி- யென்றும் பிரபத்தியென்றும் இருவகைப்படும். அவற்றுள் பக்தியின் நிலையினைக் காண்போம்.

பக்தி என்பது மனத்தினால் இடைவிடாது தியானம் செய்தல். இதைச் செய்யும் மனம் மிகத் தூயதாயிருத்தல் வேண்டும். இந்த பக்தியை அஷ்டாங்க யோகம் (எட்டு உறுப்புகளை- யுடைய யோகம்) என்றும் கூறுவர். எட்டு உறுப்புக்களாவன யமம், நியமம், ஆசனம், ப்ராணாயாமம், ப்ரத்யாஹாரம், தாரணம், தியானம், சமாதி என்பன. இவற்றுள் முதலேழும் அங்கங்கள் எட்டாவதே அங்கி, அந்த சமாதி நிலையே சிறந்த பக்தியாகும். இந்த பக்தி யோகத்தைச் செய்ய சாதி, ஆச்ரமங்கள் (பிரம்மசர்யம் முதலியன) முதலிய கட்டுப்பாடுகளுண்டு. காலம், இடம், முதலிய கட்டுப்பாடுகளும் உண்டாம். செய்வதற்கு அரியது

இப்பக்தியோகம். எம்பெருமானை எண்ணெயின் தாரை (ஊற்று) போல் இடைவிடாது தியானித்தல் வேண்டற்பாலது. நித்தமும் எண்ணியெண்ணிப் பழகியே இறுதியில் இந்த சமாதி நிலை எய்தலாம். நாம் அனுபவித்து வரும் வினை (ப்ராரப்த கர்மம்) அழிக்கவியலாது. அதனைவிட்டு ஏனைய முற்பிறவியில் செய்து குவித்து வைத்திருக்கும் ஸஞ்சித கர்மாக்களும் இப்பக்தியால் அழிந்துவிடுபவை. பக்தனுயினும், மற்றவனுயினும் அவனுக்கு மரண காலத்தில் இறைவன் எண்ணம் ஏற்பட வேண்டும். அதற்காக அவன் தானே எப்போதும் பெரு முயற்சி செய்து பழகவேண்டும். இத்துணை சிரமங்களுள்ளது பக்தி நிலை. இந்நிலையை மேற் கொண்டே வசிஷ்டர், வாமதேவர், ஜாபாலி, காச்யபர், கௌதமர், விஜயர், ஆஞ்ஜனேயர், பீஷ்மர் முதலானோர் சித்தி பெற்றனர். சாமான்ய மக்களால் மன உறுதிப்பாடற்ற நிலையில் இந்த பக்தி மார்க்கத்தில் சித்திபெறவியலாது.

இதற்கு மாருன உபாயமே ப்ரபத்தியென்னும் சரணுகதி மார்க்கம். இது அவரவர் உள்ளத்தால் எம்பெருமானிடமே வேண்டுவதேயாகும். இதற்குப் பெரும் நம்பிக்கையடிப்படையானது. இதனை ஆறங்க யோகம் என்பர். 1) என்றும் எம்பெருமானுக்கு அனுகூலனுகவேயிருத்தல் பற்றிய உறுதி 2)எதிர்ப்பைத் துறந்திடல் 3)பெருத்த நம்பிக்கை 4) காக்க வேண்டுமென்று வேண்டுதல் 5)தன் எளிமையை (கதியற்ற நிலையை) உணர்தல் 6) சரணுகதி என்பன. இவற்றுள் முதல் ஐந்தும் அங்கங்கள் என்றும் ஆருவதை அங்கியென்றும் பக்தி யோகத்தைப் போலவே குறிப்பிடுவது

வழக்கம். இந்தப் பிரபத்திக்கு சாதி, ஆச்ரமம், காலம், இடம் போன்ற கட்டுப்பாடுகள் கிடையாது. எவரும், எவ்விடத்தும், எக்காலத்தும் மேற்கூறிய அங்கங்களுடன் பிரபத்தியைச் செய்யத் தக்கவர்கள்; மோட்சத்தைப் பெற ஆர்வம் மேலிட்டாலே போதும். இதனை நிறைவேற்றலாம். இதனைச் செய்வது மிகவும் எளிது. தன்னைக் காக்கும் பொறுப்பை எம்பெருமானிடம் ஒப்படைப்பதே ப்ரபத்தியாகும். மோக்ஷத்திற்காக ஒரு மனிதன் ப்ரபத்தியை ஒரு தடவையே செய்யலாம். இதனைச் சிறப்பிப்பதற்கென்று வேறு எந்தச் செயலும் செய்யத் தேவையில்லை. இதனைச் செய்ததுமே பக்தியைப்போல் - ப்ராரப்த கர்மாக்கள் (அனுபவித்து வரும் வினைகள்) தவிர ஏனையவை யழிந்துபோம். இறுதி காலத்தில் எம்பெருமானைப் பற்றிய நினைவு வரவேண்டும் என்ற கட்டாயம் ஏதுமில்லை. அவனருளால் அந்த நினைவும் ஏற்பட்டுவிடும்.

இத்தகைய சிறந்த உபாயமான ப்ரபத்தியைக் கூடச் சிலர் உபாயமில்லையென்று கூறக் காரணம் - எம்பெருமானின் ஸங்கல்பத்தினடியாகவே ப்ரபத்தி பலன் தருவதால், இதையே நேரான உபாயமாகக் கொள்ள வேண்டாமென்ற கருத்தேயாகும்.

ஜீவர்கள் பக்தியோகத்தைச் செய்யத் தகுதி யற்றவராய் இருக்கையில் பக்தி என்று கூறும் கைம்முதலற்றவராய் சரணுகதியையே பற்றுகின்றனர். பக்தி செய்வோர்க்கும், ப்ரபத்தி செய்வோர்க்கும் எம்பெருமானே கர்மத் தொடர்பை நீக்கி மோக்ஷமென்னும் ஆனந்தத்தைத் தருகின்றுன். அதனையும் தன் ஸங்கல்பத்தாலேயே தருகிறுன்.

சரணடைந்தவரை எவரும் துன்புறுத்தவியலாது ஹிரண்யகசிபுவால்பிரஹ்லாதனுக்கும், ஸுமுகன் என்ற சர்ப்பத்திற்கு கருடனாலும் ஒன்றும் தீங்கு செய்ய முடியவில்லை. எம்பெருமானால் வெறுக்கப்பட்ட சேதனரை யாரும் காக்க முடியாது. எவரையும் சமமாக எம்பெருமான் எண்ணுபவன். ஆயினும், குற்றவாளிகளைத் தண்டிக்கவும், நல்லோரைக் காக்கவும் அவன் தவறுவதில்லை.

சேதனர் யாவரும் வைகுண்டத்தில் பேரானந்தம் பெறத் தகுதியுடையவர்களே. தந்தையின் சொத்தில் தனயனுக்கு உரிமையுண்டல்லவா? ஆனால், தன் நிலையுணராமல் சேதனன் ஸம்ஸாரத்தில் உழலுகின்றான். அதற்கு முன்வினையே காரணமாகும். அதுவே மோக்ஷம் பெறத் தடையாகிறது. இந்நிலை மாற, நல்ல ஆசார்யன் உபதேசிக்கும் உபாயமே ப்ரபத்தி வழி. எட்டெழுத்துத் திருமந்திரம், த்வயம் - சரமச்லோகம் எனும் மந்திரங்கள் ப்ரபத்தி வழியை நுட்பமான பொருட்களை ஆசார்யரே விளக்குகின்றனர். இதனைச் செய்தால் நிச்சயமாய் மோக்ஷம்கிட்டும் என்ற நல்ல நம்பிக்கை இவனுக்கேற்படுகிறது. எம்பெருமானே ஆசார்யனின் வடிவில், நமக்கு சாஸ்திரம் என்னும் கை கொண்டு ஸம்ஸாரமென்னும் கடலில் விழுந்து தவிக்கையில் நம்மைத் தூக்கிக் கரை சேர்ப்பிக்கின்றான். இத்தகைய பேருதவியால் ஆசார்யன் மோக்ஷத்திற்கு மறைமுகமான காரணமாகின்றான். புண்டரீகன் என்னும் ஓர் புண்யசாலி ஆசார்யனருளால் முக்தி பெற்றான். க்ஷத்திரபந்து என்னும் பாவியும் அவ்வாறே முக்தி பெற ஆசார்யனருளே

காரணமாய் நின்றது. ஆதலின், எதற்கும் நல்லாசாரியனின் அருள் இன்றியமையாதது. எம்பெருமானை விட ஆசார்யனருளே மிகச் சிறந்த உபாயமென்று சான்றோர் நிறுவினர்.

இந்த எம்பெருமானின் பக்கத்தில் என்றும் விட்டுப் பிரியாமல் உறைபவள் அலர்மேல் மங்கையாம் திருமகள்- எல்லோருக்கும் தலைவி. ஆனல், எம்பெருமானுக்கு மட்டும் குற்றேவல் புரிபவள். எல்லோருக்கும் அருள் புரியும் தன்மையே யுடையவள். சீற்றத்தையே யறியாதவள். எம்பெருமானுடனேயே நின்று, சரணடைந்தோர் யாவர்க்கும் தாயாய் நின்று காப்பவள். எம்பெருமான் குற்றம் செய்தோரைத் தண்டிப்பவன். தந்தைபோல் சிறிது சீற்றத்துடன் அடக்கியாள்பவன். ஆதலால், குற்றம் செய்தோர் அவனையணுக அஞ்சுவர். அவ்வாறு அஞ்சாமல் எம்பெருமானின் கடுமையை இவள் மாற்றி சாந்தப்படுத்துவாள். இவ்வுலகில் குற்றமில்லாதவர் யாருளர்? என்பதாய்க்கூறி எளிதில் அவர்களை அவன் திருவடிகளில் சேர்த்துவிடுவாள். இதனல் சேதனர் பால் அன்பும், எம்பெருமானிடம் உள்ள உரிமையும் இவளை இவ்வாறு புருஷகாரமாக நிற்கச் செய்கிறது. சேதனரின் குற்றங்களைப் புறக்கணித்துப் பரிந்து பேச வைத்து, அவன் தட்டாதவாறு காக்கச் சொல்லும் பரிவு நிலையைப் புருஷகாரம் (பரிந்து பேசல்) என்று கூறுவர்.

இவ்வாறு அவனிடம் அவர்களைச் சேர்த்தபின் அவர்கள்பால் மேலும் மிக்க அன்பு கொள்கிறள். பின்பு ஒரு கால் அவர்கள்பால் எம்பெருமானுக்குள்ள அன்பைச் சோதனை செய்ய நினைத்து, அவர்களின்மீது சில

குற்றங்களை எம்பெருமானிடம் கூறுவாள். அதைக் கேட்ட எம்பெருமான் "என்னடியார் அது செய்யார், செய்தாரேல், நன்று செய்தார்" என்பர். எனதன்பர்கள் தவறே செய்யார். அப்படி ஏதேனும் செய்தாலும் அவை நல்லவையாகத் தானிருக்கும் என்று உறுதியாகக் கூறுவானும். இந்த அளவிற்கு எம்பெருமானுக்கு அடியார் திறத்தில் உறுதியான அன்பு ஏற்பட்டமை கண்டு தேவி மகிழ்வாளாம். இவ்வாறு சேதனரைக் காப்பவள் அவள்; இறைவன் தண்டதரன் என்ற நிலையில் இருப்பதால் இவ்வாறு புருஷகாரமாகத் தாயின் துணை மிகவும் இன்றியமையாததாகிறது. இந்தத் தண்டனை ஏன் சேதனனுக்கு ஏற்படுகிறது? என்று வினவலாம். அநாதி காலமாக இறைவன் வேத சாத்திரங்களில் இட்ட விதியை இவன் மீறுவதே தண்டனைக்குரியதாம். இவ்வாறு குற்றங் கண்டவிடத்துத் தண்டிக்கும் எம்பெருமானை வசப்படுத்தும் உபாயம் எளியோர் யாவரும் செய்வதற்குரியதான தன்னைக் காக்கும் பொறுப்பை ஒப்பித்தல் (ஆத்மரக்ஷா பர சமர்ப்பணம்) என்னும் ப்ரபத்தி வழியே. பக்தியோகத்தைச் செய்யத் தகுதியற்றோரும் இதனைச் செய்யலாம். இது வேண்டும் பலனையெல்லாம் தரவல்லது. பக்தி யோகத்தில் ஈடுபட்டோரும் அதில் செய்ய முடியாத பகுதிகளுக்காக இவ்வாறு ப்ரபத்தி செய்யலாம். அதனைப் பக்திக்கு அங்கமான ப்ரபத்தி யென்பர். இதனால், பக்தியின் குறைபாடு நீங்கும். சிலர் மரணகாலம் வரை தாமதிக்க மாட்டாதவராய் உடனே மோக்ஷம் வேண்டுமென்று வேண்டலாம். மரணமானபின், மோக்ஷம் வேண்டுபவர் த்ருப்த ப்ரபத்தி செய்பவர் என்றும், உடனேயதனை வேண்டுபவர் ஆர்த்த

ப்ரபத்தி செய்வோர் என்றும் கூறப்படுவர். இதன் அங்கங்கள் யாவும் செய்வதற்கெளியவை. இதை ஒரு முறையே செய்யவேண்டும். இப்ப்ரபத்தியின் உயிர் நிலை தன்னைக் காக்கும்பொறுப்பினை எம்பெருமானிடம் ஒப்படைத்-தலேயாகும். தன்னைக் காத்துக்கொள்ள நாம் மேற்கொள்ளும் ஓர் உபாயமிது என்ற எண்ணம் கூட ப்ரபத்தி செய்வோனுக்கு இருத்தல் தகாது. எம்பெருமானே உபாயமும் உபேயமுமாய் நம்மைக் காக்க வல்லவன் என்ற உறுதியுடன் இதனை ஒரு வியாஜமாக (சாக்காக)வே எண்ண வேண்டும்.

ஒரே முறை ப்ரபத்தி செய்தால் போதுமானது என்பதற்கு பற்பல எடுத்துக்காட்டுக்கள் உள்ளன. இராமபிரான் அவ்வாறே அருளிச் செய்தார். சாஸ்த்ரமும் அவ்வாறே விதிக்கின்றது. ஆளவந்தாரும் எம்பெருமானாரும் இவ்வாறே செய்யுமாறு ஸம்பிரதாயத்தைக் காட்டியுள்ளனர். திரௌபதி, கஜேந்திரன், விபீஷணன், ஸுமுகன் (ஸர்ப்பம்), காகம், புரு - இவர் வரலாறுகள் யாவும் ஒரு முறையே ப்ரபத்தி போதுமானதென்று காட்டுகின்றன. பக்திமார்க்கமோ இவ்வாறின்றி பலன் கிட்டும் வரையும் இடைவிடாமல் செய்து கொண்டேயிருக்க வேண்டியதொன்று. ஆதலின், கடினமானதுங்கூட.

ஓர் ஐயம் ஏற்படலாம். ஆசார்யன் ப்ரபத்தி செய்விக்கிறுன். சீடனுக்குப் பலன் எப்படி ஏற்படும்? வினை செய்தவனுக்- கேயன்றே ஒரு உலகில் பயன் ஏற்படக் காண்கிறேம். எனில் புதல்வன் (குழந்தை) பொருட்டு தந்தை ஜாதகர்மா (ஆயுஷ்யஹோமம்)முதலிய

செயல் செய்தபோதும், குழந்தை பலனைப் பெறுகிறதல்லவா? சாஸ்த்ரம் இவ்வாறு செய்ய வழியை விதித்துள்ளது. பராசரர், சௌனகர், முதலியோர் உலகம் நல்வாழ்வு பெற எம்பெருமானைப் பிரார்த்தித்தது போலவே, இதுவும் பொருந்தும். தந்தைக்காக ப்ரஹ்லாதனும், தன் தோழர் நால்வருக்கும் விபீஷணனும் தன் பிள்ளைகளுக்காகத் தசரதன் பரசுராமனிடமும், திரௌபதி தன் கணவருக்காகச் கண்ணனிடமும் சரணாகதி செய்தனர். ஆழ்வாரும் இவ்வாறு ஆசார்யர் வாயிலாக ப்ரபத்தி செய்யும் முறையை விளக்கியருளினர்.

இவ்வாறு முந்தையோரின் செயலைப் பார்த்தால் ப்ரபத்தியைத் தனக்குத் தானேயோ - பிறர்வாயிலாகவோ செய்வித்துப் பயனைப் பெறலாமென்று தெரிகின்றது.

## ஒரே முறை ப்ரபத்தி

சேதனன் ஒரு குறிக்கோளுக்காக ஒரே முறை ப்ரபத்தி செய்யலாம். இருமுறை செய்யத் தேவையில்லை. முதலில் 5 அங்கங்களுடன் செய்திடும் ப்ரபத்தியை வேறொன்றையும் எதிர்நோக்காது பயன் தரவல்லது. ஆயினும் ப்ரபந்நன் உயிருள்ளவும் சிற்சில பணிகளை (கைங்கர்யங்கள்) செய்து கொண்டிருக்க வேண்டும். இவற்றால், எம்பெருமானுக்கு மிக்க உவப்பு ஏற்படுவதே பயன்.

மறுபடி ப்ரபத்தி செய்யும் சந்தர்ப்பங்களும் சிலவுண்டு. அவையாவன: 1) தன் பக்தியை வளர்த்துக் கொள்ள. 2) தத்துவ ஜ்ஞானம் பெருக. 3) ஆலயங்களில் எம்பெருமானின் ஐச்வர்யம் பெருக. 4) பாகவதர்களின் ஸம்ருத்திக்காக. 5) மரணம் வரை கால விளம்பத்தைப்

பொறுமல் உடனே மோக்ஷம் வேண்ட. 6) ப்ரபத்தி செய்து கொண்ட பின்னர் அறிந்து செய்த தீவினைகள் கெடப் பிராயச் சித்தமாக - என இப்படி மறுமுறை செய்து கொள்ளும் ப்ரபத்தியினுல் முதலில் செய்துகொண்ட ப்ரபத்திக்கு ஏதேனும் குறையென்பதில்லை.

ப்ரபத்தி செய்தவன் க்ருத க்ருத்யன் எனப்படுவான். பிறவியில் செய்யவேண்டியவற்றைச் செய்தவன் என அதற்குப் பொருள். இப்படிப் பெயர் பெற்றுலும் இவன் வர்ணம் - ஆச்ரமத்திற்குரியபடி சாஸ்த்ரமென்பது இறைவன் இட்ட கட்டளையேயன்ரே? இந்தக் கருமங்களை இவன் செய்வது எந்தப் பயனையும் கருதியில்லை. இவற்றைச் செய்யாவிடில் எம்பெருமான் கட்டளைக்குக் கீழ்ப்படியாதவன் என்ற குற்றம் இவனைச் சார்ந்திடும்.

ப்ரபன்னன், பிற தெய்வங்களைத் தொழான். பக்தி, ப்ரபத்தி பற்றி நல்லறிவுள்ளவன். தன் சக்திக்கேற்ப வர்ணுச்ரம தர்மங்களை இவன் செய்தேயாக வேண்டும். விடலாகாது. அவை எம்பெருமானின் உவகைக்-கானவையே.

எம்பெருமானின் கைங்கர்யத்தினைச் சுவைத்த ப்ரபந்நனுக்கு வர்ணுச்ரம தர்மங்கள் எதற்கு? என்று கேட்கலாகாது. ப்ரபந்நன் இம்மையின்பம் கருதிய காம்ய கர்மாக்களைச் செய்யலாகாது. பாவங்களையும் செய்யலாகாது. ஸந்தியா வந்தனம் போன்ற நித்ய கர்மாக்களையும், பித்ருக்களுக்கான சிராத்தம் தர்ப்பணம் போன்ற கர்மாக்களையும் செய்யவேண்டும். தர்மம் குலையாமலிருக்கவும், தர்மம் நிலைகெடாமைக்கும் குலப்

பெருமையைக் காக்கவும், இவன் கர்மாக்களை விட்டுவிடாமல் செய்யவேண்டும். அவ்வாறின்றி அவற்றை யிவன் விட்டால், இவனைப் பின்பற்றும் உலகத்தாரும் அவற்றைவிட்டுக் கெட்டுவிடுவார். ஆதலின், அதனைத் தடுக்கவும், வர்ணாச்ரம தர்மங்களின் கட்டுக்கோப்பைக் குலையாமல் காக்கவும் பெருமான், பிராட்டிமார்களின் திருவுள்ளம் உவக்கவுமே கர்மாக்களைச் செய்து தீரவேண்டுமென்று சாஸ்திரங்கள் விதிக்கின்றன.

## ஆஜ்ஞா கைங்கர்யமும் - அநுஜ்ஞாகைங்கர்யமும்

ப்ரபன்னன் தன் வாழ்நாளில் செய்து வரவேண்டிய கர்மாக்களை ஆஜ்ஞா கைங்கர்யம் என்றும் அநுஜ்ஞா கைங்கர்யம் என்றும் இருவகையாகப் பிரிப்பர். ஒவ்வொரு ஜாதிக்கும், ஆச்ரமத்திற்குமாக வேதங்களிலும் சாஸ்திரங்களிலும் விதிக்கப்பட்ட செயல்கள் ஆஜ்ஞா கைங்கர்யம் எனப்படும். தூய உணவையே யுண்ணல், பாவங்களைச் செய்யாமை, நல்ல ஆசாரம் முதலியவை இதில் அடங்கும். இவற்றைச் செய்வது கட்டாயம். மீறினுல் குற்றமாகும். அது எம்பெருமான் சீற்றத்திற்கு ஏதுவாகும்.

அநுஜ்ஞா கைங்கர்யம் என்பது எஞ்சிய நேரங்களில் எம்பெருமானின் திருக் கல்யாண குணங்களைத் தியானித்துப் போற்றுதல். அவனைத் துதித்தல், திருநாமங்களை அடிக்கடி கூறிப் பஜனை செய்தல் கோயிலைப் பெருக்கி மெழுகிக் கோலமிட்டு அலங்கரித்தல், மலர் மாலைகளைக் கட்டி ஸமர்ப்பித்தல் திருவிளக்குகளை ஏற்றுதல் முதலியன. இக் கைங்கர்யங்களை நம் இஷ்டப்படி செய்யலாம்.

செய்யாவிட்டாலும் குறையொன்றும் வராது. ஆதலின், இவையெல்லாம் எம்பெருமானின் அனுமதியால் செய்யப்பெறுபவை யென்பதால் அனுஜ்ஞாகைங்கர்யம் எனப்படும். இவ்விரு கைங்கர்யங்களுமே அவனுக்கு மிகவும் உவப்பைத் தருவன. கற்புடை மங்கை கணவனின் உகப்பையே பெரிதும் நாடுவதுபோல், பக்தன் எம்பெருமான் உவப்பவற்றையே செய்கிறான். அதைத் தவிர வேறு பயனேதும் எதிர் பார்ப்பதில்லை. கைங்கர்யத்தின் பயன் கைங்கர்யமே. அதுவே பக்தனுக்கு இம்மையிலும் முக்தியிலும் பேரின்பமாகும்.

பக்தியோகத்தில் ஈடுபட்டவன் பக்திக்கு அங்கமாக ப்ர-பத்தியைச் செய்கிறான். ப்ரபத்தியையே நேரான உபாயமாகச் செய்கையில் ஸ்வதந்திர ப்ரபத்தி எனப்படும். இவ்விரு வகையினரும் மோக்ஷமன்றி பயனையோ ஸ்ரீமந் நாராயணனைத் தவிரபிற தெய்வங்களையோ நாடாதவராதலின் பரமைகாந்தீ என்றழைக்கப்படுவர்.

ப்ரபன்னனும் சில வேளைகளில் அறிந்தோ அறியாமலோ செய்யவேண்டிய கர்மாக்களை விடுவதும் செய்யத் தகாதவற்றைச் செய்துவிடலும் நேரக்கூடியவையே. இவ்விரண்டும் எம்பெருமானின் கட்டளையை மீறிய செயல்களே. பல மஹான்கள் தவறு செய்தும் தம் தவ வலிமையினால், தம்மைச் சமாளித்துக் கொண்டுள்ளனர். அவர்களைப் பார்த்து எளியோரும் தவறுகளை இழைக்க முற்படலாகாது. தவறு செய்வோர்க்கும் புண்ணியங்கள் நீங்கிவிடும். ஆகவே, தெரிந்து கொண்டே பிரபந்நன் தவறு செய்தால் தண்டனையுண்டு. நரகம் போன்றவை இல்லாவிடினும், அவன் தன் சக்திக்கேற்றவாறு

கழிவிரக்கம் கொண்டு சில கழுவாய்களை (பிராயச் சித்தங்களை) செய்துகொள்ள வேண்டும். இல்லையேல், இம்மையிலேயே இறைவனின் சீற்றத்தால் தண்டிக்கப்-படக்கூடும்.

அரச குமாரனுயினும், அரசனுக்குச் சீற்றம் வராமல் நடக்க முயல்வதுபோல், எம்பெருமானுக்கு உகந்தவனுயினும் ப்ரபந்நன் சிறு தவறும் நேராதவாறு நடக்க முயலவேண்டும். இல்லையேல் நீதிப்படி அரசன் போல் இறைவன் இவனைத் தண்டிக்கக்கூடும். தவறிழைத்தவன் சக்திக்கேற்ப கழிவிரக்கம் கொண்டு ப்ராயச் சித்த ப்ரபத்தியையோ, பிராயச் சித்தங்களையோ செய்தே தீரவேண்டும். இல்லையேல் இறைவன் சீற்றத்தால் தண்டிக்க நேரிடும்.

ப்ரபந்நன் விழிப்புடனிருக்க வேண்டிய நிலை பற்றி முன்னோர்கள் சாஸ்திரங்களில் சில வழிகளை வகுத்துத் தந்துள்ளனர். அவையாவன: மனிதன் தன் நான்கு உறுப்புகளை அடக்கியாள வேண்டும். சிற்றின்பத்திற்கான உறுப்பு, வயிறு, கை, நாக்கு என்ற நான்கில் முதலுறுப்பைக் கட்டாயம் அடக்கவேண்டும். ஆசையால் வரும் கேடுகளையும், பாவங்களையும் சரித்திர வாயிலாகவும் நடைமுறையிலும் தெளிந்தவன் இவ்வுறுப்பினுல் இன்பம் பெற விழைய மாட்டான். வயிற்றை நிரப்ப நல்ல உணவுகளையே நாடவேண்டும். ஸாத்விகமல்லாத உணவுகளை விரும்பலாகாது. எதற்கும் மனக் கட்டுப்பாடு தேவையானது. அடுத்து, கை. இதனைத் திருடல், தவருன செயல்களைச் செய்தல், தீயவற்றை எழுதுதல் முதலியவற்றில் ஈடுபடாமல் நல்ல

ஸாத்வீகமான கார்யங்களைச் செய்வதிலேயே ஈடுபடுத்த வேண்டும். இறுதியாக, வாய் (நாக்கு) இது எதனையும் தின்னவும், பேசவும் விரும்புவதால் மிகப் பெரிய தொல்லைகள் ஏற்படுகின்றன. இதனை அடக்கியே தீரவேண்டும். நாவடக்கம் என்பது உணவுக்கும் பேச்சுக்கும் பொதுவானது. இதனைக் கருதியே திருவள்ளுவ நாயனாரும்,

யாகாவா ராயினும் நாகாக்க; காவாக்கால்
சோகாப்பர் சொல்லிழுக்குப் பட்டு.

என்று கூறியருளினார்.

இவ்வாறு நான்கு உறுப்புக்களையும் கட்டுப்படுத்தி எப்போதும், எம்பெருமானின் கைங்கர்யம் மோட்சத்தில் விரைவில் கிட்ட விருப்பதை எண்ணியவாறு பாவச்செயல்களைத் தவிர்த்து நற்செயல்களிலேயே நாட்டங் கொண்டு வாழ வேண்டும். ப்ரபன்னன் செய்யும் நல்ல செயல்களால் மோக்ஷம் கிட்டுமென்பதோ, தீய செயல்களால் அது தடைப்படும் என்பதோ இல்லை. ப்ரபத்தி செய்தவுடனேயே சத்திய ஸங்கல்பனான எம்பெருமான் இவ்வுடலின் இறுதியில் மோக்ஷம் தருகிறேன் என்று உறுதியளித்து விடுகிறான். ஆதலின், அவன் அதினின்று பிறழ்வதில்லை. நல்ல செயல்களால் அவன் உவகையடைகிறான். தீயவற்றால் சீற்றம் கொண்டு தண்டிக்கிறான் என்பதே அச்செயல்களின் பயன்களாகும்.

எம்பெருமான் சர்வத்தையும் செய்யச் சக்தியுடையவன். அளவிலாக் கருணையாளன். சேதனன் அவன் திருவடிகளில் எப்பயனைக் கோரிப் ப்ரபத்தி செய்தாலும், அது தக்க காலத்தில் உறுதியாய்க் கிடைக்கும்.

ப்ரபத்திக்குப் பின்னர் தவறுகளையோ காம்யார்த்தமான செயல்களையோ செய்தால்கூட அவன் அவற்றிற்காக பிராயச்சித்தமாக சில செயல்களைச் செய்திட்டால் போதும். அப்படி அவன் செய்யாவிட்டால், எம்பெருமானே சிறு சிறு தண்டனைகளைக் கொடுத்து அவனைத் தூயவனுக்கி விடுவான். அதனுல் முக்கிய பலனுன முக்திக்குத் தடையேதும் வராது. இவ்வாறு எம்பெருமான் முக்தியைத் தந்தே தீருவான் என்பதற்குச் சில காரணங்கள் உள்ளன.

1. ஸர்வ ரக்ஷகனுன எம்பெருமான் மிக்க பாவியே சரணடைந்தாலும் காத்தேதீருவான் என்பது இராம-கிருஷ்ண அவதாரங்களில் அருளிய அவன் சொற்களைக் கொண்டே புலனுகிறது.
2. எல்லாத் தவங்களிலும் ப்ரபத்தியே சிறந்த தவமென்று சாஸ்திரங்கள் கூறுகின்றன
3. கீதையில் - பலன் கருதாமல் செய்யும் தருமம் இடையில் விட்டுவிட நேர்ந்தாலும் கெடுவதில்லை. பாவமும் அதனுல் ஏற்படாது. சிறிதே செய்து நிறுத்திய தர்மமும் பெரிய ஆபத்தினின்றும் காக்கும், என்று கூறியுள்ளதைக் காண்கையில் ஸாதாரண தர்மத்துக்கே இத்தனை சிறப்பு இருப்பதால் பிறபயன் கருதாமல் மோக்ஷத்தையே நினைத்து செய்யும் ப்ரபத்தி வீணேயாகாதென்பது வெள்ளிடை மலை.
4. காம்ய கர்மாக்களையும், விலக்கிய செயல்களையும் விட்டு விட்டு, ப்ரபத்தி என்னும் நடுநிலையில் நிற்கவேண்டுமென்று சாஸ்திரங்களின்

கருத்திருப்பதால் அந்த நடுநிலைக்கோ மோக்ஷத்திற்கோ கேடு ஏதுமில்லை.

5.. இலங்கையில் ஆஞ்சநேயரை பிரஹ்மாஸ்திரத்தால் கட்டியபின் அரக்கர்கள் பிற கயிறுகளாலும் கட்டவே அஸ்த்ரம் விலகி விட்டதுபோல் ப்ரபத்தி செய்தபின் நம்பிக்கை குறைந்தால் அது பயனற்று விடுமே என்றும் ஐயப்பட வேண்டுவதில்லை. ப்ரபத்தி வேளையில் நம்பிக்கை குறைவாயிருந்தாலே அது பலிக்காது. பின்னர், குறைவாயிருப்பின் ஒன்றும் மாசு ஏற்படுவதில்லையாம்.

6. பொய் பேசுவதால் யாகம் வீணாகும்; கர்வத்தால் தவமழியும்; அந்தணனை அவமதிப்பதால் ஆயுள் குறையும்; தற்பெருமையால் தானம் மதிப்பிழக்கும் என்பது போல் ப்ரபத்திக்கு ஒருவிதத்திலும் குறைபாடு கூறப்படுவதில்லை. ஆதலின், மோக்ஷத்திற்கும் தடையேதுமில்லை

7. உலகிலோ, வேதத்திலோ, சக்தியும், கருணையும் மிக்கவனிடம் சரணடைவது எக்காலத்தும் வீணானதைக் கண்டோமில்லை.

8. பரதனின் ப்ரபத்தி இராமன்பால் வீணாயிற்றே யெனச் சிலர் ஐயுறுவர். அதுவும் சரியில்லை. பரதனுக்கு வந்த பழியைத் தீர்த்துப் பாதுகைகளை நாடாளுமாறு தந்தருளிய செயலால் முதலில் ப்ரபத்தி பயன் பெற்றது. தேவர்களின் சரணாகதிக்குப் பயன் இராவண வதமாகையால் அதனை நிறைவேற்ற வேண்டிய நிலையில் பரதனின் வேண்டுகோள் உடனடியாக

அதனை நிறைவேற்ற முடியாத படியால், இராவணனைக் கொன்றபின் அவன் ப்ரபத்திக்குப் பலனைகத் தான் முடிசூட்டிக் கெண்டனன். ஆதலின், ப்ரபத்தி எங்கும் வீணவை தில்லை. உரிய காலத்தில் அதற்குப் பயனுண்டு.

9. எம்பெருமானைச் சரணடைந்தால், உடனே விரும்பிய பலன் கிட்டும் என்று சாஸ்திரம் விதிப்பதால் ப்ரபத்திக்கு ஏதும் தடையில்லையாம்.

**ப்ராயச் சித்தங்கள் (கழுவாய்கள்)**

ஒரே வகைப் பாவத்தைப் பலர் செய்தாலும், அவரவர் தகுதிக் கேற்றபடி பிராயச் சித்தமும் உண்டு. ப்ரபந்நன், ப்ரபத்தி செய்யாதவன், வெவ்வேறு சாதியினர், ஆச்ரமத்தினர் வாலிபம், முதுமை முதலிய பருவங்களைச் சார்ந்தவர்,சக்தியுள்ளவன், இல்லாதவன், இந்நிலைகட்கேற்ப உரிய பிராயச் சித்தங்கள் செய்து கொள்ளவேண்டும். எளியோருக்கு எளியதும், வலியோருக்குக் கடினமுமான பிராயச் சித்தம் விதிக்கப்படுகிறது. ப்ரபந்நன் கூடத் தெரிந்தே பாவங்களைச் செய்தால், க்ருச்ரம், சாந்த்ராயணம் முதலிய பிராயச் சித்தங்களைச் செய்ய நேரிடும். சக்தியற்றவன் மறுபடியும் ப்ராயச் சித்தப்ரபத்தியைச் செய்து கொள்ளவேண்டும்.

இங்கு ஓர் ஐயம் எழுவதுண்டு. ப்ரபந்நனை பின் ஒரு பாவமும் தாமரை இலையில் தண்ணீர் போல ஒட்டாது என்று வசனம் உள்ளதே. ஆதலின், அவனுக்கு இந்தப் பாவங்களால் ஒரு தடையும் வர முடியாதே யென்பதேயது. பாவம் ஒட்டாது என்ற வசனம் ப்ரபத்தியின் பெருமையைக்

காட்டவே தோன்றியது. அறியாமல் செய்த பாவம் ஒட்டாதென்றே பொருளை பூர்வாசார்யர்கள் நிறுவியுள்ளனர்.

இவ்வாறு ப்ரபந்நனைக் தக்கவாறு பிராயச் சித்தம் செய்து கொள்ளத் தூண்டுபவன் எம்பெருமானே. கடினமான முரட்டுத்தனம் வாய்ந்தவர்களைச் சில சிட்சைகளால் திருத்துபவனும் அவனே. முரட்டுச் சிறுவனை அச்சுறுத்தித் திருத்த, தந்தை சாட்டையைக் காட்டுவது போலவே, இவனைத் திருத்த அவன் செய்யும் அருள் வழியிது.

ப்ரபந்நன் ஆசை, பொய், பிறரைத் துன்புறுத்தல் இவைகளை விட்டு வாழ வேண்டும்.மனைவி, மக்கள், வீடு, செல்வம் முதலியவற்றில் அளவற்ற பற்று கூடாது. இப்படியுள்ள நல்லவனுக்கும் இல்லறத்தில் சில இன்பங்கள் ஒருவனுக்குக் கிடைக்குமாயின், தர்மத்திற்கு மாறுபாடில்லாமல், அவற்றைத் துய்க்கலாமென்பது சாஸ்திரக் கருத்து. ஆனால், மோக்ஷத்தை விரும்புபவன் இன்பங்களைப் போக்யம் (இனியது) என்றெண்ணி அவற்றில் ஈடுபடலாகாது. தன் காயத்தை (உடல்) ஒரு காயமாகவும் (புண்) உணவு, நீர் அருந்துதலை காயத்தையாற்றும் மருந்தாகவும், ஆடையைக் காயத்திற்காகக் கட்டுப் போடுவதாகவும் எண்ணி இன்பங்களைச் சாரமற்றவை யென்றும் கருதியே யனுபவிக்க வேண்டும். வைராக்யம் (பற்றின்மை) ஜ்ஞானம், பக்தி இவை வளர மருந்துண்பதாகவே இவ்வின்பங்களை யனுபவித்தல் வேண்டும்.

ஆனால், சில ப்ரபந்நருக்கு அநாதியான கெட்ட பழக்கத்தாலே புத்தி கெட்டு தவறான இன்பங்களிலேயே மிக்க ஈடுபாடேற்படும். அவை கைங்கர்யங்களிலே ஆர்வத்தைக் குறைத்து அமுத இன்பத்தையழித்துவிடும். இந்நிலை நீரருந்துவோருக்குத் துரும்பு தடையாவது போலச் சிறிது மோக்ஷத்திற்குத் தடையாகும். ஆதலின், உலக இன்பங்களில் பிரபன்னன் அஞ்சி நடக்க வேண்டும்.

ப்ரபந்நன் தன்னைத் தானோ பிறரோ காக்கவியலாதென்றும், காக்கும் கடமையும் தமக்கோ பிறருக்கோ இல்லையென்றும் உணரவேண்டும். உலகில் எல்லாப்பொருட்களும் எம்பெருமானின் கைங்கர்யத்திற்கே ஏற்பட்டன. அவை தமக்கோ பிறருக்கோ அல்ல என்றும் தம் இன்பம் யாவும் இறைவனின் இன்பத்தில் அடங்கியவையென்றும் உணரவேண்டும். ஆகவே, தடுக்கப்பட்ட இன்பங்களில் ஈடுபாடு, அம்ருத ரஸத்தைச் சுவைப்பதற்குத் தடையாதலின் நஞ்சு போல விலக்கத் தக்கதாம்.

இன்பத்திற்குரிய பொருட்களிடம் மனிதன் அணுகும்போது, அவற்றை விட முடியாதபடி அவன் பாவங்கள் புத்தியைக் கலக்கி இன்பத்தில் ஆழ்த்திவிடும். பாம்புடன் ஒரு கூரைக் கீழ் வசிக்க அஞ்சுவது போலவே தகாத போகங்களுக்கிட மில்லாத இடத்தில் வாழவே முயலவேண்டும். ஒருவன் செய்த பாவத்தால் அவன் புத்தி கெடுகிறது. புத்தி கெட்டால் பாவத்தையே செய்கிறான். இவ்வாறு ஒரு பாவம் நேரிட்டால், இதற்கு முன்பு செய்த பாவமே காரணமென்றுணர்ந்து ப்ரபந்நன் அதற்காகப்

ப்ரபத்தி செய்து பாவம் மேலும் வளராமல் காத்துக் கொள்ளவேண்டும். இத்தகையவனைத் தேவர்களும், எம்பெருமானும் போற்றுவார்கள்.

தேவையற்ற கூட்டங்களைப் பாம்பு போல் வெறுத்தும், பிறரின் வெகுமதியை மரணம்போல் எண்ணியும் பிறர் மனைவியைத் தீண்டல் சவத்தைத் தீண்டுவதென எண்ணியும் ஏகாந்தமாக வாழவேண்டும். பிறர் மீது குற்றம் காண்பதில் குருடராய், பிறர் மனைவியர்பால் பேடிகளாய், பிறரைப் பழிப்பதில் ஊமையாய் உள்ளவர்களையே எம்பெருமான் நேசிக்கிறுன்.

கைங்கர்யமாவது, எம்பெருமான் உகந்த ஏவல்களைச் செய்தல். சாஸ்திரங்களிவ் விதித்தவற்றையே அவன் ஏவல்கள் எனல் வேண்டும். நித்யர், முக்தர்கள் அவனை நேரிடக் கண்டு, அவன் உகந்த கைங்கர்யங்களைத் தாம் பெற்றனர். இவ்வுலகிலுள்ள சேதனர்களோ இந்திரியங்களின் துணை கொண்டு அறிவைப் பெற்று செயலாற்றுவர். இந்திரியங்கள் செல்ல வொண்ணுத எம்பெருமான் ஸ்ரீவைகுண்டம் போன்றவற்றை யறிய சாஸ்திரங்களே நமக்குக் கண்ணுகும். அவையே கைவிளக்குமாகும். அவற்றைவிட்டு, தம் விருப்பப்படி நடப்பவன் இம்மை மறுமைப் பயன் எதையும் பெற வியலாது. அவற்றிற்கு விலக்கான செயல்கள் அஸுரச் செயல்கள் என்றும் நூல்கள் கூறும். எந்த கைங்கர்யத்தையும் சாஸ்திர விதிப்படி செய்வதே ஏற்றமானது. எம்பெருமானின் திருவுள்ளத்துக்கு உவப்பளிப்பது எது?

வெறுப்பூட்டுவதெது? என்பவற்றை சாஸ்திரங்களால் தான் அறியக்கூடும்.

பகவத் கைங்கர்யம், பாகவத கைங்கர்யம் இரண்டுமே அவன் உகப்பையூட்டுவனவாம். இரண்டையும் ஒரே சமயத்தில் சேர்த்தும் செய்ய முடியாதவன், யாவரும் விரும்பத் தக்க பரம புருஷார்த்தமான பாகவத கைங்கர்யத்தையே சிறப்பாகச் செய்யவேண்டும். இரண்டுக்குள் போட்டி வந்தால், பகவத் கைங்கர்யத்தை விட பாகவத கைங்கர்யத்திற்கே முதலிடம் தரவேண்டும். பாகவத கைங்கர்யத்தில் (அடியார் தொண்டில்) ஆண்டவனின் தொண்டும் அடங்கியதாம். ஸ்வாமி உகந்ததைச்செய்வதே கைங்கர்யம். பாகவதர்கட்குச் செய்யும் தொண்டு அவன் மிகவும் உவந்ததாம்.

இந்த இரண்டு கைங்கர்யங்களையும் விடச் சிறந்தது ஆசார்யனுக்குச் செய்யும் கைங்கர்யம். ஆசார்யனே பரப் பிரஹ்மம். அவனே சிறந்த பலன்; சிறந்த வித்யை; சிறந்த செல்வம்; யாவரும் விரும்பும் பொருள்; அடைக்கலமடையத் தக்கவன் எல்லாம் ஆசார்யனே. இவன் அனுமதி பெற்றே பகவானுக்கும் பாகவதர்கட்கும் கைங்கர்யம் புரிய வேண்டும். சாஸ்திரங்களில் ஆசார்யனுக்குச் செய்யும் தொண்டே சிறப்பித்துக் கூறப்பட்டிருப்பதால் எம்பெருமான் உகந்த தொண்டாகும். இதனைவிட்டு ஏனைய இரண்டையும் செய்வதால் பலனேதுமில்லை. அது பற்றியே மதுர கவியாழ்வாரும் தேவுமற்றறியேன் என்று நம்மாழ்வாராம் ஆசார்யனையே பெரும் தெய்வமாக வழிபட்டு நமக்கு வழிகாட்டினர்.

கண்ணுக்குப் புலப்படும் தெய்வம் ஆசார்யனும். இவனை விட்டு கண்ணுக் கெட்டாத இறைவனை வழிபடப் புகுவது, கை நீரைக் கவிழ்த்துவிட்டு ககன நீரை (மழை) எதிர்பார்ப்பது போல் இகழத்தக்கது. கைப் பொருளை உதறிவிட்டுத் தரையில் மறைந்துள்ள புதையலைச் தேடியலைவது போல இகழத் தக்கது என்று சாஸ்திரங்கள் ஏளனம் செய்கின்றன.

இத்தகைய கைங்கர்யங்களில் ஈடுபடும் ப்ரபன்னன் பரமை காந்திகளான ஸ்ரீவைஷ்ணவர்கள் வாழுமிடத்தையே உரிய இடமாகத் தேர்ந்தெடுத்து வாழவேண்டும். அவ்விடங்களே, குருக்ஷேத்ரம்; நைமிசம், புஷ்கரம் என்பது போலச் சிறந்த க்ஷேத்ரங்களாம். ஸ்ரீமந் நாராயணனே பரதத்துவம், சிறந்த உபாயம், மேலான பயன் என்று உறுதிகொண்டு வேறெதையும் அவ்வாறு ஏற்காதவனே பரமைகாந்தீ வைஷ்ணவன். பாகவதன் என்றெல்லாம் வழங்கப்படுவான். இத்தகைய பரமைகாந்திகள் கிடைக்காதபோது அன்னியர்களுடன் சேர்ந்து கெடாமல், ஏகாந்தமாக வசிப்பதே சாலச் சிறந்ததாகும்.

தீயோர்கள் சிறந்த செல்வந்தராகவோ, கல்விமான்களாகவோ இருப்பினும் அவர்களுடன் வாழ்வது தீயில் நடுவிலும் பாம்புள்ள வீட்டிலும் வாழ்வது போல் மிக்க அபாயமானது. நல்லோர் கிட்டிடாவிட்டால் தனியே உலக வின்பங்களைத் துறந்து வாழவேண்டும். எம்பெருமானைத் தவிர வேறெவரும் துணையாக மாட்டாரென்று உணரவேண்டும். பரமபதத்திலே

பெறவிருக்கும் இன்பத்தை எண்ணியவாறே உவகையுடன் இருக்கவேண்டும்.

பக்தியோகமும், ப்ரபத்தி யோகமும் ப்ரஹ்ம வித்யை எனப்- படும். பக்தி யோகத்திற்குப் பல அங்கங்களுண்டு. அவற்றுள் ஒன்று சில அம்சங்களை அடிக்கடி சிந்தித்தல், பக்தியைத் தொடங்குமுன் உள்ள பாவங்கள் நீங்கிவிடுவதும் பின்னர் அறியாமல் செய்யும் பாவங்கள் ஒட்டாமையும், உடலிலிருந்து ஜீவன் வெளியேறும் முறை, முக்தி பெறுகையில், அவன் செய்த புண்யமும், பாவமும் முறையே அவன் நண்பர்களையும் எதிரிகளையும் அடைவது; அக்நி முதலிய தேவர்கள் வழிகாட்டும் முறை; மோக்ஷத்தில் பெறவிருக்கும் பேரின்ப அனுபவம். பக்தி யோக நிஷ்டன் இவற்றை எப்போதும் சிந்தித்திருக்கவே கடவன். அதுபோல் ப்ரபந்நனும் சிந்தித்திருக்கத் தேவையில்லை. அனுகூலனுயிருப்பேன்; என்ற உறுதி போன்ற ஐந்து அங்கங்கள் தான் இன்றியமையாதவையே- யன்றி, மேற்படி சிந்தனைகள் தேவையில்லை.

ஆயினும், இந்தச் சிந்தனைகளை அடியோடு நாம் விட்டு விடுவதும் இயலாது. மோக்ஷத்தில் ஈடுபாட்டால் அவை தாமே வருவனவாம். எம்பெருமானுர் எப்போதும் த்வய மந்திரத்தை அர்த்தத்துடன் அனுஸந்தித்துக் கொண்டேயிருக்கவும், ஸ்ரீரங்கம் போன்ற திவ்ய தேசங்களில் ஆயுள் முடியும் வரை வாசம் செய்யவும், தினமும் பகவானுக்குத் திருவாராதனம் செய்ய, அருளியுள்ளாரே; இவை எதற்காக? என்ருல் ஆனந்தமான பொழுது போக்கிற்காகவே இவையாகும். அசோக வனத்தில் அரக்கியர் இடையே அவதிப்படும் போதும்

அன்னை சீதை ஸ்ரீராமனையே அருகிலிருப்பதாகச் சிந்தித்துப் பொழுது போக்கினுள் என்பது போலவே, சிந்தனை இன்பம் தருவதாகும்.

கீதையில் கண்ணன், மனிதனின் இறுதி நினைவிற்கேற்றபடியே பலன் கிட்டும் என்றருளினுன். சடபரதர் இறுதியில் மானையே எண்ணி உடலைவிட்டு மறுபிறவியில் மானுய்த் தோன்றினுர். இவ்வாறு, ப்ரமாணமிருப்பதால் ப்ரபந்நனுக்கும் கவலை ஏற்படலாம். பகவானின் நினைவு வரவேண்டுமென பெரு முயற்சி தேவைப்படுமே, என்றுல் அவ்வாறில்லை. மோக்ஷத்திற்காகப் ப்ரபத்தி செய்தவனுக்கு இவ்வாறு கவலை தேவையில்லை. ஏனெனில், வராகப் பெருமாள் பூமிதேவிக்கு உரைத்த சரமச்லோகத்தில்.

சரீரம், இந்திரியம் முதலியவை நன்னிலையிலுள்ள போது ப்ரபத்தி செய்தவனுக்கு இறுதிக்காலத்தில் அவன் முயற்சியின்றியேஎன் நினைவை நானே ஏற்படுத்தி, என் பரமபதத்திற்கு நானே அழைத்துச் செல்வேன் என்றருளினுர். சாஸ்திரங்களும், ப்ரபந்நன், தன் நினைவின்றியோ, இழிவான இடத்திலோ, காலத்திலோ மரணம் அடைந்தாலும் மோக்ஷமடைவது உறுதியென்று கூறுகின்றன.

எம்பெருமானுர் சரணுகதி கத்யத்தில், ப்ரபந்நன் மரண காலத்தில் தன் ஸங்கல்பத்தால் நிறைந்த ஞானத்தோடிருப்பானென்றும், முந்தைய நல்ல நினைவுகள் பழக்கங்கள் யாவும் மாறுமலிருப்பனென்றும் அருளினுர். இறுதிக் காலத்தில் ஒருவேளை அவன் நினைவு வராமல் போய்விடுமோ என்றஞ்சி இப்போதே

அவனைத் தியானிப்பதாயும் பெரியாழ்வார் பாடுகிருர். இவற்ருல், நாம் ப்ரபந்நரான- படியால் பொறுப்பை அவனிடம் ஸமர்ப்பித்த காரணம் பற்றி கவலையின்றியிருக்கலாம். இறுதி வேளையிலும் நல்ல நினைவு பற்றிக் கவலைப்பட வேண்டாம். அவனருளால் நல்ல நினைவு தானே வரும். பக்தியோகம் செய்பவர்கள் மரண காலத்தில் மிக முயன்றே எம்பெருமானை நினைவுக்குக் கொண்டுவரவேண்டும். ப்ரபந்நருக்கு இந்த நிர்ப்பந்தம் கிடையாது. மழை நீரையே எதிர்பார்த்து அண்ணுந்து நிற்கும் சாதகப் பறவை போல்மோக்ஷம் பெற கண்ணனுகிய கார் முகிலன் கருணையாகிய மழை நீரை எதிர்பார்த்திருப்பதே இவனுக்கு உரியதாகும். ஸாத்விகர்களான பெரியோர்களுக்குத் தொண்டு புரிதலும், அவர் செய்கையைப் பின்பற்றலும், ப்ரஹ்ம வித்துக்களிடம் அபசாரத்திற்கஞ்சி, அறம், பொருள், இன்பத்தில் ஈடுபடுவோரைத் துரும்பாய் எண்ணியும், எம்பெருமானிடமே எல்லாப் பொறுப்பையும் ஸமர்ப்பித்து, சாதகப் பறவை போல் காத்திருந்து க்ஷேமத்தைப் பெறலும் இவனது கடமையாகும்.

இந்த பர ஸமர்ப்பணம் என்னும் ப்ரபத்தியே, ஒரு வேள்வியாகவும் ஆத்மாவே ஹவிஸ்ஸென்றும், இவ் வேள்வி ஒரே க்ஷணத்தில் செய்யத் தக்கதென்றும் உபநிடதம் கூறுகின்றது. இப்பிரந்நனின் மரணமே வேள்வி முடிவில் செய்யும் அவப்ருத ஸ்நனம் எனப்படும். இத்துடன் வேள்வி முடிவு பெறுகிறதாம். இந்த மரணமும் தாஞக வரக்கூடியதேயன்றி, மனிதன் செய்து கொள்வதில்லை. மரணத்தை ப்ரியமான விருந்தினர்

வருகை கண்டு மகிழ்வதுபோல் எதிர்பார்த்து ப்ரபன்னன் நிற்கவேண்டும் என்று ப்ரமாணங்கள் கூறும். ஆதலின், அவப்ருத ஸ்னானம் போல் தானாகச் செய்து கொள்வதில்லையேயென்று ஓர் ஐயம் எழலாம். இதற்கு விடையாவது , , , உபநிடதங்களில் ந்யாஸவித்யை என்கிற பிரபத்தியை விளக்கும் இடங்களில் இதனை ஒரு வேள்வியாகவே விளக்கியுள்ளது. ப்ரபத்திக்குப் பின்னர் செய்யவேண்டிய அனைத்துச் செயல்களும் தாமே நிறைவேறி விடுகின்றன என்று புகழப்படுகிறது. இதனால், ப்ரபந்நன் செய்யவேண்டிய செயல் ஏதுமில்லை யென்று தெளிவாதலால் மரணமே இந்த வேள்விக்கு முற்றுப்-புள்ளியான அவப்ருத ஸ்னானம் என்றும் சரீரம் கழிந்தவுடன் ஸ்ரீவைகுண்டம் தானே கிட்டிவிடும் என்றும் புலனாகின்றது.

### ப்ரபத்திக்கு முன்

சேதனன் இதுவரை எத்தனை பிறவிகள் எடுத்திருக்கிறான் என்று யாராலும் கூற வியலாது. ப்ரக்ருதியென்னும் மாயைத் திரை அவனுக்கு ஒன்றும் புலனாகாமல் மறைத்துக் கொண்டிருக்கிறது. விதைக்கு முளை காரணமா? முளைக்கு விதை காரணமா? அநாதியாய் இவை மாறி மாறி வருவன. அதே போல் சேதனனுக்குக் கர்மத்தால் அஜ்ஞானமும், அஜ்ஞானத்தால், கர்மமும் வளருகின்றன. இவன் செய்யும் தவறுகளுக்கு ஓர் எல்லையேயில்லை. ஆற்று வெள்ளம் போல் அவை தொடர்ச்சியானவை. நீண்ட சங்கிலித் தொடரின் வளையங்கள் போல் ஒன்றன்பின் ஒன்றாய்ப் பல

தவறுகளையும் இவன் இழைத்துக் கொண்டே யிருக்கிறான். இவனிருப்பிடம் அஜ்ஞானத்தை விளைவிப்பது. அதில் அகப்பட்டுத் தவிக்கும் இவனுக்கு மூன்று மந்திரங்கள்., அவற்றின் பொருள் நுணுக்கம் ஒன்றும் எளிதில் அறிய வாய்ப்பில்லை. ஆதலின், தன் ஸ்வரூபத்தையுமிவன் அறியான். ஸ்வயம் பிரகாசமான ஆன்மாவைப் (தன்னைப்) பற்றிய செய்திகளையும் அறிகின்றிலன். இவ்வாறிருக்கப் பரமாத்மாவை எங்ஙனம் உணருவான்? எப்போதும் எங்கும் பரவி நிற்கும் விபுவான எம்பெருமான் இவன் இதய கோசத்தினுள் சேமவைப்பாக அந்தர்யாமீ என்ற பெயரில் அமர்ந்திருப்பதையும் அறிகிலன். நல்லறிவைப் பெறும் முயற்சியும் இவன் பாலில்லை. ஆதலின், அநாதி காலமாய் இவன் ஸம்ஸாரக் கடலில் விழுந்தும் உறங்கியும் காலம் முழுவதையும் காள ராத்ரியாகவே கழித்து விட்டான்.

இத்தகைய ஜீவனுக்கு ஒரு புண்ய விசேஷத்தால் ஜ்ஞானமென்னும் பகலைக் காணும் வாய்ப்பு கிட்டுகிறது. ஓர் நல்ல ஆசார்யனின் அருட்பார்வை இவனுக்குக் கிட்டுகிறது. அதனால், அஞ்ஞானவிருள் நீங்குகிறது. சாஸ்திரார்த்தங்களை உபதேசிக்கப் பெறுகிறான். நல்ல ஆசாரங்களைக் கற்று ஞானமென்னும் ஒளி விளக்கைப் பெறுகிறான். இத்தகைய நல்வழி காட்டிய ஆசார்யனுக்கு இவன் என்னதான் கைம்மாறு செய்யமுடியும்? என்றும் அவன்பால் நன்றி மறவாமலிருந்து அவன் திருவடிகளையே யென்றும் தஞ்சமென்று எண்ணி நிற்கவேண்டும்.

அந்த ஆசார்யன் வாயிலாக எம்பெருமானிடம் சரீரத்தின் முடிவில் மோக்ஷம் வேண்டி ப்ரபத்தியைச் செய்கிறுன். ஆதலின், அந்த நாள் வரை இந்த சரீரமென்னும் சிறைக்குள் வசித்தே தீரவேண்டும். இச்சிறைக் கூடத்திற்கு எலும்புகளே தூண்கள். சரீரம் உள்ளனவும் ப்ராரப்த கர்மங்களை (பலன் கொடுக்கத் தொடங்கியவை)யும் அவற்றின் பயன்களையும் ஏற்றிருப்பதால் அதன் பெருந்தீங்கு ஏதும் இல்லை. ஆசார்யனின் அருள் தீங்குகளைத் தடுத்துக் காக்கவல்லது. அதனுல் இவனுக்கு ஜ்ஞானம், வைராக்யம் (பற்றின்மை) பக்தி என்பன தாமே வளரும். இதனுல் மகிழ்வு ஏற்படும், விவேகம் மேலிடும். மாயையால் ஏற்பட்ட சிற்றின்ப மயக்கங்கள் மறையத் தொடங்கும். எம்பெருமானைக் கண்டு அனுபவிப்பதில் ஐயம் மறைந்து உறுதியேற்படும். உலக சுகங்களில் லயிப்பதில்லை. மோக்ஷம் வரவிருப்பதை யெண்ணி யெண்ணி ஐம்புலன்களையும் எம்பெருமான் பற்றிய செய்திகளிலே, தொண்டுகளிலேயே ஈடுபடுத்தி, பொழுதை இன்பமாய்ப் போக்குவன்.

## 4.8 ப்ரக்ருதி ஸம்பந்தம் நீங்கல்

ப்ரபத்தி செய்தவுடனேயே இவனைத் தன் அரும்பொருளாக ஏற்றுக் கொண்டே சர்வேச்வரன் இவனைத் தன்னடிச் சோதிக்கு அழைத்துச் செல்ல வேண்டிய காலை இவனைச் சார்ந்துள்ள ப்ரக்ருதி சம்பந்தத்தாலான சூக்ஷ்ம சரீரத்தையும் ஸ்தூல சரீரத்தையும் நீக்கி விரஜா நதியில் நீராடியதும், தூயவனுக்கி ஜீவனெனும் மாணிக்கத்தையும் மாசற்றவனும் மாயைத்

தொடர்பற்றவனுய் ஆக்கி அழைத்துக் கொள்கிருன். இதுவரை மாசு படிந்திருந்த இவனது ஜ்ஞானம் இப்போது அவனருளால் மாசற்ற ஒளியுடன் திகழ்கிறது. அவன் திரு மார்பில் அணிந்துள்ள கௌஸ்துபம் என்ற இரத்தினம் போல் ஜீவன் விளங்குகிருன். ஸ்ரீவைகுண்டத்தில் என்றும், எவ்விடத்தும், எந்த நிலையிலும் எல்லாவிதமான கைங்கர்யங்களையும் விரும்பியவாறு செய்யக் கடவன். இவன் பெறும் இன்பத்திற்கு வரையறையே கிடையாது. இத்தகைய கைங்கர்ய அனுபவமே பெரும் விழாவாகும்.

எம்பெருமான் என்னும் சூர்யனுக்கு உதயம் அஸ்தமனம் ஒன்றுமில்லை. சூரியனை விட்டுப்பிரியாத ஒளியே போல் பெருமானை விட்டுப் பிராட்டி பிரிவதில்லை. இந்த சூரியன் எப்போதும் ஒளி வீசுபவன் என்பதை சேதனன் எண்ணி மகிழ்ந்து இருப்பான்.

இவ்விடத்திலே, சேதனன் எம்பெருமானை யடைந்தாலே, மகிழ்கிருனு? அன்றி, எம்பெருமான் சேதனனைத் திரும்பவும் அடைந்ததால் மகிழ்கிருனு என ஒரு சர்ச்சையைத் தோற்றுவித்து இவனையடைவதால் லாபம் பெருமாளுக்கேயன்றி இவனுக்கில்லை யென்றும் ஆதலால், மகிழ்ச்சி பெருமாளுக்கேயன்றி இவனுக்கில்லையென்றும் சில கொள்கைகள் பூர்வர்களால் காட்டப்பட்டு வருகின்றன. அவை சுவை மிக்கவை. ஜீவன் என்றும் அடிமை செய்வதில் சுவை கண்டவன். மோக்ஷத்தில் இவனது ஜ்ஞானம் மலர்கிறது. இதனுல் பெருமாள் உவகையடைகின்றுர். மலர்கள், சந்தனம் பூஷணங்களைத் தரிப்பதால் தரிப்பவரே மகிழ்வர். அப்பொருட்களுக்கு ஒன்றும் மகிழ்ச்சியில்லை. அதுபோல்,

நாம் அனைவரும் பகவானின் போகப் பொருட்கள். நம்மை அனுபவித்து அவன் மகிழ்கிறான் என்பதேயன்றி நமக்கெனத் தனிவிருப்பு வெறுப்புக்கு இடமேது? என்பது அக்கொள்கையின் பொருள்.

இத்துணைச் செய்திகளும் ரஹஸ்ய ரத்னவளி என்ற நூலின் கருத்துச் சுருக்கமாகும். முக்கியமாக, உயர்ந்த தத்துவம் எம்பெருமான் ஸ்ரீமந் நாராயணனே. அவனையடைய உயர்ந்த உபாயம் ப்ரபத்தியென்னும் சரணாகதியே. உயர்ந்த பலன் அவனையடைவதாகிற மோட்சமே. இந்த மூன்று ரஹஸ்யங்கள் இதில் விளக்கப்பட்டன. இவற்றினைப் புறக்கணிப்பவர்கள் உயர்ந்த (மரகத) ரத்தினத்தைக் கூழாங்கல் என்று உதறித் தள்ளும் பான்மையினர். அவ்வாறின்றி, இச்செய்திகளின் சிறப்பு, இனிமை, பெருமை மங்களமான தன்மை, எளிதில் அறிய ஏற்றதன்மை முதலியவற்றை அறியும் நல்லோர் இந்நூலை மனத்தினில் என்றும் தரிப்பர் என்று தேசிகனார் அருளி முடிக்கின்றார்.

இவற்றால் தேறுவது யாதெனில், சேதனன், தன்னைச் சூழும் ஸத்துவம், ரஜஸ்-தமஸ் என்ற மூன்று குணங்களுக்கிடை ஸத்துவத்தை மட்டுமே கைப்பற்றி ஏனையவற்றைச் சிறிது சிறிதாகக் கைவிட முயலவேண்டும். வேதங்களிலும் சாஸ்திரங்களிலும் கூறிய ஏரானமான பொருட்களில் மிகமிகச் சாரமான சிலவற்றை மட்டுமே நம் குறைந்த ஆயுட்காலத்திற்குள் பொறுக்கி அறிந்து கொள்ளவேண்டும். எல்லா மந்திரங்களிலும் சிறந்தது திருமந்திரம் (திருவஷ்டாக்ஷரம்). அது எல்லாப் பயன்களையும் தரவல்லது. ஸ்ரீமந் நாராயணனே

பரதேவதை. ஸம்ஸார பந்தத்தை நீக்கிச் செய்யும் முயற்சியே நமக்கு இன்றியமையாதது. மோக்ஷம் தரும் கல்வியே உண்மையான கல்வி. எம்பெருமானைப் பூசிப்பதைவிட வேறு சிறந்த புண்ணியமில்லை. ஸம்ஸாரிகளுக்கு மோக்ஷமே மின்பம் தருவதாகும். எம்பெருமானை யனுபவிப்பதே பேரின்பமாகும். இவனையன்றி வேறு யாரையும் தெய்வமாகக் கருதி உபாஸிக்கக் கூடாது. திவ்ய தம்பதிகளான பெருமானையும் பிராட்டியையும் எப்போதும் தியானித்து நற்கதியை நாடவேண்டும் என்பதே.

ப்ரபத்திக்குப் பிறகு சேதனன் மேறிகூறிய கருத்துக்களை மனத்தில் இருத்திக் கொண்டால் சஞ்சலம் நீங்கி நிலையான அறிவைப் பெறுவான். பிற பயன் கருதாதபடி செய்யும் கைங்கர்யங்களால் அவன் மனமே பெரு மகிழ்ச்சியைப் பெறும். மனமே மனிதனுக்கு மிகவும் உதவும் இந்த்ரியம். அது அனுகூலமாகியிருந்தாலே எந்த நற்செயலையும் ஒருவன் செய்யக்கூடும். ஆதலால், அம்மனத்தை நல் வழியில் சேதனன் வசமாக்கிச் செலுத்துவது கடமை என்பதை,

சிறு பயனில் படியாத தகவோர்

. . . . . . . . . இகழேல் நீயே என்ற பாசுரத்தால்

விளக்குகின்றார்.

நம் ஆசார்யர்கள் அற்ப ஆசைகளில் ஈடுபடாத தகவோர்கள். கர்ம வசத்தால் கிட்டும் பலன்களிலும் பற்றுக் கொள்ள மாட்டார்கள். பகவத் கைங்கர்யத்தில் மிக்க பற்றுக் கொண்டிருப்பர். தம்மை நாடி வரும் சிஷ்யர்களை நன்கு பரீக்ஷித்த பின்னரே ஏற்றுக் கொள்வர். சிஷ்யர்களின் துன்பங்களைத் தம் நல்லுபதேசங்களால் நீக்குவர்.

பயனென்றும் கருதாது ஆர்வத்துடன் உபதேசிப்பர். புகழையோ, பொருளையோ பெரும் மதிப்பையோ விரும்புதில்லை. கருணையே வடிவமாயுள்ளவர்.

நம் நிலைமை மோக்ஷத்தைப் பெறுவதற்கான பக்தி முதலிய கைம்முதல் ஒன்றையும் நாம் பெற்றிலோம். அதுவே ப்ரபத்திக்குப் போதிய சூழ்நிலை. புயலிலே நிலை தடுமாறும் மரக்கலம் போல் ஸம்ஸாரத்திலே அகப்பட்டுத் தவிக்கும் நமக்கு அனுகூலமான காற்றைப் போல் வழிகாட்டி உதவுபவர் ஆசார்யன். அவரே எம்பெருமான் திருவடிகளை யடைவிக்கின்றார். வைணவனுக்குரிய பண்புகள் பற்றி முமுக்ஷுப்படி 116ஆவது சூர்ணிகை கூறுவதையிங்கு கவனிக்கவேண்டும்.



# இயல் 5

# விசிட்டாத்துவைதத்தில் தத்துவங்கள்

## இறைவன்

நாராயணன் என்பவனே நம் தேசிகனூர் காட்டும் இறைவன். நாரங்களுக்கு அயனம் என்று நான்காம் வேற்றுமையின் தொகையாகவும், நாரங்களை அயனமா-கவுடையவன் என அன்மாழித் தொகையாகவும், கொண்டு இச்சொல்லிலிருந்து இறைவனின் பல கல்யான குணங்களையும் சான்றோர் சுட்டிக் காட்டுவர்.

நாரங்கள் என்பது அழியாத பொருட்களின் தொகுதி. அவையாவன:- இறைவனின் ஸ்வரூபத்தை விளக்கவல்ல, ஜ்ஞானம், ஆனந்தம், அமலத்வம், அநந்தத்வம் என்ற பான்மைகள். அவனுக்கேயுரிய பெருமைகளாய்த் திகழும் ஜ்ஞானசக்திபலஐச்வர்ய வீர்யதேஜஸ் என்பன, (இவை பகம் எனப்படும்) வாத்ஸல்யம், ஸௌசீல்யம், ஸ்வாமித்வம், ஸௌலப்யம் முதலாய எண்ணிறந்த கல்யாண குணங்கள், அவனுக்கேயுரிய திவ்யமான திருமேனி, அவன் விரும்பியேற்கும் பல திருமேனிகள். அவற்றிற்கான, ஸௌந்தர்யம், ஸௌகுமார்யம், லாவண்யம், யௌவனம் என்பன போன்ற பாங்குகள். அத்திருமேனிக்கான திருவாபரணங்கள், திவ்யாயுதங்கள், பெரிய பிராட்டியார் போன்ற நாய்ச்சிமார்கள். அனந்தன், கருடன், விஷ்வக்ஸேனர் போன்ற நித்யஸூரிகள், தொண்டிற்கான-குடை, சாமரம், திருவாலவட்டம் முதலிய சாதனங்கள். அவன் வாயிலைக் காத்து நிற்கும்- சண்டன், பிரசண்டன் முதலானோர், பாவக் கடலை அவன் கருணையால் கடந்த

முக்தர்கள், ஸ்ரீவைகுந்தம் (பரமபதம்) மூலப்ரக்ருதி, இந்த ஸம்ஸார மண்டலத்திலே கிடந்து உழலும் ஸம்ஸாரிகளாம் பத்த ஜீவாத்மாக்கள், விநாடி, நிமிடம், பகல், இரவு என்றெல்லாம் பகுக்கப்படும் காலம். மஹத் முதலாக பிருதிவி வரையான இருபத்துமூன்று தத்துவங்கள், அண்டங்கள், அவற்றினுள் அடங்கும் தேவர், மனிதர், விலங்கு, தாவரம் எனப்பட்டவையெல்லாமாகும். நித்தியம் என்பதை இருவிதமாகப் பிரிக்கலாம். ஸ்வரூபத்தால் நித்யமானவை ப்ரவாஹம் போல் நித்தியமானவை என்ற அப்பிரிவுகளில் ஒரு நாளும் உத்பத்தியும், அழிவும் இல்லாதவை முதல் பிரிவிலும், உத்பத்தியும் அழிவுமிருப்பினும் முன்பு உண்டான நாமரூப லிங்காதிகள் மாறுமலுள்ள பொருட்கள் ப்ரவாஹ நித்யங்கள் என்ற வகையையும் சாரும்.

அயனம் என்றுல் சார்பு (ஆச்ரயம்) நாரங்களுக்கு சார்பானவன் நாராயணன் என்று விரிக்குங்கால், எல்லா-வற்றிலும் பரன் (உயர்ந்தவன்) என்று பரத்வம் (அனைத்திற்கும் ஆதாரமாய் இருத்தலால்) புலனுகின்றது. நாரங்களைச் சார்பாக (அயனமாக) உடையவன் என்ற அன்மொழித் தொகையில் எல்லாவற்றுள்ளும் புகுந்து நின்று ஆட்கொள்ளும் அந்தர்யாமித்வம் புலனுகிறது.

அயனம் என்ற சொல்லை அடைவதற்குச் சாதனமென்று, அடையப் படுபவன் என்றும் இருவகைப் பொருட்களாய் விரிக்க இலக்கணம் இடம் தருகிறது. சாதனம் என்ற பொருட்படும் கொள்கையில் - இறைவனே உபாயமானவன் என்பதும் இரண்டாம் தொகையில் - அடையப்படும் பொருள் (உபேயம்) என்பதும்

பொருளாகும். ஆகவே, நாராயணன் என்ற சொல்லிலிருந்து, பரத்வம், எல்லார்க்கும் எளியனான தன்மையாம் ஸௌலப்யம், அந்தர்யாமித்வம், உபாயனுதல், உபேயனுதல் என்ற குணங்கள் பெறப்படுகின்றன.

'உபேயம்' என்னும்போது, எல்லாவிதமா உறவினராயும் நம்மால் அடையத் தகுந்தவன் என்று பொருள் ஆகிறது.

"தாயாய்த் தந்தையாய் மக்களாய் மற்றுமாய் முற்றுமாய்" என்றபடி ஸர்வவித பந்துவாய் நிற்பதையே திருமங்கையாழ்வார்.

"எம்பிரானெந்தை யென்னுடைச் சுற்றமெனக்கரசென்னுடைவனுனன்" என்று பாடினுர்.

இவ்வளவு ஸௌலப்யம், வாத்ஸல்யமும் கொண்டிருப்பதாலேயே நாம் அவனை மறந்து - பிறரை நாடி நின்ற- போதும் - அவன் நம்மை விடாமே நமக்காய்ப் பாடுபடவே அந்தர்யாமியாய் மறைந்து நம்முள் கிடக்கின்றுன்.

இராமட மூட்டுவாரைப் போலவே உள்ளே பதிகிடந்து ஸத்தையே நோக்கிக் கொண்டுபோகும் என்றுர் முமுக்ஷுப்படியிலே; அதாவது - பெற்றோரிடம் சினம் கொண்ட பிள்ளைகள் வீட்டிலே உணவுண்ணுமலே, பட்டினியாய்த் திரியும் வேளையிலும், அவர்களைவிட, மனமில்லாத பெற்றோர்கள் - பிறரறியாமலே இரவில் அவர்கள் தங்கும் மடம் போன்றவிடங்களிலேயே மறைந்திருந்து பிறரைக் கொண்டு அவர்களுக்கு உணவு ஊட்டுவதற்கு வழி செய்வதைப் போல, இறைவனை

மறந்து, தான்தோன்றியாகத் திரியும் சேதனர்கள் காணுதபடியே அந்தராத்மாவாய் நின்று, இவர்களின் ஸத்தையையே (இருப்பையே) பற்றிக் கொண்டு பாதுகாக்கின்றுன் என்ற பெருமையெல்லாம், இந்த நாராயணன் என்ற சொல்லால் விளங்கும்.

## தத்வபதவி - பரதத்வம் - மேம்பட்ட தத்துவம்

பெரிய பிராட்டிக்கு நாயகனுன நாராயணன்தான் பரதத்துவம், இவன் தன்னைத் தவிர மற்ற ஸகல சேதனு-சேதனங்களையும் தாங்குபவன்; அடக்கியாள்பவன்; அவற்ருல் சிறப்பைப்பெறுபவன். இயற்கையாய் எல்லாம் அறிந்தவன்; எதையும் செய்ய வல்லவன்; எல்லையில்லாக் கருணையுள்ளவன்; யாவரையும் காப்பவன்; பெருங்கொடையாளன்; மோக்ஷம் தருபவன்; முக்தர்களால் துய்க்கப்டுபவன்; பரம் வியூஹம், விபவம், அர்ச்சை, அந்தர்யாமி என ஐந்து வடிவங்களையுடையவன்; இவன் திருமேனியைச் சேவிப்பவர்க்குப் பாவங்கள் நீங்கும்; நெஞ்சிலே கொள்ளத்தக்க திருமேனியுடையவன்; இவனது திருவடியிணையே நமக்குத் தாரகம் என்பதை நம்மாழ்வார்,

"கண்ணன் கழலிணை நண்ணும் மனமுடையீர்
எண்ணும் திருநாமம் திண்ணம் நாரணமே"

என்றருளினுர்.

"ஒரு நாயகமாய் ஓட வுலகுட னுண்டவர்
கருநாய் கவர்ந்த காலர் சிதைகிய பானையர்,
பெரு நாடுகாண இம்மையில் பிச்சை தாம் கொள்வர்,
திருநாரணன் தாள் காலம் பெறச் சிந்தித் துய்ம்மினோ"
என்பது திருவாய்மொழி.

"மின்னின் நிலையில் - மன்னுயிராக்கைகள்,
என்னுமிடத்து, இறை - உன்னுமின் நீரே"

நம் சுற்றத்தாரும் மற்றோரும் அட்டைபோல் கவ்வாதவாறு நல்வாழ்வு பெற,திருநாரணன் திருவடிகளையே சார்பாகப் பற்ற வேண்டுமென்கிறார் நம்மாழ்வார்.

"துணையும் சார்வுமாவோர் போல் சுற்றத்தவரும் பிறரும்,
அணையவந்த ஆக்கமுண்டேல் அட்டைகள்போல் சுவைப்பர்,
கணையொன்றாலே யேழ்மா மரமும் எய்தவெங்கார் முகிலை,
புணையென்னுய்யப் போகில்லா லில்லை கண்டீர் பொருளே."

## ஆன்மா (ஜீவாத்மா) சேதனன்

அறிவுள்ளவனை ஜீவாத்மா சேதனன் எனப்படுவான். இவனுக்கு அறிவு ஓர் சிறப்பான குணமாகும். இவன் வடிவமும் அறிவே. ஆதலின், இவனது குணமான அறிவை தர்மபூத ஜ்ஞானம் என்பர். இவனது வடிவமான அறிவை தர்மிபூதஜ்ஞானம் என்பர். தர்மத்தையுடையது தர்மீ; குணத்தையுடையது குணீ. அதுபோல், ஜீவாத்மா அறிவை குணமாகவுடையவன். அறிவே அவனது வடிவம் என்னும்போது, அவ்வறிவை தர்மிபூதம் என்றும், குணம் என்கையில் தர்மபூதம் என்னும் இரு வகைகளிலும் குறிப்பிட நேருகிறது. இந்த

ஜீவாத்மா எப்போதும் தனக்குத் தானே தோன்றிக் கொண்டேயிருப்பவன். நான் நான் என்று தோற்றம் எப்போதும் அவனுக்கு உளதாம். அவ்வாறு நான் என்று உணரும் வேளையில் அவனுக்கு தர்மபூத ஜ்ஞானம் (குணமான அறிவு) உதவத் தேவையில்லை. தன்னைத் தவிர்த்த ஏனைய பொருட்களை அவன் உணர தர்ம பூதஜ்ஞானம் தேவைப்படுகிறது. தன் ஸ்வரூபத்தை (வடிவத்தை) தர்மபூதஜ்ஞானம் கொண்டும் அவன் அறியக்-கூடும். ஜீவன் அணுவானவன். ஆனந்த வடிவினன். உடலி லிருந்து வேறனவன்; அழிவற்றவன் என்றென்றும் எம்பெருமானுக்கு அடிமையாகவே-யிருப்பவன்.

எண்ணிலடங்காத - உடல்கள் தோறும் வீற்றிருக்கும் - ஜீவாத்மாக்கள் - மூவகையினராவர். பத்தர், முக்தர், நித்யர் என்பவரேயவர். அநாதிகாலமாக கர்ம பந்தத்திற்கு ஆட்பட்டு இந்த ஸம்ஸாரத்திலே உழல்பவர் பத்தர் எனப்படுபவர். இந்த வையத்திலிருந்தே ஆசார்யர்களின் ஸம்பந்தம் பெற்று - பக்தி - சரணாகதிகளில் ஒன்றைப் பின்பற்றிய பின், மோக்ஷம் பெறுபவர் முக்தர் எனப்படுவார். எம்பெருமானைப் போலவே கர்ம சம்பந்த மற்றவராய் அவனுக்கு எவ்வெப்போதும் தொண்டுசெய்து உடன் மன்னுபவர் - அனந்தன், கருடன், விஷ்வக்ஸேனர் (சேனைத் தலைவர்) முதலியவர் நித்யஸூரிகள் எனப்படுவர்.

அசேதனம் = ஜடம் = உயிரற்றது = அறிவற்றது. ப்ரக்ருதி, காலம், சுத்தஸத்வம் எனப்படும் பரமபதம் (ஸ்ரீவைகுண்டம்) என்ற இம்மூன்றும் அசேதனங்கள்

என்றும், அவை எம்பெருமானுக்கு திருமேனியாய்த் திகழ்பவை யென்றும் அறிஞர் கூறுவர். ப்ரக்ருதி என்பதை எம்பெருமானின் மாயை என்று கூறுவர். அது தானும், ஸத்துவம், ரஜஸ், தமஸ் என்ற மூன்று குணங்களை உடையதாகும். இந்த ப்ரக்ருதி 23 தத்துவங்களாக மாறுகின்றது. ப்ரக்ருதி பல விகாரமும் (மாறுபாடும்) அடைவது. அதிலிருந்து தோன்றும் மஹத் என்பதும், அஹங்காரம் என்பதும், ஐந்து தன்மாத்திரங்களும், ஆக ஏழும் ப்ரக்ருதிவிக்ருதிகள் என்று கூறப்படுவன. அதாவது, தம் காரணமான ப்ரக்ருதியினை நோக்கத் தாம் விக்ருதிகள் (சார்புப் பொருட்கள்). தம்மால் படைக்கப்படும் - ஐம்பூதங்கள், ஐம்புலன்கள் கர்மேந்த்ரியங்கள் ஐந்து - மனம் என்ற 16 தத்துவங்களை நோக்கக் காரணமாய் (ப்ரக்ருதியாய்) நிற்பன வென்பதாகும். ஆக இந்த இருபத்து நான்கு தத்துவங்களுடன் - காலத்தையும், ஸத்வ குணத்தையே கொண்ட பரமபதத்தையும் சேர்த்து 26 வகை அசேதனங்கள் - உயிரற்ற சடப்பொருள் என்பர் பெரியோர். (முக்குணமாயையின் . . . . தேசிகரே)

## பரமத பங்கம் 159 & 160 பாடல்கள் (அசேதனன்)

(நாக்கிய லும் வகை நம்மையளித்தவர் நல்லருளாறி
பாக்கிய மேந்திப் பரனடி யார் திறம் பார்த்ததற் பின்
ருக்கியர் தங்க டலைமிசை தாக்கித் தனி மறை தான்
போக்கிய மென்றதனிற் பொய்ம் மதங்களைப் போக்குவமே.)

உபநிடத்தில் சேதனன், அசேதனன், இறைவன் என்ற மூன்று தத்துவங்களின் தன்மையை- 1. துய்ப்பவன், 2. துய்க்கும் பொருள், 3. ஏவுபவன் என்றவாறு விளக்கக்

காண்கிறோம். ஜீவாத்மா - தன் வினைகட்கு ஏற்ப பற்பல பொருட்களையும் உலகில் துய்க்கின்றான். வினைப் பயனைத் துய்ப்பவன் அவன். அவன் துய்ப்பதற்கென்றே எம்பெருமானால் படைக்கப்பட்டவை அசேதனங்கள் என்னும் சடப் பொருட்கள். இதயத்தில் வீற்றிருக்கும் எம்பெருமான், வினைக்கு ஏற்ப, சேதனனைப் பற்பல செயல்களிலும் - பயன்களிலும் ஏவுபவனாகவும், சாட்சியாகவும், வினையால் தீண்டப்படாத- வனாகவும் மிளிர்கின்றான்.

(தீவகை மாற்றியன்றோர் தேரிலாரணம். பாடியநல்
தேவகி சீர் மகனார்திறம் பாவருன் சூடிய நா
மூவகை யாமறி யாத்தத் துவத்தின் மகமறிவார்
நாவகை யே நடத் துந்நடை பார்த்து நடந்தனமே.)

இந்த இரு பாசுரங்களால் உபநிஷத்துக்களிலும், கண்ணனின் கீதையிலும், அருளப்பட்ட மூவகைத் தத்துவங்களையும், அவற்றுள் மூவகையான அசேதனங்-களையும் உள்ளவாறு ஆசார்யர்களின் அருளால் அறியப் பெற்ற நாங்கள் -தவறான யுத்திகளைக் கொண்டு தாறுமாறாகக் கூறும் அன்னியர்களின் தவறான கொள்கைகளைக் கண்டித்திடுவோம் என்பதாகக் கூறுகின்றார்.

போகப் பொருளான ஜடப்பொருளை போக்யம் என்றும் முக்குண வடிவானது என்றும் கூறுவர்; இது அற்ப சுகத்திற்கும், துக்கத்திற்கும், மோஹத்திற்கும் காரணமான - ஸத்வம் முதலிய குணங்களுக்கு - உறைவிடமாகும். இவற்றின் இயல்பாலும், பஞ்சீகரண

முறையாலும் இடத்திற்கும் காலத்திற்குமேற்ப ஏராளமான மாறுபாடுகளை இவை அடைந்திடுவதைக் காணலாம்.

இங்கு பிள்ளை லோகாசார்யர் அருளிய தத்வத்ரயத்தையும் ஒப்பிடல் பொருந்தும்.

## பிள்ளைலோகாசார்யர் அருளிய தத்வத்ரய விளக்கம் - ஒப்பிடல்

முமுக்ஷுவான சேதனனுக்கு மோக்ஷமுண்டாம் போது தத்வத்ரய ஜ்ஞான முண்டாக வேணும்: (தத்வஜ்ஞானம் கிட்டினுல் மோக்ஷமாம்) சித்து, அசித்து, ஈச்வரன் என்ற மூன்றே தத்வத்ரயம். சித்தென்பது ஜ்ஞானுதாரமான பொருள். ஜீவாத்மா எனப்படுவது: அசித்தாவது ஜ்ஞானத்தைத் தழுவாத ஜடப்பொருளாம். இவ்விரண்டையும் ஆள்பவன் ஈச்வரன்.

இந்த ஆத்மஸ்வரூபம்-உடல், புலன்கள், உள்ளம், உயிர், அறிவு முதலிய வற்றின் வேறுபட்டதாய், ஜடமில்லாமல், ஆனந்த வடிவமாய், நித்யமாய், அணுவாய், அவ்யக்தமாய், (வெளிப்படையாகப் புலனுகாதது) அசிந்த்யமாய், (சிந்தனைக் கெட்டாததாய்) உறுப்பற்றதாய், விகாரமற்றதாய், ஜ்ஞானுச்ரயமாய், ஈச்வரனின் சரீரமாக, நியாம்யமாயும், தார்யமாயும், சேஷமாயும், இருப்பதாம். நித்யமான ஜீவனுக்கு ஜன்மம், மரணம் என்பவை. எவ்வாறெனில், ஜன்மமாவது உடல் தொடர்பு, மரணமாவது -உடலைவிட்டுப் பிரிவது.

அணுஸ்வரூபம் என்பது இதயத்திலிருந்து வெளியேறுவதும், உள்ளே வருவதுமாயிருப்பதாக சாஸ்திரம் பொருந்தும். வால் நுனியிலுள்ள ரோமத்தின்

நுனியின் லட்சத்திலொரு பாகம் ஜீவன் என வர்ணிக்கப்பட்டுள்ளது. மணி-சூர்யன் முதலியவை ஓரிடத்திலிருந்தே அவற்றினொளி எங்கும் பரவுவது போல, அணுவாயினும், ஜ்ஞானஸ்வரூபமாய், எங்கும் பரவி நின்று, சுகதுக்கங்களையனுபவிக்கிறது. இத்தகைய ஜீவாத்மா, சாஸ்திரங்களாலும், தீ, நீர், காற்று, வெய்யில் முதலியவற்றால், பிளக்கவோ, நனைக்கவோ, உலர்த்தவோ இயலாதது.

சமணர்கள் ஆத்மாவை உடலளவினதென்கிறார்கள். இதுவேத விருத்தமானது. ஜ்ஞாதா, கர்த்தா, போக்தா என்றெல்லாம் அழைக்கப்படுகிறான் ஜீவாத்மா. ஜ்ஞானத்திற்கிருப்பிடமாயிருப்பதுடன் தானே ஜ்ஞானமாயுமிருக்கும். சமணர்கள் ப்ரக்ருதியே செயலாற்றும் கர்த்தாவாகும். ஆத்மா செயலாற்றும் கர்த்தா இல்லையென்பர். அந்நிலையில் ஜீவன் சாஸ்திரத்திற்குக் கட்டுப்பட்டுப்பட வேண்டிய நிலையும் வராது. இவனது ஸ்வரூபத்தால் கர்த்ருத்வம்-செயலாற்றும் தன்மை -வருவதில்லை. ப்ரக்ருதியின் குணங்களான ஸத்வம், ரஜஸ், தமஸ் இவற்றின் சேர்க்கையிலேயே வருகின்றது. அதுவும் ஈச்வரனின் திருவுள்ளத்தால் இவனுக்கு வருவது. சுதந்திரமாக இல்லை.

இவனை நியாம்யனென்று கூறுவது-பகவானின் திருவுள்ளப்படியே எல்லாச் செயல்களையும் செய்வ-தாலாகும். அவனுள்ளே அந்தர்யாமியாயிருந்து, நியமனம் (கட்டளை) செய்கிறான். இவன் செயலாற்றுகிறான். அவன் ஸ்வரூபமோ இருப்போ இன்றி தானில்லையென்ற நிலையை தார்யத்வம் என்கிறோம். சந்தனம், மலர்கள்,

தாம்பூலம் முதலியன போல அவன் திருவுள்ளப்படி பயன்படுத்தத்தக்க பொருளாய் நாமிருக்கும் நிலையை சேஷத்வம் என்கிறோம். இவ்வாத்மா, பத்தர், முக்தர், நித்யர், என மூவகைப்படும். பத்தரென்பவர் ஸம்ஸாரிகள். முக்தரென்பவர் ஸம்ஸார ஸம்பந்த மற்றவர்கள். நித்யர்-அனந்த கருட விஷ்வக்ஸேனாதியர். இவர்கள் என்றும் ஸம்ஸார பந்தம் அற்றவர்.

தீ மேல் வைத்த பாத்திரத்தின் தொடர்பால், நீரில் வெப்பமும், ஓசையும் உண்டாவது போல் ஆத்மாவுக்கு அசித்தின் சம்பந்தத்தால், அவித்யை, கர்மவாஸனை, விருப்பம் எல்லாம் தோன்றுகின்றன. அசித்தான சரீரத்துடன் ஸம்பந்தம் கழிந்தால், அதனால் ஏற்பட்ட அவித்யாதிகளும் கழிந்துவிடும். காரணம் நீங்கிடில், கார்யமும் நீங்குமன்றோ? இந்த சேதனர் எண்ணற்றவர். சிலர் சேதனர்கள் ஒன்றே என்று அத்வைதம் பேசுவர். அது வேதவாக்யங்கட்கு விபரீதமானது. அனுபவத்திற்கும் எதிரானது. படைப்பில் வேறுபாடு காணவியலாமல் போகும். இம்மையிலும், மோக்ஷத்திலும் சேதனர்களிடை பேதம் உண்டென்றே வேதம் பேசும். ஆத்மாக்களின் ஸ்வரூபம் போலவே, ஜ்ஞானமும் நித்யமாய், ஜடமில்லாததாய்-ஆனந்த ரூபமாயிருக்கும். ஆயின், ஸ்வரூபத்திற்கும், ஜ்ஞானத்திற்கும் வேறுபாடு என்னவென்றால், ஸ்வரூபம்-தர்மீ (தர்மத்தையுடைய). சுருக்கமும், பெருக்கமுமற்றது. பிற பொருட்களை விளக்கமாட்டாதது. தன்னையே தான் விளக்குவது. அணுவாயிருத்தல், ஜ்ஞானமோ, ஜீவனின் தர்மமாய், சுருங்கியும், பெருகியும், பிற பொருட்களை விளக்கவல்லது.

தனக்குத்தான் விளக்க வியலாதது. தன்னைச் சார்ந்ததைத்தான் விளக்குவது. விபுவாய் (எங்கும் பரவி) நிற்றல், என்ற தன்மைகளைக் கொண்டது.

நித்ய ஸூரிகளின் ஜ்ஞானம் விபுவானது. பொய்ந்நின்ற ஜ்ஞானமும் பொல்லா வொழுக்கும் அழுக்குடம்புமான பத்தர்களின் ஞானம் -கர்மாக்களுக்-கேற்ப சுருங்கியும், விரிந்தும் அவிபுவாய் இருப்பது. முக்தியடைந்தோரின் ஜ்ஞானம் ஸம்ஸார தசையில் அவிபுவாயும், முக்தி தசையில் விபுவாயுமிருக்கும். இந்திரியங்களின் மூலம் வெளியாகி, விஷயங்களை க்ரஹிப்பதும் மீள்வதுமாயிருப்பதால் ஜ்ஞானம் பிறந்தது, அழிந்தது என்றெல்லாம் வழக்கு தோன்றுகிறது.

செயல், குணங்களையேற்று ஜடமில்லாமலிருப்பதால் ஜ்ஞானத்தை ஒருத்ரவ்யம் (பொருள்) என்பர். ஸுஷுப்தி, மூர்ச்சை காலங்களில் இது வெளியே பரவுவதில்லை. அடங்கிக் கிடக்கும். உலகிலுள்ள எல்லாப் பொருட்களும், ஈச்வர ஸ்வரூபமேயாயினும் ஒன்று அனுகூலமாயும், மற்றொன்று பிரதிகூலமாயும் தோன்றுவது அறியாமையாலே. (தேஹ ஆத்மப்ரமம் முதலியவற்றால்) வந்தேறியானது. உண்மையில், எல்லாப் பொருட்களும் அனுகூல-மானவையே. இடம், பொருள், ஏவலுக்கேற்ப ஒன்றே ஒருவனுக்கு அனுகூலமாயும், ப்ரதிகூலமாயும் தோன்றலாம்.

அசித்து அசித்தென்பது அறிவற்று, மாறுபாட-டைவதாம். இதுவும் சுத்தஸத்வம், மிச்ரதத்வம், ஸத்வசூன்யம் எனவும் மூவகைப்படும். சுத்த ஸத்வமென்பது. ரஜஸ்-தமஸ்ஸுக்கள் கலவாமல், தனிஸத்வமாய் நித்யமாய், ஜ்ஞானத்தையும்,

ஆனந்தத்தையும், உண்டாக்குவதாய், பகவானின் ஸங்கல்பத்தால், விமானம், கோபுரம், மண்டபம், மாளிகை என்றிவ்வாறு பரிணமித்து எல்லையிலா வொளியுடன், யாராலும் அளவிடற்கரிதாய், மிகவும் விசித்திரமாயுள்ளது. ஸம்ஸாரிகளைத் தவிர ஏனைய ஜீவர்களுக்கும், ஈச்வரனுக்குமே தோன்றுவது. மிச்ரஸத்வமென்பது-மூன்று குணங்களின் கலவையாய், ஸம்ஸாரிகளின் ஜ்ஞான ஆனந்தங்களை மறைப்பதாய், மதிமயக்கத்தைத் தருவதாய், நித்யமாய், எம்பெருமானின் லீலைக்கு உபகரணமாய், பற்பல மாறுபாடுகளையுண்டாக்கவல்லதாய், ப்ரக்ருதி, மாயை, அவித்யை என்றெல்லாம் குறிப்பிடப்படும் அசேதனம்.

இந்த ப்ரக்ருதி அவிபக்த (ஒன்றிய) தமஸ், விபக்தமாய் (பிரிந்த) அக்ஷரம் என்னும் சில நிலைகளைப் பெற்றிருக்கும். இதிலிருந்து பல குணச்சேர்க்கைக் கேற்ப, மஹான், அஹங்காரம் முதலியன தோன்றும். ஸத்வகுணம், ஜ்ஞானத்தையும், சுகத்தையும், அவையிரண்டின் சேர்த்தியையும் உண்டாக்கவல்லது. ரஜோகுணம், காமம், பிற விஷயங்களையடையும் இச்சை, புத்ரமித்ர, களத்ராதிகளின்ப்ரியம் இவற்றை யுண்டாக்கவல்லது.

தமோகுணம்-விபரீதஜ்ஞானம், கவனக்குறைவு, சோம்பல், உறக்கம் இவற்றையுண்டாக்கும்.

முமுக்ஷுப்படியில் வைணவனுக்கு இன்றியமையாத பண்புகளை 116ஆவது சூர்ணிகையாலே (சூத்திரம்) விளக்குகிறார். புறம்புண்டாக பற்றுக்களையுடைய வாஸனையோடே விடுகையும், எம்பெருமானையே தஞ்சமென்று பற்றுகையும் பேறுதப்பாதென்று

துணிந்திருக்கையும், பேற்றுக்கு த்வரிக்கையும், இருக்கும் நாள், உகந்தருளின நிலங்களிலே, ப்ரவணனுய், குணுனுபவ கைங்கர்யங்களிலே பொழுது போக்கையும், இப்படி இருக்கும் ஸ்ரீ வைணவர்கள் ஏற்றமறிந்து, உகந்திருக்கையும், திருமந்திரத்திலும், த்வயத்திலும், நியதனுகையும், ஆசார்யப்ரேமம் கனத்திருக்கையும், ஆசார்யன் பக்கலிலும், எம்பெருமான் பக்கலிலும், க்ருதஜ்ஞனுய் ப்போருகையும், ஜ்ஞானமும், விரக்தியும், சாந்தியும், உடையவனுயிருக்கும்-பரம ஸாத்விகனேடே ஸஹவாஸம் பண்ணுகையும் வைஷ்ணவாதிகாரிக்கு அவச்யாபேக்ஷிதம்.

இதன் பொருள்: புறப்பொருட்களில் ஈடுபாடின்றி அடியோடு அவற்றைக் கைவிடல், வேறொன்றையும் நம்பாமல் எம்பெருமானே தஞ்சமென்று உறுதி கொள்ளல். அடுத்து, நாம் செய்யும் ப்ரபத்தி என்னும் உபாயம் மிகவும் அற்பமாயிற்றேயென்றே, நம்மிடமுள்ள குறைகள் ஏராளமாயிற்றேயென்றே மூன்று ஐயங்களுமின்றி நம்பிக்கை கொள்ளல்.

இப்படி உறுதியாக நம்பிய பிறகும் மாக வைகுந்தம் காண்பதற்கென மனமேக மெண்ணும் என்றபடி தாமதத்தைப் பொறுக்காமல் விரைவில் பேறு பெற விரைதல், இப்படியொருபுறம் விரைவு இருப்பினும், இவ்வுடலோடிருக்கும் நாளில் தானுகந்தவூர் என்றபடி எம்பெருமான் உகந்து அர்ச்சா ரூபமாய் எழுந்தருளியுள்ள திருப்பதிகளிலே கண்டியூர ரங்கம் மெய்யம் கச்சி பேர் மல்லையென்று மண்டும் ஈடுபாடு கொள்ளல், அதனடியாக அவனுக்கும் செய்யும் தொண்டுகளே

நற்பொழுது போக்காகக் கொள்ளல். இத்தகைய தன்மை வாய்ந்த ஸ்ரீவைணவர்களைக் காண்கையில். இந்தனத்தில் (தணலிலே) தாமரை பூத்தாற் போல இந்த லீலா விபூதியிலும் இத்தகைய சிலர் உள்ளனரே என்று வியந்து, அவர்களிடம் அன்பு கொண்டு நடத்தல்.

பின்னர் ஏற்கத்தக்கனவற்றையும், இகழத்தக்கன-வற்றையும் விளக்கும் திருமந்திரம், அதன் விளக்கமாயமைந்த த்வயமந்திரம் அவற்றிலே யீடுபடல். இவற்றையெல்லாம் உள்ளவாறு விளக்கியருளிய ஆசார்யர்களிடம் மிக்க பக்தி கொளல். தன்னை நித்ய ஸூரிகளுள் ஒருவனுக்கிய செயலால், இரும்பைப் பொன்னுக்குவது போன்ற திருத்தச் செயலால், அவ்வாசார்யனிடமும், அவனுடன் சேர்த்து வைத்த எம்பெருமானிடம் செய்ந் நன்றி மறவாமல், நல்ல நன்றியறிவுடையவனுயிருக்கை.

பிறர் கலங்கினுலும், தாம் கலங்காமல் நோக்குவாராய், மேற்கூறிய தன்மைகள் கைவரப் பெற்றவராய், தத்துவ ஜ்ஞானத்துடன், தேவையற்ற விஷயங்களிலே பற்றின்றி, இறுமாப்பு இன்றி விளக்கும் பரம ஸாத்விகனுன பாகவதன் ஒருவனிடம் கூட வசித்தல். இவையனைத்தும் வைஷ்ணவனெனப்படுபவனுக்கு இன்றியமையாத பண்புகள் என்பதாம். சிறப்பாகச் சரணுகதி செய்யும் மனிதன் கடைப்பிடிக்க வேண்டிய உணவுப் பழக்கவழக்கங்கள் இதில் விளக்கப்படுவன.

பஞ்சீகரண முறையென்பதுபடைத்தலுக்கான நேரத்திலே ஐம்பூதங்களுள் ஒன்றைப் பாதியாகவும், மற்ற நான்கையும் அரைக்கால் அளவினதாகவும் எடுத்து ஒன்று

கட்டிப் படைப்பதாகும். ஒவ்வொரு பொருளும் ஒவ்வொரு தன்மையுடையதாய் மிளிர இம்முறையே காரணமாகும். காலமென்பது - அழிவற்றதாயும் எங்கும் பரந்துள்ளதாயும், இளைஞன், முதியோன், நேற்று இன்று, நாளை முதலிய வழக்குகளுக்குக் காரணமும் ஆகும். ஒரு பொருள்: நாழிகை, நாள், மாதம் முதலிய உட்பிரிவுகளைக் கொண்டது. இதற்கென ஒரு தனி குணமுமில்லாவிடினும், குளிர்காலம், வெயிற் காலம் என்பது போல - பொருட்களின் தன்மைக்கேற்ப மூன்று குணங்களையும் இதன் மேலிட்டுக் கூறுவதுண்டு. ஸாத்விக காலம், ராஜஸ காலம், தாமஸ காலம் என்பது போன்ற வழக்குகளைக் காணலாம். சுத்த ஸத்வம் எனப்படும் ஸ்ரீவைகுண்டத்தில் நாள், நாழிகை, பகல், இரவு போன்ற காலப் பாகுபாடுகள் இல்லை. முன்-பின் என்ற பிரிவையே கூறுவர்.

சுத்த ஸத்துவம் என்பது ரஜஸ் - தமஸ் என்னும் குணங்கள் கலவாது நம் ப்ரக்ருதி மண்டலத்தில் காண்பது போலல்லாத புதுமையான ஸத்வகுணத்தின் உறைவிடமான ஸ்ரீவைகுண்டாதிகள். அவை எம்பெருமானுக்கு போக்யமாய் துய்ப்பதற்கும் கருவியாயும் இடமாயும் மிக்க ஆச்சர்யம் தருவதாகவும், பிரம்ம லோகம் முதலிய யாவற்றையும் விடப் பெரிதும் சிறந்ததாயும், யாவர்க்கும் அனுகூலமாயும் மிளிர்பவை. அதனல், அதனைப் பரமபதமென்பது கூறுவர்.

## தத்துவ ரத்நாவளியில் அசேதனன் பற்றிக் கூறும் கருத்துக்கள்:

அசேதனமானது - அறிவில்லாத வஸ்து இது (ஸ்வப்ரகாசம் தன்னை வெளிப்படுத்தல்; பரப்ரகாசம் பிறவற்றை வெளிப்படுத்தல்) தான் வெளிப்படுவது, பிறவற்றை வெளிப்படுத்துவது என்ற பயன்களைப் பெறுதது. ஆதலின், எந்தப் பயனையும் துய்த்தலும், அறிவுடன் எச்செயலிலும் ஈடுபடும் ஆற்றலுமில்லாதது. அசேதனமான பொருட்களில் முக்குணமுடைய இவ்வுலகம் எம்பெருமானுக்கு லீலா விபூதியாய் மகிழ்வூட்டுவது. ஸம்ஸாரிகளான நம் போன்ற சேதனர்கட்கோ புலன்களாயும், உடலாயும், மற்றும் பல துய்க்கும் பொருளாயும் நின்று நல்வினை தீவினைகளுக்கேற்றவாறு நலன் தருவனவாகவும், தீமை பயப்பனவாகவும் நிற்கும். ஆனல், தேவர்கள் முக்தியடைந்தவராகிவிட்டால் அவர்க்கு அப்போது இந்த லீலா விபூதியும், எம்பெருமானின் செல்வம் என்ற காரணத்தாலே இயற்கையில் மிக்க மகிழ்வையே தருவதாம். தான் ஸம்ஸாரியாய் நின்ற காலத்தே தனக்கோ பிறருக்கோ வெறுப்பூட்டுவனவாய் இருந்த பொருட்களும், தற்போது மாறி எம்பெருமானுக்கு எவ்விதமோ அவ்விதமே விருப்பு வெறுப்புகட்கு இடமில்லாதவையாகிவிடும்.

ஸத்வத்தை மட்டும் குணமாய்க் கொண்ட நித்ய விபூதியென்கிற பரமபதம் ஆனந்தத்தை அனுபவிக்கும் நிலனாய், எம்பெருமானுக்கும், அவரை விடாது பணிசெய்து நிற்கும் நித்யஸூரிகளுக்கும் அறிவு முதிர்ச்சி பெற்ற முக்தர்கட்கும் - தாம் விரும்பிய வண்ணம் எடுத்துக்

கொள்ளும் திருமேனி முதலியவையாய் எப்போதும் மிகவும் அனுகூலமாய்த் திகழும். காலம் என்பதோ ஸத்வம் முதலிய முக்குணங்களும் அற்றது. இது எம்பெருமானின் இரண்டு விபூதிகளையும் (இம்மை, மறுமைச் செல்வங்கள்) சூழ்ந்து நிற்பினும், கல்பம், யுகம், வருஷம், மாதம் முதலிய பிரிவுகளால் இந்த லீலாவிபூதியில் பல மாறுபாடுகளுக்கும் காரணமாய் நிற்கும்.

ஜீவாத்மா- பரமாத்மா இருவரின் ஜ்ஞானமும் முக்குணமும் அற்றது. அது தன்னையும் பிரகாசிக்கச் செய்து, தன்னைச் சார்ந்தோரையும் பிரகாசிக்கச் செய்யவல்லது. ஆதலின் சித் (அறிவு) என்ற பெயரைப் பெறுகிறது. அதே நேரத்தில் தான் வேறு ஒரு ஜ்ஞானத்தைத் தழுவாமையாலே அசித் என்றும் கூறப்படுகிறது. சேதனனை எம்பெருமானைப் போலவே ஆத்மா என்றும், அசேதனத்தை அநாத்மா என்றும் பிரிப்பதுண்டு. இந்த தர்மபூதஜ்ஞானம் இரு ஆத்மாக்களிடமும் இருப்பது - இதுவும் அசேதனம் தானென்றாலும் - அதனைப் பற்றிய அறிவு அவசியமற்ற-தென்பதால் அதனை நான்காவது அசேதனமாய் கணக்கிடுவதில்லை.

## அசேதன தத்துவங்களின் விரிவு

ஸத்துவ குணம், ஜீவனுக்கு ஜ்ஞானத்தையும், இன்பத்தையும் தரும். ரஜோ குணம், ஜீவனுக்கு ஆசையையும் துன்பத்தையும் தரும். தமோ குணம், கவனக் குறைவையும் மதிமயக்கத்தையும் உண்டாக்கும்.

மூலப்ரக்ருதியில் ஒரு பகுதி மஹான் என்ற தத்துவமாக மாறுகிறது. மஹானின் பகுதி அஹங்காரம் என்ற மாற்றம் பெறுகிறது. அந்தந்த தத்வம் முழுவதும் மாறுபடாமல் ஒவ்வொரு பகுதியே மாறுவதாகக் கொள்வதால் தனித் தத்துவம் எனப்படுகின்றது. இவை முற்கூறியபடி 24 ஆகும்.

மூலப்ரக்ருதியில் மூன்று குணங்களும் சமமாய் நிற்கும் நிலையே மஹாப்ரளயம் ஆகும். இந்நிலையில் மஹான் முதலிய தத்துவங்கள் தோன்றுவதில்லை. எம்பெருமான் உலகைப் படைக்க ஸங்கல்பம் (விருப்பம்) கொள்ளும்போது ப்ரக்ருதியின் முக்குணங்களில் ஏற்றத்தாழ்வு ஏற்பட்டு ஒரு பகுதி மஹான் என்னும் தத்துவமாய் மாறும். அதன் ஓர் பகுதி அஹங்காரம் என்னும் தத்துவமாய் மாறுகின்றது. அதுவும் முக்குண- முடையது. அவற்றுள் ஸாத்விகமான அஹங்காரத்திலிருந்து ஐந்து கர்மேந்திரியங்கள், ஐந்து ஜ்ஞானேந்திரியங்கள், மனம் என்பன உண்டாகின்றன. தாமஸ அகங்காரத்திலிருந்து தன்மாத்ரைகளை வாயிலாகக் கொண்டு ஐந்து பூதங்களும் உண்டாகின்றன.

## 5.2. பஞ்சபூத உற்பத்தி

தாமஸ அஹங்காரத்திலிருந்து சப்த தன்மாத்திரம் பிறக்கிறது. தன்மாத்திரமென்பது ஒவ்வொரு பூதமும் தோன்றும் போது அதற்கு முன்பு சூக்ஷ்மமான நிலையில் உள்ள பொருளாகும். பால் தயிராக மாறுதல் அடையும்போது நடுவில் உள்ள நிலை போல் ஒரு திரவியம் (பொருள்) ஒரு பூதமாக மாறும்போது நடுவில்

உள்ள ஒரு நிலை தன்மாத்திரையெனப்படும். அந்நிலையிலுள்ள பொருள் தன்மாத்திரம் எனவும் கூறப்படும்.

தாமஸ அஹங்காரத்திலிருந்து சப்த தன்மாத்திரமும், அதிலிருந்து ஆகாயமும் தோன்றும். ஆகாயத்திலிருந்து ஸ்பர்ச தன்மாத்திரமும் அதிலிருந்து வாயுவும் தோன்றும். வாயுவிலிருந்து ரூப தன்மாத்திரமும் அதிலிருந்து தேஜஸ்ஸும் (ஒளி) தோன்றும். தேஜஸ்ஸிலிருந்து ரஸ தன்மாத்திரமும், அதிலிருந்து நீரும் தோன்றுகின்றன. நீரிலிருந்து கந்த தன்மாத்திரமும் அதிலிருந்து ப்ருதிவியும் (நிலமும்) தோன்றுகின்றன.

ராஜஸ அஹங்காரம் என்பது மற்ற இரண்டு அஹங்காரங்களிலிருந்து பல பொருட்களும் தோன்றும்போது அவற்றுக்குத் துணையாய் நிற்பதாம். பானை தோன்ற மண் காரணமாவது போல், ஐந்து தன்மாத்திரங்களும், ஐந்து பூதங்கள் தோன்ற காரணமானதாகும். அவற்றிடையே, சப்தம் (ஒளி) முதலிய குணங்கள் உண்டு. ஆனால் நாம் அறிய வொண்ணுதபடி சூக்ஷமமாய் அவை நிற்கும். அந்தப் பூதங்களிலுள்ள மேற்படி குணங்களோ வெளிப்படையானவை. ஆகவே, தன்மாத்திரங்களும் குணங்களும் வெவ்வேறானவை.

நிலம், நீர், தீ, வளி, விண் என்ற இவ்வைந்து பூதங்களிடையே முறையே மணம் (கந்தம்), சுவை (ரஸம்) உருவம், ஸ்பரிசம், சப்தம் (ஒலி) என்ற குணங்களுண்டு. நிலத்தில் - ஐந்து குணங்களுமுண்டு. நீரில் மணம் தவிர ஏனைய நான்குமுண்டு. தீயில், ரஸமும், கந்தமும் தவிர

ஏனைய மூன்றும் உண்டு. வாயுவில் சப்தமும் ஸ்பர்சமுமுண்டு. ஆகாயத்தில் சப்தம் மட்டுமே உண்டு.

இவ்வாறு 24 தத்துவங்களைக் காரணமாகக் கொண்டு வெவ்வேறு விகிதத்தில் கலவை செய்து எம்பெருமான் படைக்கும் படைப்புக்களுக்கு எல்லையேயில்லை. எத்தனை எத்தனையோ ப்ரஹ்மாண்டங்களும் இவ்வாறே படைக்கப்படுகின்றன. ஆற்றில் புது வெள்ளமும், நீர் நடுவே புதுப்புதுக் குமிழிகளும் தோன்றுவதும் மறைவதும் போலவே, எம்பெருமானின் ஸங்கற்பத்தால் (திருவுள்ளத்தால்) ப்ரக்ருதியின் மூலம் பற்பல ப்ரஹ்மாண்டங்களும், உலகங்களும், தோன்றுவதும், அழிவதுமாய் நித்தமும் காட்சி தரும். இந்நிகழ்ச்சிக்குக் காலமும் காரணமாகும். ஜீவன்களைத் தம் வினைகளுக்கு ஏற்ப மயக்கி பயனையனுபவிக்க வைப்பது எம்பெருமானின் விளையாட்டாகும். இந்தக் காலமும் ஆதியந்தமில்லாத நித்தியப் பொருளாகும்.

## இறையனுபவம். பரமபதம் அல்லது மோட்சம்

மஹா யோகிகளான ஸநகர், ஸநந்தநர், முதலியோர்கள் கூட இதன் ஸ்வரூபத்தையும், ஸ்வபாவத்தையும், வாய்விட்டு வர்ணித்தல் இயலுவதன்று. மனதிற்கும் எட்டாத பேரின்ப நிலை இது. ஆழ்வார்கள், இந்த சுத்த ஸத்துவமயமான ஸ்ரீவைகுண்ட லோகத்தை "சேணுயர் வானம்" தெளிவிசும்பு, பொன்னுலகு, கலங்காப் பெருநகரம், மாகவைகுந்தம் என்றெல்லாம் புகழ்ந்து பாடுகின்றனர்.

அவ்விடம் செல்பவர் அனுபவிக்கும் பொருட்கள் அளவிலாத வியப்பைத் தருவன. பாங்கான இடங்களும் அற்புதமானவை. அவ்வுலகத்துடன், பிரம்மாவின் உலகத்தைக் கூற ஒப்பிடல் தகாது. இத்துடன் அதனை ஒப்பிட்டுக் காண்கையில், அது நரகமாகத் தோன்றுமாம். இந்த சுத்த ஸத்துவமே பரமபதத்தில் எம்பெருமானுக்கும், நித்ய ஸூரிகளுக்கும், முக்தர்கட்கும், திருமேனியாயும், அணிகலன்களாயும் வடிவு கொண்டுள்ளது. அவ்வாறே இது நகரமாயும், கோபுரமாயும் யாவரும் அனுபவிக்கத்தக்க பொருட்களாயும் அங்கு காட்சி தரும். விசித்திரமான வெள்ளத்தைப் போல் மேன்மேலும் அது செயலாற்றிக் கொண்டேயிருக்கும்.

ஸ்ரீவைகுண்டம் என்பது தெய்வீகமானதொரு உலகம். இதில் பல தேசங்கள், நகரங்கள், விமானங்கள், மண்டபங்கள், கோபுரங்கள் போன்ற பிரிவுகள் உண்டு. இவ்வளவு- பிரிவுகட்கிடையே முக்கியமாய்த் திகழ்வது திருமாமணி மண்டபம். இதற்குள் திருவனந்தாழ்வான் (ஆதிசேடன்) என்னும் நித்ய ஸூரி தானே ஒரு கட்டில் வடிவமாகத் திகழ்கிறார். இதன் மேல் அமர்ந்துள்ள திவ்ய தம்பதிகளே லக்ஷ்மி நாராயணர்கள். இவர்கள் எப்போதும் உலகைக் காப்பதையே குறிக்கோளாகக் கொண்டு திகழ்வதால், இந்தக் கட்டிலை "திவ்யயோக பர்யங்கம்" என்று சான்றோர் போற்றுவர். இந்த திவ்ய தம்பதிகள் பத்தர் (ஸம்ஸாரிகள்), முக்தர், நித்யர் என்ற மூவகைச் சேதனர்களையும், ப்ரக்ருதி, சுத்த சத்வம், காலம் என்ற மூவகை அசேதனங்களையும் தம் வசப்படுத்தித் தலைமை தாங்குகின்றனர். இவ்வாறு அவர்கள் பரம பதத்தில்

வீற்றிருக்கும் நிலையினை மோக்ஷம் பெற விரும்பும் பக்தர்கள், உள்ளத்தில் தியானித்திருப்பர். முக்தி பெற்றவரோ நேராகவே கண்டுகளிக்கும் வாய்ப்பினைப் பெறுவர். அங்கு சென்றவர் யாரும் தாம் விரும்பும் எந்தவிதமான திருப்பணியையும் செய்து களிக்கலாம். அங்கு உயர்வு தாழ்வு வேறுபாடு ஏதும் இலது. பிராட்டியார் அவரவர்க்கு விருப்பமான திருப்பணியைத் தந்து மகிழ்வுறச் செய்கிறுள். அங்குள்ள சேதனங்களுக்கும் எம்பெருமானுக்குமிடையே, ஆனந்தத்தில் சிறிதும் ஏற்றத் தாழ்வே கிடையாது. விளையாடுபவர்களுக்கும் விளையாட்டைப் பார்ப்போருக்குமிடை மகிழ்ச்சியில் வேறுபாடு ஏது? அங்கு பலர் சாமகானம் செய்து மகிழ்வர், சிலர் ஆடுவர். சிலர் வெண் கொற்றக் குடை பிடிப்பதும், கவரி வீசுவதும் திருவடிகளைப் பற்றிப் பராவுவதுமாய்ப் பொழுது போக்குவர். எந்தெந்தப் பணி செய்வோரும் பெறுவது ஒரே பேரின்பந்தான். நமக்கு வழி காட்டி முக்தி தரும் நம் ஆசார்யர்கள் அனைவரும், ஆங்கு நித்ய ஸூரிகள் - முக்தர்களோடு வீற்றிருந்து பணி செய்யக் காணலாம்.

## பக்தர்/ப்ரபன்னன் முக்தி பெறும் முறை

சாமான்ய மக்களுக்கு எந்தெந்த திதி, நாள், நக்ஷத்திரத்தில் மரணமடைந்தால், நற்கதி கிட்டும் என்றெல்லாம் விதிமுறைகள் வகுக்கப் பட்டுள்ளன. ஆனல், ப்ரபத்தி செய்து கொண்டவர்களுக்கு இவ்விதக் கட்டுப்பாடுகள் எவையுமில.. எப்போது அவர்

மரணமடைந்தாலும், எம்பெருமான் உடனே அவருக்கு வைகுந்தம் தருவான்.

## 5.3. சீவன் சரீரத்தினின்றும் வெளியேறும் முறை

எம்பெருமான் சீவனைச் சரீரத்தினின்று அழைத்துச் செல்ல முற்படுங்கால், கர்மேந்திரியங்களையும், ஞானேந்திரியங்களையும் மனத்தில் இணைப்பான். மனத்தை பிராணவாயுவுடன் சேர்த்து இவையனைத்தையும் ஜீவனுடன் சேர்ப்பான். மனிதனின் முதுகில் மேற்புறம் தூண்போல் மூன்று எலும்புகள் கூடி நிற்கின்றன. எம்பெருமான் “த்ரி ஸ்தூணம்” எனும் அவ்வெலும்புகளைக் கடைந்து, ஐம்பூதங்களின் சூக்ஷ்ம அம்சங்களை எடுக்கிறான். அப்போது ஏற்படும் வேதனையைக் குறைக்க சீவனைத் தன் மீது சார்த்திக் கொள்வான். இது எல்லா சீவர்களுக்கும் பொது. இதன்பின், உடலிலுள்ள 101 நாடிகளில் உயரச் செல்லும் “ஸுஷும்நை” ப்ரஹம நாடி எனப்படும். மூர்த்தன்ய நாடியின் வழியே வெளியேற்றி அர்ச்சிராதி மார்க்கத்தில் அழைத்துச் செல்கின்றான்.

### அர்ச்சிராதி மார்க்கம்

மூர்த்தன்ய நாடி வழி - வெளிவந்த பிரபன்ன சீவனை அக்கினிதேவன், பகல், சுக்லபக்ஷம், உத்தராயணம், வர்ஷம், இவற்றிற்குரிய தேவர்களும், வாயு, சூர்யன், சந்திரன், மின்னல் தேவதை, வருணன், இந்திரன், பிரஹ்மா என்னும் தேவர்களும் தக்க உபசாரங்களுடன் வரவேற்று தத்தம் எல்லைகளைக் கடத்தி வழி நடத்திப் போவர். இதுவே அர்ச்சிராதி கதி எனப்படும். இதனை அதிகார சங்கிரஹம் 67ம் பாசுரத்தில்,

நடைபெற வங்கி பகலொளி நாளுத்த ராயணமாண்
டிடை வரு காற்றி ரவி யிரவின் பதி மின் வருணன்
குடையுடை வானவர் கோன் பிரசாபதி யென்றி வரா
லிடையிடை போகங்க ளெய்தி யெழிற் பத மேறுவரே

என்று தேசிகனுர் விளக்கி யருளுவார்.

அவ்விடம் அந்த சீவன் அடையும் பரிபூர்ணமான பிரஹ்மானுபவத்தை,

ஏறி யெழிற் பத மெல்லா வுயிர்க்கு மிதமுகக்கும்
நாறு துழாய் முடி நாதனை நண்ணியடிமையினங்
கூறு கவர்ந்த குருக்கள் குழாங்கள் குரைகழற்கீழ்
மாறுத லின்றி மகிழ்ந்தெழும் போகத்து மன்னுவமே.

என்று விளக்குகிருர்.

## பரம பதம் சேர்ந்து பகவதனுபவம் பெறல் (வே)

அர்ச்சிராதி கதியைக் கடந்த சீவன், ஸ்ரீவைகுண்டத்தை நெருங்குவான். அது வரை ப்ரபத்தியின் பெருமையினுல் தொடர்ந்த சூக்ஷ்ம சரீரத்தைக் கைவிட்டு, அங்குள்ள "விரஜை" என்ற அமுத நதியினைத் தன் ஸங்கற்பத்தால் தாண்டுவான். பின்னர், ப்ரக்ருதி சம்பந்த மற்றதும் சுத்த ஸத்துவமயமுமான திவ்ய சரீரத்தை யவனருளால் அடைந்து, "ஐரம்மதீயம்" என்னும் திவ்யமான தடாகத்தையும் கடப்பான். "ஸோம ஸவனம்" என்னும் அரச மரத்தையணுகியதும், 500 அப்சரஸ் பெண்கள் தம் கைகளில் மாலை, மை (அஞ்சனம்), வாசனைப் பொடிகள், திவ்யாபரணங்கள் முதலியவற்றை ஏந்தி வந்து உபசரிப்பர். இவனுக்கு "ப்ரஹ்மாலங்காரம்" என்னும் ஒப்பனையைச் செய்விப்பர். இதனுல், சுத்த

ஸத்துவமயமான, மணம், சுவை, ஒளி முதலியவற்றைப் பெறுவான். பின் இவனைப் பல நித்ய ஸூரிகளும் எதிர்கொண்டு அழைப்பர். அங்கிருந்து திவ்ய கோபுரத்திற்குள் சென்று, காவல் புரியும் இந்திரன், பிரசாபதி என்போரால் உபசரிக்கப் பெற்று, நித்ய ஸூரிகளாலும் மஹர்ஷிகளாலும் தத்தம் இருப்பிடத்திற்கு அழைத்து உபசரிக்கப் பெறுவான். பின்பு திவ்ய ஸூரிகள் உபசரித்தழைத்துச் செல்ல, ஆநந்தமயமான திவ்ய மண்டபத்தினுள் பிரவேசிப்பான். அங்கு நித்ய ஸூரிகளும், முக்தர்களும், பகவானின் கல்யாண குணங்களைப் பேசி மகிழ்ந்திருக்கும் கோஷ்டியைக் கண்டு களிப்பான். இவனை யங்கு வரக் கண்ட இவனுசார்யர்கள், நம் முயற்சி பலித்ததே என்று உளம் உவப்பர். இவனும் அவர்களிடம் தன் நன்றியை யறிவித்து வணங்குவான். பின்னர், அந்தத் தெய்வீக மண்டபத்தில் தெய்வீகக் கட்டிலில் ஆதிசேஷன் மீது மூன்று பிராட்டிமார்களுடனும், எழுந்தருளியிருக்கும் ஸ்ரீமந் நாராயணனைக் கண்ணுரக் கண்டு, அவனது ரத்தினக் கட்டில் மேலேறி திவ்ய தம்பதிகளிடம் அன்புடன் அளவளாவுவான். இதுகாறும், இவன் இழந்திருந்த இழப்பையெல்லாம் தீர்த்து, அவனைப் போன்ற குணங்களைப் பெற்றவனுய், அவன் திருவடிகளின் கீழ் அனந்த, கருட, விஷ்வக்ஸேனர் முதலிய நித்ய ஸூரிகளின் கோஷ்டியுடன் கலந்து எங்கும், எப்போதும், எந்நிலைமையிலும், எவ்விதமான கைங்கர்யத்தையும் (பணியையும்) பெற்று ஆனந்தக் கடலினுள் மூழ்கி நிற்பான். இவன் அங்கிருந்து ஒருபோதும் இங்கு திரும்புவதில்லை. தன் விருப்பப்படியோ, பகவானின்

ஸங்கல்பப்படியோ இந்த ப்ரக்ருதி மண்டலத்திற்கு வருவானாயினும், அந்த கைங்கர்ய ரஸத்திற்குச் சிறிதும் குறையேற்படுவதில்லை. இத்தகைய அனுபவமே பரிபூர்ண ப்ரஹ்மானுபவம் என்று இந்த தேசிகன் சமயத்தில் கூறப்படும்.



# இயல் 6

# சிறப்புச் செய்திகள்

## இலக்கியக் கண்ணோட்டம்

## திருமங்கையாழ்வாரின் பெண்மை யனுபவம்

## பரகால நாயகி

(பெரிய திருமொழிக் காட்சிகள்)

இவ்வாழ்வார் பராங்குச நாயகி போலே (நம்மாழ்வாரின் அனுபவம்) தாமும் நாயகியான பாவத்தை-யேறிட்டுக்கொண்டும், தாயாகவும், செவிலியாகவும் பல அனுபவங்களையும் தம்பனுவல்களில் காட்டுகிறார். எம்பெருமானின் திருமார்பிலே திருத்துழாய் மாலையைக் கண்டாள் இத்தலைவி. கரையிலாக் காதலாலுருகுகிறாள். அவளுக்குத் தென்றற் காற்றும், அனலாய் வீசுகிறதாம். வானத்திலிருந்து விழும் மழைத் துளிகளும் ஈரவாடையோடு பரவுகின்றன. அவை சிறிதும் ஈரமற்று இவளது உள்ளத்தையே அறுக்கின்றனவாம். இத்தனை கொடிய தண்டனைகள் எனக்கேன் ஏற்பட்டன? அவனது தாரணிந்த மார்பைக் கண்டதனால்தான் ஏற்பட்டன என்று அங்கலாய்க்கிறாள்.

“தாரும் மார்வமும் கண்ட தண்டமோ?
சோரும் மாமுகில் துளியினூடு வந்து
ஈரவாடைதான் ஈரும் என்னையே”

என்று மனம் சோருகிறாள்.

சோலையிலே கூடிக் குலாவும் இணையிணையான வண்டுகளைக்காண்கிறாள். அந்த வண்டுகளையும், பிற பறவைகளையும் தலைவன் மாட்டுச் சென்று தனக்காக

தூது சொல்ல வேண்டுகிறாள். செங்கால்மட நாரையே! என் துணைவரிடம் சென்று எனக்காகத் தூது சொல்வாயாகில் அதற்கொப்பான இன்பம் எனக்கு வேறில்லை யென்கிறாள். நாரையே, நீ போய்த் தூது சொல்லி வந்தபின் உன் பேடையுடன் சேர்ந்து இவ்விரு நிலத்தில் பேரின்பம் துய்க்கலாம் என்று அதற்கு ஓர் மகிழ்ச்சியையும் ஊட்டுகிறாள்.

அடுத்து காக்கைப் பிள்ளையே! கருமாமுகில் நிறத்தன் உத்தமன் என்னை நோக்கி வருமாறு கரைக என்று வேண்டுகிறாள். மணிவண்ணன் வருமாறு குயிலே! நீ கூவுக என்கிறாள்.

தான் காதலனைக் கண்ட பின் பக்கத்திருப்பாரைப் பார்த்துக் கேட்பவள் போல, காவி மலரும், கடலும் போன்று நீண்ட திருக்கண்களும், வடிவழகும் கொண்டு நிற்கிறாரே இவர் யார்? என்று கேட்கிறாள். அகற்கவன் தானே, விடையாக "அட்டபுயகரத்தோன்" என்று ஊரைக் குறிப்பிட்டுக் கூறினாராம். இப்படியொரு பிரமை அல்லது கற்பனை, உள்ளத்திலே இவளுக்குத் தோன்றுகிறது.

இவளது இத்தகைய பேதலிப்பைக் கண்ட தாய், இவள் நோய்க்கு எது காரணமாகலாம் என்பதை ஒருவாறு ஊகிக்கிறாள்.

"கண்டவர் தம் மனம் வழங்கும் கண்ணபுரத்(து)
அம்மானைக் கண்டாள் கொலோ?"

அயனைக் கண்டால் தான் இவ்வாறு உள்ளத்தைப் பறிகொடுத்திருக்கக்கூடும் என்று கருதுகிறாள்.

மாதுள முத்துப் போன்ற பல் வெளியே தெரியச் சிரிக்கும் அழகு, ஓர் அழகுத் தெய்வமே சிரிப்பது போல் இருக்கும். தற்போது தோழிகளிடமும் அத்தகைய சிரிப்பினை மறந்துவிட்டாள். கண்களில் மையிடு-வதில்லை. கூந்தலிலே நறுமலர் சூடாள். சந்தனம் பூசி முத்து மாலை யணிவது நெருப்பை வாரிக் கொட்டுவதுபோல் அவளுக்கு வெப்பத்தை மிகுவிக்கும். ஒன்றும் சொல்லத் தெரியாமல் "ஓ" என்று கதறுகிருள். காதலனின் பெருமையை யாரேனும்சொல்லத் தொடங்கி-விட்டால் போதும், "அவன் அப்படிச் செய்தான், இப்படி செய்தான்" என்றெல்லாம் விரிவாகப் பேசிக்கொண்டே யிருந்து விடுகிருள். இப்படியெல்லாம் "ஏழை என் பெண்ணுக்கு என் நினைந்திருந்தாய்?" என்று தாய் கேட்டுப் பரிதவிக்கிறதாக ஒரு காட்சி.

தாய், மேலும் தன் மகள் காதல் நோயால் படும் பாட்டைப் பரிதவிப்புடன் பேசுவதைக் காணலாம்.

"பந்தாடு கழல் மருவாள்; பைங்கிளியும்
பாலூட்டாள்: பாவை பேணுள்.
... . . . . . . . . . . . . . . . . . . . . .
அந்தோ! வந்து என் மகளைச் செய்தனகள்
அம்மனைமீர்! அறிகிலேனே" என்கிருள்.

என்னைப் போல் பெண்ணைப் பெற்றெடுத்த தாய்மார்களே! எவனே வந்து என் மகளின் உள்ளத்தைப் படாதபாடு படுத்திவிட்டான். அதனுல் அவள் வந்து பந்துபோல் கழற்சி காய்களையும் கொண்டு விளையாடவும் மறந்தாள்; தான் வளர்க்கும் உயிர்க்குயிரான பச்சைப்

கிளிகளுக்குப் பாலூட்ட மறந்தாள்; விளையாட்டிற்கான பதுமைகளையும் விரும்பவில்லை. இவ்வாறு நம் குடிக்கு ஏலாத காதல் வயப்பட்டு எனக்கு அடங்காமல் மனம் போன போக்கில் செல்லும் ஓர் பெண்ணைப் பெற்றெடுத்துத் திண்டாடுகிறேன். என்ன பாவம் செய்தேனோ? என்று கேட்கிறாள்.பெற்றோர்களையெல்லாம் உதறிவிட்டு இரக்க- மின்றி மீன்போல் அழகிய கண்களுடன், அவனைப் பின்தொடர்ந்து கொஞ்சிக் கொண்டே போயினளே! அவளை என் நெஞ்சு எப்படி மறக்கும் என்று வருந்துகிறாள்.

தலைவி, தலைவன் வரவிற்காக நீண்டநேரம் காத்திருந்து, அந்திவேளையிலே சிந்தையை அவன்பால் செலுத்தித் தனித்துத் தவித்திருக்கிறாள். அப்போது வந்த தோழியிடம் அவனுடன் பேசித் துயரத்தைக் குறைத்துக் கொள்ளலாமென எண்ணுகிறாள். மறுவிநாடியே அவளையும் மறந்தவள்போல் புலம்புகிறாள் - பரிதாபம்!

"ஊரும் துஞ்சிற்று; உலகமும் துயின்றது;
ஒளியவன் விசும்(பு) இயங்கும்;
தேரும் போயிற்று, திசைகளும் மறைந்தன;
செய்வதொன்றறியேனே!"

என்று கூறியபின் இரவு வேளையில், தானும் தோழியுமாய் நின்று

"கரிய நாழிகை ஊழியிற் பெரியன;
கழியுமா(று) அறியேனே"

என்று இரவில் ஒவ்வோர் நாழிகையும், ஊழிகாலம் போல் நீளுகின்றனவே? இரவு எப்படிக் கழியும்? என்று புலம்புகிறாள்.

பின் தலைவன் நிலையைத் தோழியிடம் வெளியிடுகிறாள்.

கைவளையும், மேகலையும் காணேன்; கண்டேன்
கனகமகரக் குழையிரண்டும் நான்குதோளும்;
"எவ்வளவுண்டு எம்பெருமான் கோயில்?
என்றேற்கு இதுவன்றோ எழிலாலி என்றார் தாமே."

என்றிவ்வாறு பழைய அனுபவத்தைக் கூறுகிறாள்.

ஊர் எது? என்று நாணத்தோடு கேட்ட அவளுள்-ளத்தையும் கைவளையையும் கவர்ந்துகொண்டு அவன் போனான், எனதூர் பொழில் சூழ்ந்த புனலரங்கம் என்று சொல்லிச் சென்றானும்.

"என் நலனும், என் நிறையும் என் சிந்தையும்
என் வளையும் கொண்டென்னை ஆளுங்கொண்டு
பொன் அலர்ந்த நறுஞ்செருந்திப் பொழிலினூடே
புனலரங்கம் ஊரென்று போயினாரே"

இனி அவ்வாறு என்னை விட்டுச் சென்றவனை இனிதாக நான் கனவில் காண்பேன். அப்படிக் காண்கையில், அவனை நான் "புள்ளூரும் கள்வா நீ போகேல்" என்று தடுப்பேன் என்கிறாள். இப்படி கள்ளமின்றி, நிறைந்த காதலுள்ளம் கொண்டவள், அவனை என் இதயத்துள்ளேயே பூட்டிவிடுவேனெனவும், எப்போதும் அவனையே நினைந்து உருகிக் கொண்டிருப்பனென்றும் புலம்பும் போது பரிதாபவுணர்ச்சி நமக்கும் ஏற்படுகிறது. அவள் காதலனையே நினைந்து உருகிப் பாடிக் கொண்டிருப்பதைக் கண்ட தாய் பிற பெண்களிடம், இவளது நிலையைக் கூறி வருந்துகிறாள்.

இப்போது இவளது வளர்ப்புக் கிளியும் இவள் காதலனின் பெயரைச் சொல்லிப் பாடத் தொடங்குகிறதாம். அதைக்கேட்டு மகிழ்ந்த தலைவியின் நிலை கண்ட தாய்,

"வளர்த்ததனுல் பயன்பெற்றேன்; வருக என்று
மடக்கிளியைக் கைகூப்பி வணங்கினுளே"

என்று கூறுகிருள்.

இவ்வாறு சுவைமிக்க அகத்துறையில் ஆழ்ந்து, பக்திக் காதலை, தெய்வீகக் காதலை இனிது பரகால நாயகியாய்ப் பாவனை செய்த திருமங்கையாழ்வாரால்தான் காட்ட முடியும். வேறு ஆழ்வார்கள் மூலம் இந்நிலையில் ஒப்புமையைக் காணலாம்.

**நாயக நாயகி பாவம்**

ஆழ்வார்களில் நம்மாழ்வாரைப் பராங்குச நாயகியென்றும், திருமங்கையாழ்வாரைப் பரகால நாயகியென்றும் பெரியோர் குறிப்பிட்டுப் போற்றுவர். ஆடவராயிருப்பினும் இவ்வாழ்வார்கள் தம்மைப் பெண் பாலராகவும், எம்பெருமானையே தமக்குரிய நாயகனுகவும் எண்ணி, அவனையே சார்வதற்கு முயன்றவராய் பல பல அகத்துறைப் பாசுரங்களையும் பாடிப் பரவமாயினர். உலகியலில் ஆடவர் பெண்டிருக்கிடை காதல் மிக்குக் களிப்புடன் நிகழும் நிகழ்ச்சிகளில் மக்கள் ஈடுபாடு கொள்வது போல - வேறு சுவைகளில் ஈடுபடுவது மிக அரிதேயாகும். இந்த நிலைமையுணர்ந்த ஆழ்வார்கள் - நாயக நாயகி பாவத்திலேயாழ்ந்து, எம்பெருமான் மேல் காதலாகிக் கசிந்து நீர்ப் பண்டமாய் உருகிப் பிரிவாற்றுத நிலையிலே படாதன பட்டுப் பாடிய பாக்கள் நனி சுவை

கொண்டு வைணவ சமயத்தையே உயர்த்தி நிறுத்தி வருகின்றன. இந்த திவ்யப்ரபந்தங்களின் சாரப் பொருளைச் சுருக்கி வடமொழியில் ஆக்கி அருளிய வேதாந்த தேசிகனுர், "திரமிடோப நிஷத் தாத்பர்ய ரத்னவளி" என்ற நூலிலே, "பாஞ்சாலீ காத்ர சோபா" எனத் தொடங்கும் ஒரு ச்லோகத்தில் கூறும் கருத்து ஈண்டு நினைக்கத்தக்கது. அதன் கருத்தாவது: மாபாரதத்திலே பாஞ்சாலியின் திருமேனியழகினை ஒரு ச்லோகம் கூறுகின்றது:- "ஆற்றிலே குடைந்து நீராடும் பாஞ்சாலியின் உடல் அழகைக் கண்டு, உடனிருக்கும் பற்பல தோழிமார்களும், மற்ற பெண்டிரும், ஐயோ! நாம் இவளழகைத் துய்க்கவல்ல ஆடவராய்ப் பிறந்திலமே!" என்று அங்கலாய்த்தனர்.

இந்தக் கருத்து நமக்கு அறிவிப்பது யாதெனில், ஆணே, பெண்ணே ஒரே இனத்தவரின் உள்ளத்தில் சில நேரங்களில் அழகுணர்ச்சியால் பலவகை உணர்ச்சிகள் தோன்றலாம் என்பதாகும். இவ்வண்ணம் (பாஞ்சாலியின் உடலுறுப்பழகால் கவரப்பட்ட பெண்களைப் போலவே) நமக்கெல்லாம் அன்பனாய் - திருமகளின் கேள்வனாய் மிளிரும் எம்பெருமானிடம் அடிமை செய்யப் புகுவோர் - தம் வசமிழந்து அவனுக்கு அதீனராகி விடுகின்றனர். அடியார்களின் பக்தியே பெருங்காதலாக மாறுகிறது. ஆழ்வாரின் ஈடுபாட்டு மிகுதி இப்படி பாடுபடுத்துகிறது. எம்பெருமானைச் சேராது தவிக்கும் நிலையைப் பிரிவு (பிரிவாற்றுமை) நிலையென்றும், நம் ஆசார்யர்களே அவனுடன் நம்மைச் சேர்ப்பிக்க வல்ல தூதர்கள் என்றும் எண்ணத் தகும் என்பதாகும். இக் கருத்தினைத்

திருவாய்மொழியில் முதல்பத்தில் நான்காம் பதிகம், "அஞ்சிறைய மட நாராய்" எனத் தொடங்கி 10 பாடல்களால் விளக்கக் காணலாம்.

இவ்வாறு திவ்யப் பிரபந்தத்திலே தோழி கூற்றாகவும், செவிலியர் கூற்றாகவும், நற்றாயின் கூற்றாகவும், தலைவி - தலைவன் கூற்றாகவும் மிளிரும் பாடல்கள் பலபல. இவ்வகைப் பாடல்களிடையே ஆண்டாளின் பாடல்களே, ஒரு படி மேலாகக் கருதிப் போற்றப்படுகின்றன. ஆடவர் ஆடவர் பால் காதல் கொள்வதாய்ப் பாடுவதைவிடப் பெண்ணாய்ப் பிறந்தவள் ஓர் ஆடவர் பால் காதலாலுருகிப் பாடுவது பள்ளமடையில் வெள்ளம் பாய்வதனோடொக்கும் என்றும் பூர்வர் - போற்றுவர்.

## 6.2. ப்ரதானப்ரதி தந்த்ரம்

மனிதர்களில் ஆயுட்காலம் குறுகியது. அறியத்தக்க கருத்துக்களோ அளவற்றவை. இடையூறுகளோ ஏராளம். ஆதலின் மிகவும் சாரதமமான பொருட்களை மட்டும் மனிதன் அறிய முற்படவேண்டும். அன்னம் நீரைவிட்டுப் பாலை மட்டும் பருகுவது போலவேயாதல் வேண்டும். முக்தி பெற விரும்புவோர் (முமுக்ஷுக்கள்) எம்பெருமானும் இவ்வுலகமும் முறையே உயிரும் உடலுமாயிருப்பவர் என்று உணரவேண்டும். இத்தொடர்பைச் சரீர, சரீர பாவம் அல்லது தேஹாத்மபாவம் என்பர். இத்தத்துவமே சமயத்தின் ஆணிவேரான கோட்பாடாகும். எம்பெருமானுக்கும் - உலகிற்கும் வேற்றுமை கூறுவன பல மறைத் தொடர்கள். மற்றுஞ் சில ஒன்றிப்பைக் கூறுவன. இரண்டு கருத்துக்களையும் இணைக்கும் (கடகச்ருதிகள்) தொடர்கள் சில. இவ்விருவகைத்

தொடர்களையும் ஒன்று படுத்தி முரண்பாடின்றி, பொருத்தமுற விளக்கும் சமயம் இராமானுச மதம் ஒன்றேயாகும்.

எம்பெருமான் உடைமையாளன். நாம் அவன் உடைமை. அவன் ஆள்பவன். நாம் அடிமை. அவன் உயிர்-நாம் அவனுக்கு உடல். உயிரையும் உடலையும் ஒன்றுபடுத்திப் பேசுவதும் வேறுபடுத்திப் பேசுவதும் உலகியல்பு.

உலகம் யாவும் அவனது ஸங்கல்பம் என்னும் எண்ணத்தால் படைக்கப் பட்டவை. அவனது ஸங்கல்பத்திற்கு ஏற்பவே உலகின் இருப்பும் இயக்கமும், இழப்பும் ஏற்படுவன. ஆதலின், அவனுக்கே உலகம் உடலாகின்றது.

ஜீவாத்மாவின் உடல் அவனது பிரிவால் அழிகிறது. அவனது ஸ்வரூபத்தைச் சார்ந்துள்ளது. அவன் விருப்பத்திற்கு ஏற்ப உடல் விழித்த நிலை, உறங்கும் நிலை, கனவு நிலை என்ற காலங்களில் அவனுல் தாங்கப் படுவதாகவும், கீழ்ப்படிவதாகவும் உள்ளது. அதேபோல் எம்பெருமானுக்கு உலகனைத்தும் தாங்கப்படுவதாயும் கீழ்ப்படிந்ததாயும் அடிமைத் தன்மை பூண்டதாயும் உள்ள காரணம் பற்றி சரீரம் என்றழைக்கப்படுகிறது. எம்பெருமான் தனது சக்தி, ஞானம், பலம், ஐசுவர்யம், வீர்யம், தேஜஸ் என்பன போன்றவற்றைத் தாங்கி நிற்பது போல் பொருட்களின் வாயிலாக அவற்றின் குணங்களையும் தாங்குகிறுன். அவற்றை நேராகத் தானே அவன்தாங்குகிறுன் என்றும். ஜீவாத்மாவின் மூலமாக

அவன் அவற்றைத் தாங்குகிறன் என்றும் ஆசார்யர்கள் இருவகையாக விளக்குவர்.

இவ்வாறு அவனை விட்டுப் பிரியாத நிலையில் உலகெல்லாம் - ஆதேயம், இறைவன் ஆதாரம் என்றும், அவன் ஆண்டான் - நாம் அவன் அடிமை என்றும், அவன் காவலன் - நாம் காக்கப்படுபவர் என்றும் நிலையான எண்ணம் பெற்ற முமுக்ஷுவான ஜீவன் பிற எந்த தெய்வத்தையும் நாம் விரும்பும் தலைவனுய் ஏற்காமல் புருஷார்த்தம் எனப்படும் முக்தியை அடைய தனக்கேற்ற உபாயமான சரணுகதியைச் செய்யப் பெரு விருப்பம் கொள்கிறன். இம் மாதிரியான, ஸம்பந்தங்கள் - ஆதார ஆதேய பாவம், ஸ்வஸ்வாமி பாவம், சரீர ஆத்ம பாவம், சேஷ சேஷி பாவம், நியாம்ய நியாமக பாவம், ரக்ஷ்ய - ரக்ஷக பாவம் முதலிய பல வகைகளாகப் பரக்க, நூல்களில் பேசப்படும். இவையனைத்தையும் மூலமந்திரம் என்னும் எட்டெழுத்து மந்திரத்திலும், த்வயம் எனும் இரட்டைத் தொடர் மந்திரத்திலும் சரமச்லோகம் என்னும் கீதை ச்லோக மந்திரத்திலும் ஆசார்யர்கள் பல வகைகளில் விளக்கியருளுவர்.

ஆகவே திருமகள் கேள்வனை எம்பெருமானுக்கு சேதனம், அசேதனம் எனும் இரு வகைத்தான உலகமும் (சேஷம்) அடிமை. ஆயினும் அடிமையெனும் சொல் சேதனனிடமே வழக்காறு பெற்றுள்ளது. அதற்கேற்ப அவன் பணி செய்து கிடப்பது எனும் கைங்கர்ய நிலை சேதனனுக்கே வுரியதாகிறது. உடைமையாளன் எனும் சேஷித்வம் அவனுக்கு சேதனம், அசேதனம் என்னும் வாசியின்றி அனைத்தையும் பற்றியே நிற்கிறது. இத்தகைய

எம்பெருமானுக்குக் கைங்கர்யங்கள் (பணி) செய்து நிற்கும் நிலையே புருஷார்த்தம். முக்தி என்றெல்லாம் கூறப்படும் - என்றிவ்வாறு இச் சமயத்தின் சீரியகுறிக்கோள் சித்தரிக்கப்படுகின்றது.

திருமந்திரம், துவயம், சரமச்லோகம் இவற்றின் சுருக்குகள் இங்கு நினைவு கூறத் தக்கவை.

## 6.3 இரு ந்யாயங்கள்
## மார்ஜாரகிசோர ந்யாயமும், மர்க்கடகிசோர ந்யாயமும்
### (ஸ்வகத ஸ்வீகாரமும், பரகத ஸ்வீகாரமும்)

சேதனன் தானே சென்று எம்பெருமானைச் சரணடைந்து பற்றுவது ஸ்வகத ஸ்வீகாரம் எனப்படும். இதனை மர்க்கடகிசோர நியாயம் என்பர். குரங்கு தாவிச் செல்லும்போது அதன்குட்டியே சென்று, அதனைப் பற்றிப் கொள்வதை எடுத்துக் காட்டுவதால், இந்த ந்யாயத்திற்கு இப்பெயர் தோன்றியது. தேசிகனின் வழிவந்த வைணவர் ஏற்றுள்ள வழியிதுவேயாகும். அவனையே யடைக்கலமாக நாம் அடையாவிடில், அவன் ஏற்கமாட்டான் என்ற உறுதியை இவர்கள் கொள்வர். அதனுல் இவர்களுக்கு இந்த நியாயமே ஏற்புடையதாகும். ஸர்வத்தையும் காக்க வல்லவனுகை எம்பெருமானிருந்த போதும் சேதனன் - தன்னைக் காக்க வேண்டுமென்று பிரார்த்திப்பதை அவன் எதிர்பார்க்கிறுன். ஒரு விண்ணப்பமும் இன்றி அவனும் பாதுகாப்பதில்லையென்பது வடகலை மரபினரின் துணிபு.

அடுத்து தென்கலை மரபினர் கருத்துப்படி, எம்பெருமானே சிலரைக் கருணையுடன் நோக்குகிறுன்.

அவ்வாறு நோக்கப் பெற்றவனே மோட்சமடைகிறான். இதற்கு எந்தவொரு காரணமும் பொருந்துவதாகாது. சுயேச்சையாகவே எம்பெருமான் சில சேதனர்களை வரித்துத் தன் மோட்சத்திற்கு ஏற்றுக்கொள்கிறான். இதனையே "மார்ஜாரகிசோர ந்யாய"மென்பர். பூனை, தன் குட்டிகளைத் தானே வாயால் கௌவிச் செல்வது போல, எம்பெருமானே தன்னைச் சேர்ந்தோரைக் காத்துக் கொள்கிறார். இவ்வாறு காப்பதையே மார்ஜாரகிசோர ந்யாயமென்று குறிப்பார்கள். இவ்வாறு இருசாராரும் குறிப்பிடும் இரண்டு ந்யாயங்கட்கும் அவரவர் பொருத்தமான சான்றுகளைக் காட்டி நிறுவி வருகின்றனர். இங்கு, சிறப்பாக வேதாந்த தேசிகனார் அருளும் முறையில் நாம் தான் அவன் பாதத்தைச் சென்று சரணைப் பற்றவேண்டும் என்பதனை - மர்க்கடகிசோர ந்யாயமென்றே கொள்வது பொருந்தும்.

## 6.4 வேதாந்த தேசிகனாரின் உவமைச் சிறப்பு

தம் நூல்களிலே எங்கும் ஏராளமான உவமைகளைக் காளிதாஸனைப் போல் பயன்படுத்திக் தெளிவுபடுத்தும் தேசிகனாரின் புலமை மிகவும் போற்றற்குரியது. அரிய கருத்துக்களை எளிய முறையில் விளக்க உவமை ஓர் சிறந்த உபாயமாகப் பயன்படுவது. இதனால்தான் எல்லா அணிகளுக்கும் உவமையைத் தாயாக அணிநூலார் போற்றுவர். சாதாரணமாக உவமைகளைக் காவியங்களில்தான் பயன்படுத்துவர் என்று ஒரு தவறான கருத்து சிலரிடையே காணப்படுகிறது. ஆனால், உண்மையில், வாழ்க்கையில் ஒவ்வோர்

துறையிலும் இவ்வுவமை கையாளப்படுவதால் பல செய்திகளை விளக்க எளிதாகிவிடுவதைக் காண்கிறோம்.

அவ்விதமே சாஸ்திரக் கருத்துக்களை விளக்குவதிலும் ஏராளமாக உவமைகளை அறிஞர்கள் கையாளக் காண்கிறோம். வேதாந்த தேசிகனும், தம் காவ்ய நாடகங்களில் போலவே சாஸ்திர நூல்களிலும் ஏராளமாக உவமைகளை கையாண்டிருப்பதைக் கண்டு மகிழலாம். அவர் ஸ்ரீமத் ரஹஸ்யத்ரய சாரத்தின் இரு பகுதிகளிலுமாகச் சுமார் 300 உவமானங்களை ஆங்காங்கு காட்டியுள்ளார். அவற்றுள் சிலவற்றை மட்டும் இங்கு காண்போம்.

1. முகில்கள் கடல்நீரை உட்கொண்டு யாவருக்கும் பயன்தரும் இனிய நீரைப் பொழிவது போல், வேதத்தின் மிக்க சாரமான பொருட்களை யாவரும் புரிந்து பயன் பெறும் வண்ணம் இனிய செந்தமிழ் நடையில் ஆசார்யர்களின் வாயிலாக எம்பெருமான் அருளச் செய்தான் என்னும் உவமை.
2. சிறந்த இரத்தினத்தையுள்ளே கொண்ட மாணிக்கத்-தாலான செம்பைப் போலவுள்ள திருமந்திரத்தின் சீர்மை மறைபொருளாகக் காக்கத் கடவதாம்.
3. வேடுவர் பழக்கத்தால் தீயசொல் பேசும் கிளியைப் போல்-பழக்கத்தால் யாரும் மேன்மையும் பெறலாம், தாழ்மையும் பெறலாம்.
4. அண்மையில் ஈன்ற கன்றுக்கிரங்கிப் பால் சொரியும் பசுவைப் போல ஆசார்யர்கள் சீடர்களிடம் அருள் சுரக்கின்றனர்.

5. சிறிய கண்ணாடி பெரிய உருவத்தையும் தனக்குள் காட்டுவதுபோல் திருவஷ்டாக்ஷர மந்திரம், தனக்குள் அவசியமான பல பொருட்களையும் அடக்கிக் கொண்டுள்ளது.
6. முப்பத்திரண்டடி அகலமுள்ள கிணற்றைத் தாண்ட முயன்ற இருவருள், முதலடியிலேயே விழுந்தவர்க்கும், முப்பதாம் அடியில் விழுந்தவர்க்கும் பயனில் வேறுபாடு இல்லாமை போல், எம்பெருமானின் ஆஜ்ஞையை மீறியவனைப் பல பல தடைகளால் முன்னேற முடியாமல் அவன் தடுப்பதால், இவன் ஸம்ஸாரத்தைக் கடக்க முடியாதவனேயாவான்.
7. அளவற்ற கடலிலே படகோட்டத் துவங்குபவர் வேண்டிய வழிகளை நன்கு தெளிவாக அறிந்து கொள்ளல் போல்-அவசியமான தத்துவங்களை யறிந்திடல் வேண்டும். கடலின் பல செய்திகளை அவர் ஆராயப் புகுவதில்லை யென்பது' போலத் தேவையற்ற செய்திகளை யறிய முயல வேண்டா என்பதுமாம்.
8. உழைப்பின்றியே வுண்ண வசதியுள்ளவன் உழைக்கும் ஆர்வத்தையே விடுவது போல் - மிகவும் பயனுள்ள சாரமான அம்சங்களை விரைந்து கேட்டவன், தொல்லை மிக்க சாஸ்திரங்களைப் பயில்வதில் ஈடுபடாமல் மோக்ஷத்தின் உபாயங்களில் ஈடுபடுவது எளிது.
9. விடாயைத் தீர்க்க கங்கையில் நீராடியவனுக்கு பாவமும் தானேயழிவது போல-
10 .உடலே யுயிரென எண்ணும் சார்வாகன் (நாத்திகன்) ஒருவன், அரசனின் மார்பிலே சந்தனம் பூசினாலும்,

சட்டைமீது பூமாலையை யணிவித்தாலும் அரசன் மகிழ்வது போல, எம்பெருமானின் சரீரமான பிற தெய்வங்களுக்குச் செய்யும் பூசையாலும் - எம்பெருமான் மகிழ்வடைகிறான்.

11. பொருளறியாமலே ஓர் பிரம்மசாரி, செல்வந்தர் வீட்டுப் பெண்டிர் முன் நின்று பவதி பிக்ஷாம் தேஹி என்று கேட்டதும் அவர்கள் பொருளுணர்ந்து அவனது வேண்டுகோளை நிறைவேற்றுவது போல், நாம் பொருளறியாமலே பிரார்த்தனை செய்யும் மந்திரங்களால் எம்பெருமான் உவந்து பயனை நல்குகிறான்.

12. ஒரு மலையிலிருந்து மற்றுமோர் அருகிலுள்ள மலைமீது தாவும் சிங்கத்தின் உடலில் உள்ள சிறு ஜந்துக்களைப் போலவே, நம்முடையவர் இராமானுசர்- செய்திட்ட வேண்டுகோளில் - பிற்பட்டவரான நாமும் உள்ளடங்கி மோக்ஷம் பெறத் தகுதி பெற்றுவிட்டோம்.

இலக்கியத் துறையில் நிகரில்லா உவமைத் திறனையடுக்கடுக்காய் இவ்வாசிரியரின் பாடல்களின் காணலாம். இதோ ஓர் எடுத்துக்காட்டு. பிரும்மதேவன் கரிகிரி (காஞ்சி) மீது பேரருளாளன் இரு நாய்ச்சிமாருடன் உல்லாஸமாக எழுந்தருளியுள்ள நிலையைப் பல உவமையடியாக அனுபவிக்கிறான். அக்கருத்து மெய்விரதமான்மியத்திலே பதினான்கு சீராசிரியச் சந்தவிருத்தமாய் மிளிர்கிறது.

பெடையி ரண்டையொ ரனமடைந்துபி ரிந்தி டாவகை பேசலாம்
பெருகு மருவிக ளருகு மருவிய பெரிய மணிவரை பயிலலாம்
பிடியி ரண்டொடு களவ மொன்றுபி ணைந்த பேரழ கோதலாம்
பிரிவி லொளியொடு நிழலு மருகுறு மிரவி யலகுதல் பரவலாங்
கொடியி ரண்டொடு விடவி யொன்றுகு ளிர்ந்த வாறுகு லாவலாங்
குறைவில் சுருதியு நினைவு மிலகிய தரும வருநிலை யென்னலாம்
அடியிரண்டையு மடையு மன்பர றிந்த பேரரு ளாளனு
ரணுகு மலர்மக ளவனி மகளொடு கரடி கிரியினி லவிந்தலே.

(பொருள்) அத்திகிரியில் பேரருளாளன், பெரிய பிராட்டியும் பூமிதேவியும் சேர விளங்கும் நிலைக்கு. ஓர் ஆண் அன்னம் இரு பெட்டைகளுடன் கூடிக் குலாவுவதையும், ஓர் இரத்தினமலை இருபுறமும் நீரருவி பெருகியோட நிற்பதையும், ஓர் ஆண்யானை இரு பெண் யானைகளினிடை கூடிக் குலாவுவதையும், கதிரவன், சாயாதேவியுடனும், ஒளியோடும் திகழ்வதையும் ஓர் மரம் இருபுறமும் இரு கொடிகள் சூழ விளங்குவதையும் தர்மத்தின் குக்ஷமநிலை ச்ருதி (வேதம்) ஸ்ம்ருதிகளால் திகழ்வதையும் உவமானமாகக் கூறலாம்.

**எவ்வளவு நயமான உவமானங்கள்.**

இதற்கடுத்த பாடலில் - திருமாலைப் பல கல்யாண குணங்கள் காரணமாக வேரொப்பார், விழியொப்பார், காரொப்பார், கடலொப்பார், நீரொப்புார், நிலமொப்பார், ஆதலின், இவரையொப்பவர் யாவரென்று வினவுகின்ற முறை மிகவும் சுவை மிக்கது.

இவ்வாறு ஏராளமான உவமைகளை, தேசிகனுர் நூல்களில் காணலாம்.

## 6.5 முடிவுரை

இந்தச் சிறிய ஆய்விலே எடுத்துக் கொண்ட தமிழ்ப் பிரபந்தங்கள் அனைத்திலும் வேதாந்த தேசிகனூர் வலியுறுத்தி நிலைநாட்டிய பெருங்கருத்து சரணுகதி வழியொன்றே யென்பது துணிவு: எவ்வெவ்வகையிலே மனிதன் உய்ய வழிகளைத் தேடினுலும், எவ்வழிகளிலும், எளிதாய், சுருக்கமாய் ஒருமுறை செய்தாலே குறித்து வேண்டிய காலத்தில் பயன்தரத்தக்கதாய் அமைந்தவழி தஞ்சப்பரகதியொன்றே என்பது அவர்தம் முடிபு. ஒவ்வோர் பிரபந்தத்திலேயும் இவ்வழியினை நேர்முகமாகவோ, மறைமுகமாக நல்லொழுக்கம் பழக்க வழக்கங்களை வலியுறுத்தல் வாயிலாகவோ வற்புறுத்தி, நிலை நாட்டும் பாங்கினைக் காண்கிறேம். இயற்கையான திருச்சின்ன ஒலியிலே திருமந்திரங்கள் மூன்றும் மறைபொருட்களுடன் ஒலிப்பதாக பாவித்துக் கவிதையைத் திருச்சின்ன மாலையாக வழங்குகிறுர். ஆகாரநியமம் என்பது எவர்க்கும் எக்காலத்தும் வேண்டற்பாலதாயினும் அது சரணுகதி வழியில் ஈடுபடுவார்க்கு மிகமிக இன்றியமையாதது. ஏனெனில், சரணடைவோர் எம்பெருமானுக்கு அனுகூலமாகவே யிருப்பேன் என்றும், பிரதிகூலமாக இருக்கமாட்டேன் என்றும் உறுதியுடனேயே அதில் இறங்குகின்றனர். அவ்வெம்பெருமானின் ஆணையாகிய வேதம், ஸ்ம்ருதி முதலியவற்றிலுள்ள விதிகளை மீறுமல் நடத்தலே அவனுக்கு உவப்பளிப்பது ஆதலின், நல்லொழுக்கம், தினசரி செய்ய வேண்டிய கடமைகள் சமயச் சார்புடையனவாயினும், தத்துவத்திற்கு இணைபிரியாத துணையாய் அமைகின்றனவென்பதால்

வைணவ தினசரி, பன்னிரு திருநாமம் போன்ற நூல்களும் இன்றியமையாதனவாகின்றன. ஆகவே தேசிகனுர் பல பல வேதபுராண -ஸ்ம்ருதிகள், ஆழ்வாரின் அருளிச் செயல்களின் அடிப்படையில் பல பல வழிகளை-யோகமார்க்கங்களை நன்கு தம் பிரபந்தங்களில் விளக்கிய போதிலும், பிரபத்தியெனும் தஞ்சப் பரகதிக்கே முதலிடம் தந்து தனியொரு கொள்கையை நிலைநாட்டிய மாபுருடராவார். இதுபற்றியே வைணவர்கள் அன்றுரை வாழித்திருநாமம் என்ற துதிப்பகுதியில் தஞ்சப் பரகதியைத் தந்தளித்தோன் வாழியே எனப் புகழ்வாராயினர். ஆதலின், வேங்கடநாதன் என்ற இயற்பெயரைவிட திருவரங்கநாதன் அருளிய வேதாந்த தேசிகன் (ஆசிரியன்) என்ற விருதையும், ஸர்வதந்த்ர ஸ்வதந்த்ரர் என்ற விருதினையும் தமக்கேயுரியனவாக நிலைநாட்டிக் கொண்டமையை அவர்தம் பிரபந்தங்கள் பறை சாற்றுகின்றன.

*வாழியணி தூப்புல் வரு நிகமாந்தாசிரியன்*
*வாழியவன் பாதார விந்தமலர்*
*வாழியவன் கோதிலாத் தாண் மலரைக் கொண்டாடிக்*
*கொண்டிருக்கும் தீதிலார் நல்லோர் திரள்.*

*தேசிகனுர் தந்துவந்த தெய்வீக நூல்களிலே*
*தேசுமிக்க தத்துவங்கள் தேர்ந்திடுவீர் – மாசுடையீர்*
*சல்லிக் குதவாத சாகசங் களைநுழைத்தால்*
*கல்லிலே முட்டுவதே காண்.*

*பழி மிக்க குப்பையெனப் பல்லோர் பழித்திடவே*
*இழிவாய் எவையோ யியற்றல் – அழிவே யாம்*
*பூர்வாசிரியர் வழி போற்றி யுரைத்திடவே*
*நேர்வாம் அதனை நினை.*

*ஆசிரியர்.*

## அனுபந்தம்
## ஸ்ரீஸ்வாமி தேசிகன் ஜாதகம்

ஸ்வஸ்திஸ்ரீ சுக்ல வருஷம் கலி 4370க்குச் சரியான கி.பி.1268இல் கச்சி நகர் அனந்தாசாரியார் தோதாத்ர்யம்மைக்கு வரத வேங்கட ப்ரஸாதம் ஸ்வப்னத்தில் அருளியபடி-கைரவிணீ தீர்த்த ஸ்நானமும் ஆன பிறகு புரட்டாசி மாதம் 11-ஆம் தேதி ஞாயிற்றுக்கிழமை 11-28க்கு சுக்ல ஏகாதசி 6 நாழிகை 19 விநாடிக்கு திருவோன நக்ஷத்திரத்தில் கன்யா லக்னத்தில் (வேங்கட கண்டாம்ச) அதி மானுஷ புருஷ ப்ரஜை அவதாரம் அல்லது சுப ஜனனம் - தூப்புல் புண்ய பூமி, கச்சி நகர் 11 கடிகைகளும் 28 விகடிகையில் ஜனனம்.

கர்ப்பச்செல்போக சந்திர மஹாதசையில் பாக்கி செல்ல வேண்டியது வரு 0 -ம் 9 - நா 13.

### க்ரஹ பாத சாராவளி

| | |
|---|---|
| சூரியன் ஹஸ்தம் | -1 |
| சந்திரன் திருவோனம் | -4 |
| அங்காரகன் ஸ்வாதி | -4 |
| புதன் ஹஸ்தம் | -4 |
| குரு ஹஸ்தம் | -3 |
| சுக்ரன் உத்திரம் | -1 |
| சனி ஆயில்யம் | -2 |
| ராஹு பூராடம் | -2 |
| கேது திருவாதிரை | -4 |

| | | | |
|---|---|---|---|
| | | | கேது |
| | | | சனி |
| சந் | | | சுக் |
| ராகு | | செவ் | குரு சூர்ய புத |

| | | | |
|---|---|---|---|
| கேது செவ் | சூர்ய | | குரு |
| | | | புத சந் |
| சனி | | | |
| சுக் | | | ராகு |

(ஸ்ரீசைலம் - தாத்தாசார் அநந்தஸரோவர்)
(MSS.Pal.Leaves. Sherfoji's Saraswathi Mahal Library, Tanjore)

இது ஸ்ரீ வேதாந்த தேசிகன் திருவவதார ஜந்ம பத்திரிகை. ஸ்ரீ வைஷ்ணவ ஸித்தாந்தத்தில் ஸ்ரீ பகவத் ராமானுஜருக்குப் பிறகு ஜகதாசார்யராகவும் வடமொழியிலும் சேர்ந்து நூற்றுக்கும் அதிகமான ஸத்க்ரந்தங்களை இயற்றியவராகவும் விளங்கிய ஒரு மஹா புருஷனுடைய ஜாதகம் இது.

ஆகவே இது ஒரு மஹானுடைய ஜாதகம் என்பதை நிரூபிப்பதற்குத் தேவையான க்ரஹபலமும், ஜோதிஷ சாஸ்திர ஆதாரமும் இருக்கின்றனவாம் என்பதைப் பார்ப்போம்.

5க்குடையவனை சனிபகவான் லாபஸ்தானத்தி-லிருப்பதற்குப் பலன்:

ஸுதேசே லாபபவநே பண்டிதோ ஜநவல்லப: ।
க்ரந்த கர்த்தா மஹாதக்ஷோ பஹுபுத்ர தநாத்வித ॥

-பராசரஸம்ஹிதை: 11

5க்குடையவன் நல்லிடத்திலிருந்தால் வித்வானாகவும், ஜனங்களுக்குப் பிடித்தவனாகவும் கிரந்தங்களைச்

செய்பவனுகவும், மிகுந்த சாமர்த்தியமுள்ளவனுகவும், அனேகம் புத்திரர் தனம் இவற்றுடன் கூடியவனுகவும் இருப்பான். ஸ்ரீ தேசிகன் கிரந்த கர்த்தா என்பதும் மஹாதக்ஷ: என்பதால் ஸர்வ தந்த்ரஸ்வதந்த்ரர் என்பதும் நிரூபிக்கப்பட்டன. இவருக்கு ஞான புத்திரர்கள் பலர் என்பதும் உண்மை.

## புத்திசாலி யோகங்கள்

## ஜாதகதத்வம் என்ற நூலில் ஸூத்ரங்கள்:-

1) ஸுதர்க்ஷே சுபே புத்திமாந் ஐந்தாமிடத்தில் சுபனிருந்தால் புத்திமான் (சந்திரன் 5ஆமிடத்திலிருக்கிருன்)
2) குரௌ கேந்த்ர கோனகே புத்திமாந் குரு 1,5,9,4,7,10லிருந்தால் புத்திமான் (குரு 1ல் இருக்கிறுர்)

## வேதாந்தாசார்ய யோகம்

1) கேந்த்ர கோணே ஜீவே வேதாந்தகுரு: -1,4,7,10,5 குரு இருந்தால் வேதாந்தி (1ல் குரு இருக்கிறுர்)
2) ஸ்வோச்சேங்க ஸிதிதேஜ்ஞே, கோசேம்சே பாராவதே, வ்யயே சுக்ரேச வேதாந்தீ புதன் தன் உச்சமான லக்னத்தில் இருந்து 2க்குடையவன் பாராவதாம்சத்திலிருந்து சுக்ரன் 12மிடத்தில் இருந்தால் வேதாந்தீ.

## வைராக்ய யோகம்

தனுதிபதி (2க்குடையவன்) சுக்ரன் வ்யய ஸ்தானத்தில் இருப்பதாலும் தனஸ்தானத்தில் 3,8க்குடையவன் அங்காரகன் இருப்பதாலும் தனத்தில் விரக்தியும், அதி தாரித்ரியமும், பிக்ஷாடனமென்ற உஞ்சவிருத்தியை

ஜீவனமாகக் கொண்டிருத்தலும் ஏற்படும். 2ல் அங்காரக ஸம்பந்தத்தால் வாக்கு வன்மையும் தமிழில் புலமையும் ஏற்படும்.

இவ்வாறு சாஸ்திர வசனங்களை ஆராய்ந்தால் இந்த ஜாதகத்திற்குரிய ஸ்ரீமந்நிகமாந்த மஹா தேசிகன், கவிதார்க்கிக ஸிம்ஹம், விரக்தாக்ரேஸரர், ஜகதாசார்யன் என்பதற்கான பல கோட்பாடுகள் கிடைக்குமென்பதில் ஐயமில்லை.

-நன்றி-

-கிழாத்தூர் ஸ்ரீ நிவாஸாச்சாரியர்

லிப்கோ - அருள்தரும் ஆரண தேசிகன்

(1968)

ஸம்பூர்ணம்

இந்நூலால் ஸ்ரீவேதாந்ததேசிகன் உவந்தருளக:-

ஸ்ரீவைஷ்ணவ பாத தாஸன்

நைத்ருவ மாடபூஷி **நரஸிம்ஹாசார்யன்**

## ஸ்ரீ வைஷ்ணவ குரு பரம்பரை



ஸ்ரீ வைஷ்ணவ குருபரம்பரை (முன்பக்கத் தொடர்ச்சி)



ஸ்ரீ வைஷ்ணவ குருபரம்பரை (முன்பக்கத் தொடர்ச்சி)

வாத்ஸ்ய அனந்தாசார்யர்

|

ஸ்ரீரங்க ராமானுஜஸ்வாமி
(உபநிஷத் பாஷ்யகாரர்)

|

ஸ்ரீரங்கநாதாசார்யர்

|

வீரராகவாசார்யர்

|

ஸ்ரீரங்கநாத மஹாதேசிகன்

|

ஸாக்ஷாத் ஸ்வாமி (வேதாந்த ராமானுஜ மஹாதேசிகன்)
(24 ஆயிரப்படி யருளியவர்)

|

திருக்குடந்தை கோபாலார்ய மஹாதேசிகன்
இவருக்குப்பின் முனித்ரய ஸம்ப்ரதாயஸ்தர் பல
பிரிவுகளாய் அமைந்துள்ளனர்.



# ஸ்ரீவண்சடகோப ஸ்ரீவேதாந்ததேசிக யதீந்த்ர மஹாதேசிகன் மங்களம்

மங்களம் ஸ்ரீந்ருஸிம்ஹாய ச்ரியை ஸ்ரீமச்சடாரயே |
நாதாய முநயே ஸ்ரீமத்பாஷ்யகாராய மங்க ளம் ||

த்ரையந்த குரவே ஸ்ரீமதாதிவண்சடமாதிநே |
மடாஸ்தாநேऽபிஷிக்தேப்யோ யதீந்த்ரேப்யோஸ்து மங்களம் ||

திவ்யே ஸத்யவ்ரதக்ஷேத்ரே காஞ்சீ நகரபார்ச்வத: |
ஸ்ரீமத்பாஹுநதீநீரவிவர்த்திதஜலாசயே ||

ரஹஸ்யத்ரயஸாராதி விபுதாவாஸசோபிதே |
ஸ்ரீமந்முக்கூரக்ரஹாரே திஷ்ட்யா ஜாதாய மங்களம் ||

யத்பிதா ரங்கநாதார்ய: மாதா ஸ்ரீரங்கநாயிகா |
தயோ: ஸுக்ருதஜாதாய ஸர்வஹ்ருத்யாய மங்களம் ||

மந்மதாப்தே ஸிம்ஹ மாஸே சுபயோகயுதே திநே |
ஹஸ்தே வரதநக்ஷத்ரே ஹ்ருத்யே ஜாதாய மங்களம் ||

பாரத்வாஜகுலே ஸ்ரீமத்வேதாத்யயநசாவிநாம் |
வம்சே ஜாதாய சுத்தாநாம் குலதீபாய மங்களம் ||

யதாகாலோபநீதாய வேதாத்யயநசாலிநே |
க்ருஹீத ஸர்வசாஸ்த்ராய மஹாதீராய மங்களம் ||

பித்ரோரநுஜ்ஞயா ஸத்யோ க்ருஹஸ்தாச்ரமசோபிநே |
ஸத்புத்ராதிஸம்ருத்தாய ஹ்ருஷ்டசித்தாய மங்களம் ||

ஸ்ரீரங்கநாதசடஜித்யதீந்த்ரக்ருபயா க்ருதாத் |
மடேऽஸ்மிந் பஞ்சஸம்ஸ்காராத் விசுத்தாயாஸ்து மங்களம் ||

க்ஷேத்ரே ஸ்ரீசம்பகாரண்யே குரூத்தமஸகாசத: |
க்ருஹீதோபயவேதாந்ததத்வஸாராய மங்களம் ||

லக்ஷ்மீந்ருஸிம்ஹசடஜித் உக்த்யநூக்த்யா யதாக்ரமம் |
லக்ஷ்மீந்ருஸிம்ஹபாதாப்ஜே ந்யஸ்தபாராய மங்களம் ||

ஸ்ரீரங்கவீரரகுராட்சடகோபயதீச்வரை: |
மடாஸ்தாநேऽபிஷிக்தாய யதிவர்யாய மங்களம் ||

லக்ஷ்மீந்ருஸிம்ஹகைங்கர்யஹ்ருஷ்டசித்தாய யோகிநே |
பஞ்சஸம்ஸ்காரகர்த்ரே ஸ்ரீயதிவர்யாய மங்களம் ||

யதார்ஹம் ஆத்மநிக்ஷேபம் காரயித்ரே சகாரிணே |
சிஷ்யாணும் அநுரக்தாய யதிவர்யாய மங்களம் ||

திவ்யதேசேஷு ஸர்வேஷு க்ருத்வா ஸஞ்சாரமுத்தமம் |
ப்ரீதலக்ஷ்மீந்ருஸிம்ஹாய யதிவர்யாய மங்களம் ||

ந்ருஸிம்ஹ பத்ரிகாம் ப்ரேஷ்டாம் பாடசாலாம் ஸபாம் சுபாம் |
யதாபூர்வம் பரித்ராத்ரே யதிவர்யாய மங்களம் ||

அஹோபில மடம் ஸ்ரீமத்கோபுரம் ச மநோஹரம் |
நிர்மாய மோதமாநாய யதிவர்யாய மங்களம் ||

வீக்ஷாரண்யே தடாகம் து தீர்த்தபூர்ணம் மநோஹரம் |
ஹ்ருத்தாபநாசிநீநாம்னீம் க்ருத்வா ஹ்ருஷ்டாய மங்களம் ||

ஸதா வித்வத்ஸமேதாய த்பி: வாக்யார்த்தசாலிநே |
ஸதாநுக்ரஹவாக்யாய யதிவர்யாய மங்களம் ||

ஸ்ரீரங்கராஜ திவ்யாஜ்ஞா ப்ராப்தகோபுரகாரிணே |
தர்மசித்தை: ஸமேதாய யதிவர்யாய மங்களம் ||

கர்ணம் மேகம் பலிஞ்சைவ பரத்வாஜம்ச கல்பம் |
தாநாத் ஜிதவதே தஸ்மை மஹோதாராய மங்களம் ||

ஸித்தாந்தஸ்தாபகாந் க்ரந்தாந் பஹூந்யோऽரசயத்ஸுதீ: |
க்ருபயா பரயா தஸ்மை குசலாயாஸ்து மங்களம் ||

யஸ்ய வாணீ ஸுமதுரா ஸுப்ரஸந்நாऽர்த்தகர்பிதா |
ஸுபோதகாய தஸ்மை ஸ்யாத் குருவர்யாய மங்களம் ||

யஸ்ய லேக: ஸுமதுர: விதவித்சித்தரஞ்ஜக: |
ஸுலேககாய தஸ்மை ஸ்யாத் நித்யஸ்ரீ: நித்யமங்களம் ||

யஸ்ய ப்ரஸாதகலயா மயா ப்ராப்த பதோந்நதி: |
தஸ்மை மே சக்ஷுஷே பூயாந்நித்ய ஸ்ரீர்நித்யமங்களம் ||

ரங்கிகோபுரஸம்பூர்த்யை ஸ்ரீரங்கே யோ யதீச்வர: |
விராஜதே மோதமாநஸ் தஸ்மை பவது மங்களம் ||

இத்தம் ஸ்ரீவேதசூடார்யயதிவர்யஸ்ய மங்களம் |
ய: ஸ்மரேத் ப்ரத்யஹம் ப்ரீத்யா ஸர்வமங்களம் அச்நுதே ||

வேதசூடார்யயதிராட்க்ருபயா ஸ்ரீரமாஹரௌ |
உக்திநிஷ்டாவிதாநேந ஸ்வாத்மநிக்ஷேபகாரிணு ||

ந்ருஸிம்ஹராகவார்யேண மடாஸ்தாநவிபச்சிதா |
க்ருதமேதத் படேத் யஸ்து தஸ்ய ஸ்யாந்நித்யமங்களம் ||

**திருக்கள்ளம் வித்வான் ஸ்ரீ ந்ருஸிம்ஹராகவாசார்யர்**
ஸ்வாமி அவர்கள் எழுதி ஸமர்ப்பித்தது.

# ஸ்ரீ தசாவதார மங்களம்

க்ரஹ தோஷ நிவர்த்தகம்

ஸஹஸ்ர சந்த்ர ப்ரதிமோ தயாளு: லக்ஷ்மீ ஸமாலோகன லோலநேத்ர:|
தசாவதாரை: பரீத! பரீத: ந்ருகேஸரீ மங்கள மாதநோது ||

மந்த்ர மஹோததி

தசாவதார யுதயோ: ஸர்வேசாபீஷ்ட தாயினே: |
ஸ்ரீநாராயண மாலோல ஸ்ரீ மூர்த்யோரஸ்து மங்களம் ||

தசாவதார விபவை: லோகக்ஷேமம் விதன்வதே |
ஸ்ரீரங்கேசாய தேவாய நித்யஸ்ரீ: நித்ய மங்களம் ||

தசாவதாரங்கள்

1 பயோதிதோயே மத்ஸ்யாய நஷ்டச்ருதி விமார்கிணே |
புருஷாய புராணாய தேவதேவாய மங்களம் ||

2 ஸுராஸுரை: ஸுதாவாப்த்யை க்ஷீரஸாகர மந்தநே |
கராம்போஜை: மந்தராத்ரிவாஹி கூர்மாய மங்களம் ||

3 பயோதிகதபூரக்ஷாம் வராஹோऽக்ருத தம்ஷ்ட்ரயா |
நாஸிகோத்த மஹாகோஷமாயினேऽஸ்மை ஸுமங்களம் |

4 ஹிரண்யகசிபோ: கேஹேஸ்தூணேத்பூத நகாயுத: |
அவதீத் தம்ரிபும் ஸாயம் தந் ந்ருஸிம்ஹாய மங்களம் ||

5 வ்ரீடா வித்த வதாந்யஸ்ய தானவேந்த்ரமஹாபலே: |
தந்நாஸீர படாயஸ்ரீ வாமநாயாஸ்து மங்களம் ||

6 பித்ருபீடா பரீஹாரே க்ஷிதிக்ஷத்ரிய நாசிநே |
தக்ஷிணதோ மஹீதாத்ரே க்ருத்த ராமாய மங்களம் ||

7 ப்ரபந்ந ரக்ஷா ஸங்கல்பஸத்யதர்மவ்ரதாயச |
ஜாநகீநாத ராமாய தாநவக்நாய மங்களம் ||

8 ப்ரலம்பாதீன் பராஜித்ய க்ருஷ்ணலீலா விஹாரிணே |
ரேவதீரமணாயாஸ்மை பலராமாய மங்களம் ||

9 கோபீசக்ஷுச்சாதகாய யசோதா தேவகீமுதே |
நாநா லீலா விநோதாய க்ருஷ்ணாயாஸ்து ஸுமங்களம் ||

10 பவாம்போதிம் தாரயிஷ்ணு: கல்கீ விஷ்ணு யசஸ்ஸுத: |
கலிகாலுஷ்யசமனே பாவீ தஸ்மை ஸுமங்களம் ||

மங்களாசாசனேத்யுக்த பூர்வேஷாம் யோகிநாமபி
அஹோபில மடாத்யக்ஷ யோகிநாம் நித்ய மங்களம் |

ஸ்வர்கநாத புரோத்பூத ந்ருஸிஹார்ய ஸமர்ப்பிதம்
மங்களம் ய: ஸ்மரேத் நித்யம் க்ரஹ தோஷை: ஸமுச்யதே ||

சுபம்